

# கொங்கு மண்டல வரலாறுகள்


பதிப்பாசிரியர்

**முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**
எம்.ஏ., எம்.ஏ., பி,எட்., டிப்.வ.மொ., பிஎச்.டி..
காப்பாட்சியர்
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சேப்பாக்கம், சென்னை - 5

பொதுப்பதிப்பாசிரியர்

**திரு. நடன. காசிநாதன்**, எம்.ஏ.,
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
தரமணி, சென்னை – 113





அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

*1997*

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீடு எண் : 419
தமிழ் நூல் வெளியீடு எண் : 115



# கொங்கு மண்டல வரலாறுகள்

பதிப்பாசிரியர்

**முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**
எம்.ஏ., எம்.ஏ., பி,எட்., டிப்.வ.மொ., பிஎச்.டி..
காப்பாட்சியர்
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சேப்பாக்கம், சென்னை - 5

பொதுப்பதிப்பாசிரியர்

**திரு. நடன. காசிநாதன்,** எம்.ஏ.,
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
தரமணி, சென்னை – 113



1997

முதற் பதிப்பு 1997
பிரதிகள் 500

கொங்கு மண்டல வரலாறுகள்



பதிப்பாசிரியர் :
முனைவர் சு. சௌந்தரபாண்டியன்
காப்பாட்சியர்
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சென்னை-5

பொதுப் பதிப்பாசிரியர் :
திரு. நடன. காசிநாதன்,
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை

வெளியீடு :
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சென்னை-5

விலை : ரூ.

அச்சிட்டோர் :
தொல்பொருள் ஆய்வுத்துறை
தரமணி
சென்னை-113

Government Oriental Manuscripts Library Publication No. : 419
Tamil Book Publication No. : 115




# KONGU MANDALA VARALARUGAL

*Editor*
**Dr. S. SOUNDARAPANDIAN**
M.A., M.A., B.Ed., Dip. Skt., Ph.D.,
Curator
Government Oriental Manuscripts Library
Chepauk, Chennai-5

*General Editor*
**NATANA. KASINATHAN,** M.A.,
Director
Department of Archaeology
Tharamani, Chennai-113



First Edition 1997
No. of Copies : 500

KONGU MANDALA VARALARUGAL



Editor :
DR. S. SOUNDARAPANDIAN
Curator
Government Oriental Manuscripts Library
Chennai - 5

General Editor :
THIRU. NATANA. KASINATHAN
Director
Department of Archaeology

Price : Rs.

Published by :
Government Oriental Manuscripts Library
Chennai - 5

Printed at :
Department of Archaeology
Tharamani, Chennai - 113

## கொங்கு மண்டல வரலாறுகள்

# பதிப்புரை

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் பாதுகாக்கப் பெற்று வரும் சுவடிகளில் காலின் மெக்கன்சி (1754-1821) தொகுத்த வரலாற்றுச் சுவடிகள் குறிப்பிடத்தக்கவை. இந்நூலில் உள்ள சுவடிகள் யாவையும் மெக்கன்சியின் தொகுப்பினைச் சேர்ந்தவையே. இங்கு மெக்கன்சியின் சுவடிகளில் கொங்கு மண்டலம் தொடர்பான சுவடிகள் மட்டும் பதிப்பிக்கப்பெற்றுள. இத்தொகுப்பில் சேராத கொங்குமண்டலம் தொடர்பான வேறுசில சுவடிகளும் நூலகத்தில் உள்ளன.

கல்வெட்டுகளைப் பதிப்பிப்பது போன்றே, மூலச்சுவடியில் எந்தத் திருத்தமும் செய்யாது அப்படியே இங்கு பதிப்பிக்கப் பெற்றுள.

கொங்குமண்டலம் தொடர்பாக, அ.கீ.சு. நூலகத்தில் **கொங்கதேசஇராசாக்கள்** (1950) என்ற நூல் வெளியிடப்பட்டுள்ளது. **பேரூர்கோவை** (1955) என்ற நூலும் அ.கீ.சு. நூலக வெளியீடே.

பேரூர்க் கைபீது (டி. 2962), பவானிக்கூடல் கைபீது (டி. 2956) அவினாசி தாலுகா கைபீது (டி. 3454) ஆகிய சுவடிகள் ஏற்கனவே நூலக வெளியீடான **தமிழக ஊர் வரலாறுகள்** (1995) எனும் நூலில் அச்சாகியுள்ளதால், இத்தொகுப்பில் சேர்க்கப்படவில்லை.

**காங்கேய ஸ்தல கைபீது** என்றொரு சுவடி தெலுங்கில் இந்நூலகத்தில் உள்ளது. தெலுங்கில், 'தர்மபுரி ஜில்லா தொப்பூரு சிவாசானமு' (8 பக்கங்கள்) என்றொரு சுவடியும் அ.கீ.சு. நூலகத்தில் உளது.

கொங்கு மண்டலம், சேரமண்டலத்திற்குள் அடங்கியதே.

சேரமண்டலம் எது?

கிழக்கே தென்காசி, மேற்கே கோழிக்கோடு, தெற்கே கடல், வடக்கே பழனி என்ற இந்நான்கு எல்லைகளுக்கு உட்பட்டதே சேரமண்டலம் என்கிறது ஒரு தனிப்பாடல்.

கோவை, பெரியார், சேலம், நீலகிரி மாவட்டங்களும், கேரள மாநிலமும் சேர்ந்ததே சேரமண்டலம்.

குடநாடு, குட்டநாடு, கற்காநாடு, பூழிநாடு ஆகியன சேர மண்டலத்தைச் சேர்ந்தவையே

**கொங்கு மண்டலம் எது?**

தற்போதைய மாவட்டப்பிரிவுகளின்படி கோவை மாவட்டம் முழுவதும், பெரியார் மாவட்டம் முழுவதும், தருமபுரி மாவட்டத்தில் சில பகுதிகள், சேலம் மாவட்டத்தில் ஓமலூர் திருச்செங்கோடு, சேலம், நாமக்கல் தாலுகாக்கள் மட்டும், கரூர் தீரன் சின்னமலை மாவட்டத்தில் கரூர், குளித்தலை தாலுகாக்கள் மட்டும், திண்டுக்கல் மன்னர் திருமலை மாவட்டத்தில் பழனி, திண்டுக்கல் தாலுகாக்கள் மட்டும் ஆகிய இப்பகுதிகள் கொண்ட நிலமே கொங்குமண்டலம் ஆகும்.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு முன், கர்நாடகா மாநிலத்தின் தென்பகுதிகள் (துவார சமுத்திரப்பகுதி) கொங்கு மண்டலத்தைச் சேர்ந்ததாகவே இருந்தது என மயிலை சீனி. வேங்கடசாமி எழுதியுள்ளார்.

இனி, கொங்கு மண்டல எல்லைகள் எனச் சில பாடல்கள் கூறுவனவற்றையும் நோக்கலாம்.

## தனிப்பாடல்

வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்கு
குடக்குவெள் ளிப்பொருப்புக் குன்று — கிழக்கு
கழித்தண் டலைசூழும் காவிரிசூழ் நாடா
குழித்தண் டலையளவே கொங்கு

## தனிப்பாடல்

வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு
குடக்குப் பொருப்புவெளிக் குன்று — கிடக்கும்
களித்தண் டலைமேவு காவிரிசூழ் நாட்டுக்
குளித்தண் டலையளவு கொங்கு

## கொங்குமண்டல சதகப் பாடல்

மதிற்கரை கீட்டிசை தெற்குப்பழனி மதிகுடக்குக்
கதித்துள வெள்ளிமலை பெரும்பாலை கவின்வடக்கு
விதித்துள்ள நான்கெல்லை சூழவளமுற்றும் மேவி
விண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு நீன்கொங்கு மண்டலமே!

## தனிப்பாடல்

வடக்குப் பெரும்பாலை வையாறு தெற்கு
குடக்குப் பொருப்புவெள்ளிக் குன்று — தடக்கீழ்
கழித்தண் டலையளவு காவிரிசூழ் நாடா
குழித்தண் டலையளவு கொங்கு

அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகச் சுவடி (டி. 3036)யில் காணும் உரைநடை :-

"வடபுறம் மறம் சோகரமலை
மதுகரைக்கு மேற்கு
வறாக கிறிக்கு வடக்கு
வெள்ளி மலைக்கு கிழக்கு
இந்தச் சதுரம் கொங்கு நாட்டு எல்லை"

கொங்குமண்டல சதகத்தைப் போவே, சுவடியும் கிழக்கெல்லை யாக மதுகரையைக் குறிக்கிறது. மதுகரை என்பது மதுக்கரை யாகும்; மதிற்கரை எனவும் படும். இவ்வூர், திருச்சி மாவட்டத்துக் குளித்தலைக்கு மேற்கே காவிரிக்கரையில் உளது.

மேற்பாடலில் குறிக்கப்படும் **தலைமலை** கோவை மாவட்டத்துக் கோபிசெட்டி பாளையம் தாலுக்காவில் உள்ள ஊர்.

**பெரும்பாலை** என்பது, சேலம் மாவட்டத்துத் தொப்பூர் மலைகளுக்கு அருகே உள்ள ஊர்.

நான்கு மலைகளைக் கொங்கு மண்டலத்தின் நான்கு எல்லைகளாகக் கூறும் ஒரு பழைய வெண்பா; அதன்படி, வடக்கே தலைமலை, தெற்கே வராகமலை, கிழக்கே கொல்லிமலை, மேற்கே வெள்ளிமலை கொங்குமண்டல எல்லைகள். இவ்வாறு கூறுவது, பழங்கால இயற்கை வாழ்வு முறைக்கு ஏற்றவாறு உள்ளது.

**தலைமலை** என்றால், அதைச் சேர்ந்த பிளிகிரிரங்கன் மலை, மாதேசுரன் மலை, தொப்பூர் மலை முதலியவற்றையும் கொள்ளலாம்.

**வெள்ளிமலை** என்றால், மேற்குத் தொடர்ச்சி மலை (Western Ghats), மற்றும் அதிற்சேர்ந்த நீலகிரிமலைகளைக் குறிக்கும். வள்ளிமலையே, வெள்ளியங்கிரி என்று கூறப்படும்.

**கொல்லிமலை** என்றால், அதைச் சேர்ந்த பச்சைமலை, சேர்வராயன் மலை (மூன்றும் சேலம் மாவட்டம்) ஆகியவற்றையும், சேர்த்துக் கருதலாம்.

**வராகமலை** என்பது பழனிமலையே.

கொங்குமண்டலத்தில் மொத்தம் **24 நாடுகள்** இருந்தன என்கிறது **கொங்குமண்டல சதகம்.**

கொங்குமண்டலத்தின் 24 நாடுகளும், அவற்றின் உட்பிரிவுகளும், அவற்றின் தற்போதைய இருப்பிடமும், **சி. எம். இராமச்சந்திரஞ்செட்டியார்** ஆய்வுப்படி, கீழே தரப்பட்டுள:-

| கொங்குமண்டல நாடுகள் | தற்போதைய இருப்பிடம் |
|---|---|
| 1. ஆறை நாடு | 1. ஆறைநாடு = கோயமுத்தூர்த் தாலுகா, அவினாசித் தாலுகா, பல்லடம் தாலுகாவில் வட மேற்குப் பகுதி ஆகியன. |
| (அ) கோவங்க நாடு | (அ) கோவங்க நாடு = கோவை நகரும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும் |
| (ஆ) மன்னி நாடு | (ஆ) மன்னிநாடு = அண்ணூரும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும் |
| (இ) கவைய நாடு | (இ) கவைய நாடு = கோவில் பாளையமும் அதைச் சுற்றி யுள்ள பகுதிகளும் |
| (ஈ) செம்பை நாடு | |
| (உ) தணக்கு நாடு | |
| (ஊ) பழன நாடு | (ஊ) பழன நாடு = பெருமா நல்லூரும் அதைச் சுற்றிய பகுதிகளும் |
| 2. ஒடுவங்க நாடு | 2. ஒடுவங்க நாடு = கோபிச் செட்டிபாளையம் தாலுகாவின் வடக்கில் பவானி நதிக்கரையில் உள்ள பகுதி |
| (அ) டணாயகன் கோட்டை நாடு | (அ) டணாயகன் கோட்டை நாடு = மேற்படி தாலுகாவின் மேற்குப் பகுதியும், அவிநாசித் தாலுகா வின் வடகிழக்குப் பகுதியும். |
| (ஆ) படிநாடு | (ஆ) படிநாடு = கொள்ளே காலம் தாலுகா |

| | |
|---|---|
| 3. வாரக்க நாடு | = பல்லடம் தாலுகாவின் மேற்குப் பகுதியும், பொள் ளாச்சித்தாலுகாவின் வட கிழக்குப் பகுதியும் |
| 4. பொன்கலூர் நாடு | = பல்லடம் தாலுகாவின் கிழக்குப் பகுதி |
| (அ) தென் பொன்கலூர் நாடு | = தாராபுரம் தாலுகாவின் தென் பகுதி |
| 5. காங்கேயநாடு | = தாராபுரம் தாலுகாவின் வடக்குப் பகுதியாகிய காங் கேயம், வெள்ளக்கோயில் வட்டாரங்கள் |
| 6. குறும்பு நாடு | = ஈரோடு தாலுகாவின் மேற்குப் பகுதி |
| 7. காஞ்சிக் கோயில் நாடு | = கோபி, பவானி, ஈரோடு தாலுகாக்கள் சந்திக்கும் பகுதி |
| 8. வடகரை நாடு | = பவானித் தாலுகாவில் உள்ள மலைத் தொடர் களுக்குத் தெற்கே உள்ள சமநிலப் பகுதி |
| 9. பூந்துறை நாடு | |
| (அ) மேல்கரை பூந்துறை நாடு | (அ) = ஈரோடுத் தாலுகாவின் வட கிழக்குப் பகுதி |
| (ஆ) கீழ்கரை பூந்துறைநாடு | (ஆ) = திருச்செங்கோடுத் தாலுகா |
| (இ) பருத்திப் பள்ளி நாடு | (இ) = சேலம் தாலுகாவில் ஒரு பகுதி |
| (ஈ) ஏமூர் நாடு | (ஈ) = நாமக்கல் தாலுகாவின் வடகிழக்குப் பகுதி |

10. அரய நாடு

(அ) மேல்கரை அரையநாடு (அ) ஈரோடு தாலுகாவின் தென் கிழக்குப்பகுதி

(ஆ) கீழ்கரை அரையநாடு (ஆ) நாமக்கல் தாலுகாவின் மேற்குப்பகுதி

11. தென்கரை நாடு = தாராபுரம் தாலுகாவின் தெற்குப்பகுதி

12. மண நாடு = கரூர்த் தாலுகாவின் தென்மேற்குப்பகுதி

13. வெங்காலநாடு = கரூர்த் தாலுகாவின் கிழக்குப்பகுதி

(அ) இடைப்பிச்ச நாடு

14. தட்டய நாடு = குளித்தலைத் தாலுகாவின் வடமேற்குப்பகுதி

15. கிழங்குநாடு = கரூர்த் தாலுகாவில் குளித் தலை ஓரமாகக் காவிரியின் தென்கரை

16. தலையநாடு = கரூரின் தெற்குப்பகுதி

17. அண்டநாடு = பழனித் தாலுகாவின் தெற்குப் பகுதி

18. வையாபுரிநாடு = பழனிதாலுகாவின் மேற்குப் பாகமும், உடுமலைப் பேட்டைத் தாலுகாவைச் சேர்ந்த ஆம்ராவதிக் கரையும்

19. நல்லுருக்கா நாடு = உடுமலைப்பேட்டைத் தாலுகாவின் மேற்குப் பகுதி

20. காவடிக்க நாடு = பொள்ளாச்சித் தாலுகாவின் மேற்குப் பகுதி

21. ஆனைமலை நாடு = பொள்ளாச்சித் தாலுகாவின் தென் மேற்குப் பகுதி

22. பூவாணிய நாடு — பூவாணிய நாடு = ஓமலூர், தர்மபுரி ஆகிய தாலுகாக்கள்

(அ) நங்கமல்லி நாடு
(ஆ) பக்க நாடு
(இ) பெரும்பாலைய நாடு

23. வாழவந்தி நாடு — வாழவந்திநாடு = நாமக்கல் தாலுகாவின் வடபகுதி

(அ) தூசூர் நாடு
(ஆ) விமலய நாடு

24. இராசிபுர நாடு — இராசிபுர நாடு = சேலம், இராசிபுரம் தாலுகாக்கள்

(அ) கொல்லிமலையில் 14 நாடுகள்
(ஆ) சேல நாடு — (ஆ) சேலநாடு = சேலம் தாலுகா
(இ) சேர்வராயன் மலை நாடுகள்

கீழ்வரும் புராணங்கள் கொங்குமண்டல வரலாற்றுக்குத் துணை செய்கின்றன:

1. பேரூர்ப் புராணம்
2. அவிநாசிப் புராணம்
3. திருமுருகன் பூண்டிப் புராணம்
4. கரூர்ப் புராணம்
5. கொடுமுடிப் புராணம்
6. பவானிப் புராணம்
7. திருச்செங்கோட்டுப் புராணம்

இவை யாவும் அச்சில் வெளிவந்துள.

பொதுவாக, கொங்கு மண்டலத்தில் கற்கால மனிதன் வாழ்ந்ததற்கான சான்றுகள் கிட்டியுள. பிந்திய கற்கால மனிதனின் ஆயுதங்கள், சேர்வராயன் மலை, கல்ராயன் மலை, கொல்லி மலைகளில் கிட்டியுள்ளன.

எனவே, மனித வாழ்வுக்கு ஏற்ற வகையில் இம்மண்டலம் திகழ்ந்துள்ளது என்பது பெறப்படுகிறது.

தோதவர், கோத்தர், குறும்பர், படுகர், முதுவர், காடர், மலசர், புலையர் ஆகிய மலை வகுப்பார் (Tribes) கொங்கு மண்டலத்திற்கே உரியவர்கள்; இன்றும் இவ்வினத்தார் கொங்கு மண்டலத்தில் ஆங்காங்கே வாழ்கின்றனர்.

கொங்குமண்டலத்திலுள்ள சில ஆறுகளை வருமாறு குறிக்கலாம்.

1. காவிரி ஆறு
2. பவானி ஆறு
3. நொய்யல் ஆறு
4. அமராவதி ஆறு
5. மணிமுத்தா நதி
6. சிறுவாணி ஆறு
7. பாய்கரை ஆறு
8. கல்லாறு
9. குன்னூராறு
10. மாயாறு
11. காஞ்சி நதி
12. நீலிப்பள்ளம்
13. வண்ணாறு
14. நள்ளாறு
15. குதிரையாறு
16. சண்முக நதி
17. குழகனாறு
18. உப்பாறு

இப்பட்டியலால், கொங்குமண்டலத்தின் செழுமை புலப்படும்.

கொங்குமண்டலத்தைப் பல வமிசத்தவர்கள் ஆண்டுள்ளனர். கால முறைப்படி அவர்களை வருமாறு எழுதலாம்.

1. நாகர்
2. கோசர்
3. ரட்டர்
4. கங்கர்
5. பல்லவர்
6. இராட்டிரகூடர்
7. சேரர்
8. சோழர்
9. பாண்டியர்
10. ஹொய்சளர் (1200-1335)
11. விஜயநகர ஆட்சி (1350-1600)
12. முகம்மதியர்
13. ஆங்கிலேயர்

மேல் வமிசங்களில், கங்கவமிசம் என்பது, தமிழ் வமிசமே என்பர்; கொங்கனிவர்மன் இவ்வமிச முதல் அரசன்.

விக்கிரமசோழன் (1004-1045), இராஜகேசரி குலோத்துங்கன் (1148-1183), மூன்றாம் விக்கிரமசோழன் (1273-1303) எனச் சில சில கொங்குச் சோழர்கள் கொங்கு நாட்டை ஆண்டுளர்.

யது குலத்துக் ஹோய்சளர்களில் முதல் அரசன் வினயாதித்தியன் (1069 கி.பி.); கி.பி. 1283-ஆம் ஆண்டோடு ஹோய்சள வமிசம் முடிவுற்றது என்பர்.

யது குலத்து ஹரிஹர வமிசம் இதன்பின் வருகிறது.

இதன்பின், விஜயநகரத் துளுவ வமிசம் ஆண்டது; நரசிங்க ராயன் முதல் அரசன்; கிருஷ்ணதேவராயர் (1494 கி.பி.) இந்த வமிசமே.

கி. பி. 1584இல் கொங்குநாட்டை மைசூர் அரச வமிசம் ஆண்டது.

கி.மு. 2-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 2-ஆம் நூற்றாண்டு வரையான கொங்கர்கள், வேளிர்கள் என்போர் சங்க காலத்தே கொங்கு அரசர்களாக இருந்துளர். எட்டுத் தொகை நூற்களில் கொங்கர்கள் குறிக்கப்படுகின்றனர்.

விச்சிநாடு (புறம் 200: 1-2)
வையாவிநாடு (பதிற்றுப்பத்து 4-ஆம் பத்துப்பதிகம்)
புன்னாடு (அகம் 396)
தோட்டி (புறம் 150: 25-28)
காமூர் (அகம் 365: 12)

ஆகிய கொங்குமண்டல ஊர்ப்பகுதிகள் சங்க இலக்கியத்தே பேசப் படுகின்றன. வைகாவூர் நாட்டு ஐவர்மலையே, அயிரை மலை என்ப.

கோவை மாவட்டத்து, தாராபுரம் வட்டத்திலுள்ள பழைய கோட்டை எனப்படும் ஆனூர் என்ற ஊரே, பழைய ஆமூர் என்ப.

கொங்குமண்டலத்தைச் சேர்ந்த சங்க கால அரசர்கள்:-

1. அதியமான் (புறம் 100)
2. ஓரி (புறம் 153: 2-5)
3. கழுவுள் (அகம் 135: 11-33)
4. குமணன் (புறம் 163: 8-9)
5. விச்சிக்கோ (குறுந் 326: 5-8)
6. கட்டி (குறுந் 11: 5-7)
7. பிட்டங்கொற்றன் (புறம் 172 : 8-11)
8. நள்ளி (புறம் 151 : 1-7)
9. கோசர் (சிலப்பதிகார உரைபெறு கட்டுரை)
10. பல்யானைச் செய்கெழுகுட்டுவன் (பதிற், 3-ஆம் பத்துப் பதிகம்
11. அந்துவஞ்சேரல் இரும்பொறை (பதிற். 7-ஆம் பத்துப் பதிகம்)

12. மாந்தரஞ்சேரல் (செல்வக்கருங்கோ வாழியாதான்) (அகம் 142)
13. பெருஞ்சேரல் இரும்பொறை (பதிற் 8-ஆம் பத்து 1 : 12–18)
14. குட்டுவன் இரும்பொறை (பதிற். பதிகம்)
15. இளஞ்சேரல் இரும்பொறை (பதிற். 9-ஆம் பத்துப் பதிகம்)
16. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை (புறம் 22 : 29)
17. கணைக்கால் இரும்பொறை (நற் 18 : 2-5)

கொங்குமண்டலத்தைச் சேர்ந்த சங்கப்புலவர்கள், மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களின் ஆய்வுப்படி, கீழே தரப்படுகின்றனர் :

1. நாகையார் (அகம் 352)
2. விண்ணத்தனார் (அகம் 301)
3. அரிசில்கிழார் (குறுந் 193)
4. இளங்கண்ணனார் (அகம் 264)
5. ஔவையார் (புறம் 206)
6. கண்ணம்பாளனார் (அகம் 180)
7. கதப்பிள்ளைச் சாத்தனார் (நற் 343)
8. கலிங்கத்தார் (அகம் 183)
9. கருவூர் கிழார் (குறு 170)
10. கோசனார் (நற் 214)
11. சேரமான் சாத்தன் (குறு 268)
12. நன்மார்பனார் (அகம் 277)
13. பவுத்திரனார் (குறு 162)
14 பூதஞ்சேந்தனார் (அகம் 50)
15. பூதனாதனார் (புறம் 219)
16. கொல்லிக்கண்ணனார் (குறு 34)
17. கணைக்காலிரும் பொறை (புறம் 74)
18. பாலைபாடிய பெருங்கடுங்கோ (பாலைக்கலி)

19. பெருந்தலைச் சாத்தனார் (அகம் 13)
20. மருதம்பாடிய இளங்கடுங்கோ (நற் 50)

கி.பி. 1-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த உரோமக் காசுகள் வெள்ளலூரில் கிடைத்துள. கோவைக்குத் தென்கிழக்கே 5 மைல் தூரத்தில் உள்ளது வெள்ளலூர். இக்காசுகள் 1842-இல் கண்டறியப் பெற்றவை. உரோமச் சக்கரவர்த்திகளான அகஸ்தஸ், தைபீரியர், கிளாடியஸ் ஆகியோர் உருவங்கள் நாணயங்களில் உள. இதனால் கி. பி. 1-ஆம் நூற்றாண்டை ஒட்டிய காலகட்டத்தில் கொங்குமண்டலத்திற்கும் உரோமர்களுக்கும் வணிகத் தொடர்பு இருந்தமை புலனாகலாம்.

புகழூர்க் குகையில் கற்படுகைகளும், பிராமிக் கல்வெட்டுகளும் கண்டறியப்பட்டுள. புகழூர், திருச்சி மாவட்டத்துக் கரூர் வட்டத்தில் உளது. கி. பி. 1-ஆம் நூற்றாண்டை ஒட்டிய சான்றுகளே இவை எனலாம்.

கி. பி 2-ஆம் நூற்றாண்டளவில், **இளங்கோசர்** என்பார் கொங்குமண்டலத்தை ஆண்டுளர்.

கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த **திருநாவுகரசர்** திருப் பாண்டிக் கொடுமுடியைப் பாடியுள்ளார். இதுவே கொடிமுடி எனப்படுகிறது.

இதே காலத்தில் வாழ்ந்த **சம்பந்தர்**,

1. திருநணா
2. திருக்கொடிமாடச் செங்குன்றூர்
3. திருக்கருவூரானிலை

ஆகிய கொங்குமண்டலத்துத் தலங்களைப் பாடியுள்ளார்.

இவற்றில், திருநணா என்பது பவானி ஆகும்; ஈரோடு புகை வண்டி நிலையத்திலிருந்து வடக்கே 14½ கி.மீ. தொலைவில் உள்ளது பவானி. திருக்கொடிமாடச் செங்குன்றூர், திருச்செங்கோடு ஆகும்; இவ்வூர் சங்கரி துர்க்கம் புகைவண்டி நிலையத்திலிருந்து 10 கி.மீ. தூரத்தில் உளது.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த **சுந்தரமூர்த்திநாயனார்**,

1. திருமுருகன் பூண்டி
2. திருப்புக்கொளியூர்
3. அவிநாசி
4. திருவெஞ்சமாக்கூடல்

ஆகிய தலங்கள் பற்றிப் பாடியுள்ளார்.

வெஞ்சமாக்கூடல் என்பது கருவூர்ப் புகைவண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கே 24 கி.மீ தூரத்தில் உளது. திருமுருகன் பூண்டி, திருப்பூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே 8 கி.மீ. தூரத்திலுளது.

சுந்தரமூர்த்திநாயனார், ''கொங்கில் குறும்பில் குரக்குத் தளியாய்'' என்று பாடினார். கொங்குமண்டலத்து 24 நாடுகளில் ஒன்றான குறுப்பு நாட்டையே இவர் குறித்தார் என்ப; குறுப்பு நாடு, சென்னிமலை அடிவாரத்திலிருந்து மேற்கே உள்ள பகுதியாம்; குறும்பொறை நாடு என்பது இதன் பழைய பெயர்.

சுந்தரமூர்த்திநாயனார், அவிநாசியில் முதலை விழுங்கிய பிள்ளையை மீட்டுத்தந்ததாகக் கதை உளது. திருமுருகன் பூண்டிக்கு அருகே சுந்தரரின் பொருட்களைத் திருடர்கள் களவாடியதும், பிறகு சிவனருளால் மீண்டும் அவற்றைப் பெற்றதும் கதையாக வழங்கி வருகிறது.

கி.பி. 10-ஆம் நூற்றாண்டுக்குப் பின் வாழ்ந்த,

1. பவணந்தி முனிவர்
2. அடியார்க்கு நல்லார்

ஆகிய இருவரும் கொங்குநாட்டவரே.

1. வீரபாண்டியன் (1265-85)
2. சுந்தரபாண்டியன் (1285-1300)

ஆகிய இரு பாண்டிய அரசர்களும் கொங்கு நாட்டை ஆண்டுளர்.

கி.பி. 18-ஆம் நூற்றாண்டில், கொங்கு மண்டலத்தில் நிகழ்ந்த சில வரலாறுகள்:-

கி.பி. 1742 பிர்க்கிவேங்கடராவ் என்பாருக்கு மைசூர் அரசர் திண்டுக்கல்லைக் குத்தகைக்கு விட்டார்.

1772 மைசூர் அரசர் ஹைதர் அலி, தன் மைத்துனன் மீர்சாகிப்புக்குத் திண்டுக்கல்லைக் குத்தகைக்கு விட்டார்.

1782 புல்லர்ட்டன் (Fullerton), கோவைக் கோட்டையை முற்றுகை இட்டான். இதனைக் கேட்ட திப்புசுல்தான் தானே வந்து இக்கோட்டையைப் பிடித்துக் கொண்டான்.

1784 திப்புசுல்தான், திண்டுக்கல்லை மேற்படி மீர் சாகிபின் மருமகன் சையத் சாகிபுக்குக் குத்தகைக்கு விட்டான்.

1790 மெடோஸ் (Medows) கரூரைப் பிடித்தான்; கோவையையும் இதே ஆண்டில் பிடித்தான். இதே ஆண்டில், திண்டுக்கல் பிரிட்டிசார் வசம் ஆனது.

1791 கமுருதீன் என்ற இசுலாமிய சேனைத் தலைவன் கோவையை கேமர்ஸ் (Chamers) என்பவனின் பொறுப்பிலிருந்து கைப்பற்றினான்.

1799 திப்பு வீழ்ந்தும், கோவை ஆங்கிலேயர் வசமாயிற்று. கொங்குநாடு முழுவதும் இந்த ஆண்டில் ஆங்கிலேயர் வசமாயிற்று.

கி.பி. 1788-90 இல் இருந்த முறைமைப்படி, திண்டுக்கல்லைச் சேர்ந்த பாளையப்பட்டுகள் மொத்தம் 26. அவை:-

1. இடையன் கோட்டை பாளைப்பட்டு
2. கோம்பை பாளையப்பட்டு
3. மாம்பாறை பாளையப்பட்டு
4. சந்தையூர் பாளையப்பட்டு
5. எறியோடு பாளையப்பட்டு

6. மாதூர் பாளையப்பட்டு
7. பழனி பாளையப்பட்டு
8. சுக்கம்பட்டி பாளையப்பட்டு
9. தேவதானப்பட்டி பாளையப்பட்டு
10. கூடலூர் பாளையப்பட்டு
11. கம்பம் பாளையப்பட்டு
12. வடகரை பாளையப்பட்டு
13. அம்பாதுறை பாளையப்பட்டு
14. அம்மைய நாயக்கனூர் பாளையப்பட்டு
15. போடி நாயக்கனூர் பாளையப்பட்டு
16. மெக்கலாபுரம் பாளையப்பட்டு
17. எரசக்க நாயக்கனூர் பாளையப்பட்டு
18. கண்டமநாயக்கனூர் பாளையப்பட்டு
19. கன்னிவாடி பாளையப்பட்டு
20. மாறனூத்து பாளையப்பட்டு
21. நிலக்கோட்டை பாளையப்பட்டு
22. பள்ளியப்பநாயக்கனூர் (கூவக்காபட்டி) பாளையப்பட்டு
23. தவசிமடை பாளையப்பட்டு
24. தேவாரம் பாளையப்பட்டு
25. தோட்டியங்கோட்டை பாளையப்பட்டு
26. விரூபாக்ஷி பாலளயப்பட்டு

**திண்டுக்கல்நாடு** என்று சொல்லப்பட்ட பகுதி மட்டும் *1790-91* முதல் *1795-96* வரைக்கும் ஆங்கிலேயருக்கு அளித்த வரி வசூல் 59,180 ஸ்டார்பகோடாக்கள்! (1 ஸ்டார் பகோடா = 3 ரூபாய் 50 பைசா). ஆங்கிலேயர் நம் நாட்டை எவ்வாறு சுரண்டினர் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

கொங்கு வரலாற்றில், **புக்கானன்** நாட்குறிப்பு பேசப் படுகிறது. இவர் ஒரு மருத்துவர். இவர் எழுதிய நாட்குறிப்புகள் இலண்டனில் அச்சிடப்பட்டதாகத் தெரிகிறது. இந்நூலில் கொங்கு

நாட்டு வரலாற்றுக் குறிப்புகள் உளதென்பர். கோவை மாவட்டத்திற்கு கோவை தலைநகர் ஆவதற்கு முன்பு, தாராபுரமே தலைநகராக இருந்தது என்பதற்கு இப்புக்கானன் குறிப்பில் சான்று உள்ளது என்பர்.

**கோயமுத்தூர்** என்ற பெயர் எப்படி ஏற்பட்டது?

மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள், கோசர்கள் ஆண்டதால் கோசர். கோயர் என்று ஆகி, அது கோயன் என வந்து, **கோயன்** + புத்தூர் = கோயன்புத்தூர் + கோயமுத்தூர் என்று ஆனதாகக் கூறுவார். ஆனால், அரசினர் கீழ்திசைச் சுவடி நூலகச் சுவடி ஒன்றில், **கோவன்** என்ற இருளர் தலைவனால் அந்த ஊர் உண்டானதால், கோவன் + புத்தூர் = கோவன்புத்தூர் = கோயமுத்தூர் என வந்தது என்று காணப்படுகிறது சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் இச்சுவடிக் கருத்தையே ஆதரிக்கிறார்.

**கொங்கு** என்ற பெயர் எப்படி வந்தது?

கொங்கு என்ற சொல்லுக்கு, மலர். மகரந்தம், தேன்' மணம், பொன் ஆகிய பொருட்களை அகராதி தெரிவிக்கிறது. ஆனால் இவற்றைக் கொண்டு கொங்கு மண்டலம் அல்லது கொங்குநாடு என்று பெயர் வந்தததாகக் கூற இயலவில்லை.

மெக்கன்சியின் சுவடி ஒன்றில் ஒரு குறிப்பு வருகிறது; ''கொங்குப் பேச்சாக இப்பகுதி மக்கள் பேசுகிறார்கள்'' என்பதே அது. கொங்குமண்டல மக்களின் பேச்சு, அலாதியானது. நீட்டி நீட்டிப் பேச்சு அமையும். அதனால்தான் பல திரைப்படங்களில் கொங்குப் பேச்சை உரையாடலில் சேர்க்கின்றனர். ஆகவே, **கொங்குமண்டலப் பகுதி மக்களின் பேச்சு முறையால்** - கொங்கு பேச்சாக இருப்பதால் - அந்த நாடு **கொங்குநாடு** என்று அழைக்கப்பட்டிருக்கலாம். இப்பெயராய்வு பின்னரும் சிந்திக்கப்படும்.

இனி, இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள சுவடிகளைக் குறித்துச் சில நிவலுவாம்.

**கொங்குமண்டல வரலாறு** (*ஆர். 7991*) எனும் சுவடியில், 'கொங்கு' என்ற பெயர் வந்ததன் காரணம் சிந்திக்கப்பட்டுளது.

சேரமான் பெருமாளுக்குக் 'கொங்கர்' என்று பெயராதலால் 'கொங்கு' என்ற பெயர் அம்மண்டத்திற்கு அமைந்ததாக இச்சுவடி பேசுகிறது.

இந்தச் சுவடியில், கொங்குமண்டலத்தில் மொத்தம் 42 நாடுகள் இருந்ததாகக் குறிப்பு உளது. 42 நாடுகளின் பெயர்கள் தரப்படாவிடினும், 37 நாடுகளின் பெயர்கள் தரப்பட்டுள.

கொங்குமண்டலத்தில் ஏற்பட்ட **குடியேற்றம்** (settlement) பற்றிய அரிய செய்தியை இச்சுவடி கூறுகிறது. அஃதாவது, **சேரமான் பெருமான்** என்ற அரசன், திருக்காளத்தி ஊர்ப்பகுதியில் வாழ்ந்த 14,000 வேடர்களைக் கூட்டி வந்து, கொங்குமண்டலத்திலே குடியமர்த்தினானாம். அவ்வாறு குடியமர்த்த அவரைத் தூண்டியது, **கண்ணப்பநாயனார் கண்** கொடுத்த செய்கையே என்று சுவடி பேசுகிறது.

இன்னொரு அரிய வரலாற்றுக் குடியேற்றத்தினையும் இச்சுவடி நல்குகிறது. அஃதாவது இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள **திருப்பாலைக்குடி** என்ற ஊரிலிருந்து பல வேளாளர் குடிகளைக் கொங்குமண்டலத்தில் அந்நாட்களில், ஒழுக்கத்திற்காகக் கொண்டு வந்து வாழச் செய்துள்ளனர் என்பதுதான் அது!

**மருதுறை** எனும் கிராமத்துப் பண்டிதர் ஆலாலசுந்தரர் வரலாறு பற்றி இத்தொகுப்பில் ஒரு சுவடி பேசுகிறது.

மருதுறை என்ற ஊர் காங்கேயம் தாலுகாவைச் சேர்ந்தது. இந்த ஆலால சுந்தர பண்டிதர், **சுந்தரமூர்த்தி நாயனாரின் சிற்றப்பா மகன்** என்று சுவடி குறிக்கிறது.

சுந்தரமூர்த்திகளோடு கைலாசம் போன சேரமான் பெருமாள் நாயனார், தம் பூமியைச் சிவப்பிராமணர்களுக்கு உரிமையாக்கிச் சென்றார் எனவும், இதற்கான ஆலோசனையை வழங்கியவர் சுந்தரமூர்த்தியே என்றும் சுவடி தெரிவிக்கிறது. இவை அரிய செய்திகளாம்.

மருதுறை **சைவ மடாதிபதி** ஆலாலசுந்தர பண்டிதருக்கு, உரிய பூதானச் சிலாசாசனம் எனும் சுவடி (டி. 3136; ஆர்.. 7994)

நொய்யலாற்றுக்கு வடகரையில் இருந்த சில நிலச் சொத்துக்களின் உரிமைகளைக் குறிக்கிறது; ஆலாலசுந்தர பண்டிதருக்கு அப்பகுதியில் இருந்த உரிமையைப் பேசுகிறது.

சிவகிரி சுப்பிரமணியசுவாமி தலவரலாறு (டி.3137; ஆர்.7955) எனும் சுவடி, முருகனுக்கும் பிள்ளையாருக்கும் பழத்தைப் பெறும் செய்கையில் பூசல் ஏற்பட்டதை விவரிக்கிறது; முருகன் கோபமாக மயில்வாகனத்தில் புறப்பட்டு வந்து சிவகிரியில் தங்கிக் கொண்டாராம். சிவமாய், மங்களகரமாய், இருப்பதால் அதற்குச் சிவகிரி என்று பெயர் ஏற்பட்டதாம். பாண்டவர்கள், தமது அஞ்ஞாதவாசத்தின் போது (மாறுவேடம் பூண்டு அடையாளம் தெரியாதவாறு இருத்தல்) இந்தச் சிவகிரியில் தங்கினார்களாம். கொங்கு நாட்டின் தாராபுரமே, விராடநகரம் என்றும் சுவடியில் உளது. இந்தச் சுவடி எழுதப்பட்ட காலம் கி.பி.1807. எனவே, 19-ஆம் நூற்றாண்டு வரலாறுகள் மற்றும், சிந்தனை, மொழி நடை, சொல்லமைப்பு முதலியவற்றை ஆய்வதற்கு இச்சுவடி பெரிதும் பயனாகும்.

**கோயமுத்தூர் வரலாறு கோனமூப்பன்** என்பான் பெயரால் அவ்வூருக்குக் கோயமுத்தூர் எனப் பெயர் ஏற்பட்டது என்று கண்டுளது. **வடவள்ளி** பாளையப்பட்டை ஆண்ட மசக்கவுண்டர், கோவைப் பகுதிக் காடுகளை வெட்டி, குடியேற்றம் செய்வித்து, கோயமுத்தூர் பெயரையும் அளித்தார் என்றும் குறிப்புளது. கோனமூப்பனுக்கும் 'பிரத்தியட்சமானதால்', கோவை அம்மனுக்குக் கோனம்மன் எனப் பெயர் வந்ததாகவும் சுவடி நுவலுகிறது. கி.பி. 18-ஆம் நூற்றாண்டில், **ஹைதர் அலி** காலத்தில், கோய முத்தூரை ஆண்டவர் **மாதேராசா** என்பவர் என்றும் இச்சுவடி எழுதுகிறது.

'ஊற்றுக்குளி பாளையக்காரர் காலிங்கராய கவுண்டனுக்கு எழுதிய கடிதம்' எனும் சுவடி, பெரியார் மாவட்டத்து **ஊற்றுக் குளி** எனும் ஊரில் இருந்த பாளையக்காரர் காலிங்கராயக் கவுண்டர் என்பாருக்கு, பாலக்காட்டுக் கோட்டையில் மேஜராக **ஜேம்ஸ்ரமலீ** என்ற ஆங்கிலேயர் எழுதிய கடிதத்தின் நகலாகும். **தமிழகம் அயல்நாட்டு ஆட்சியில்** இருந்த நிலைமைகளைத் தெளிவு படுத்த இதுபோன்ற கடிதங்கள் பெரிதும் பயனளிப்பவை என்பதில்

ஐயமில்லை. இக்குறிப்பிட்ட கடிதத்தில், இரமலீசாயபு எனும் மேஜர், காலிங்கராயர் கவுண்டரின் உதவியையும் நட்பையும் கோரியுள்ளார். காலிங்கராயர் உதவி செய்து, ஆங்கிலேயருடன் நட்பாக இருந்தால், காலிங்கர் பாளையத்துக்கும், அவர் சுற்றத்தாருக்கும், அவர் வமிசத்திற்கும் கேடு வராமல் கம்பெனி ஆட்சி உள்ளவரை கம்பெனியார் பார்த்துக் கொள்வதாகவும் எழுதப்பட்டுள்ளது. ஆங்கிலேயரின் பிரித்தாளும் சூழ்ச்சியை (Divide and rule) அம்பலமாக்கும் அப்பட்டமான கடிதம் இது! இக்கடிதத்தில் ஆங்கிலேயர் காலத்துத் தமிழகத்தின் போர்நிலை தெரியவருகிறது. மேஜர் இரமலீ என்பவர், காலிங்கராயக் கவுண்டரே ஆங்கிலேயர்களுடைய எதிரிகளை, பாலக்காட்டுச்சேரி மக்களுடன் சேர்ந்து கொண்டு, ஒழிக்குமாறு கோருகிறார். இல்லாவிட்டால், திண்டுக்கல்லில் இருக்கும் ஆங்கிலப் படையுடன் கூட்டுச்சேர்ந்து எதிரிகளை ஒழிக்கலாம் அல்லது பழனியில் உள்ள ஆங்கிலப் படைகளுடன் ஒத்துழைத்து எதிரிகளை நசுக்கலாம் என்று தந்திரமாகக் காலிங்கராயக் கவுண்டரைக் கடிதத்தில் நயவஞ்சகமாகக் கோருகிறார்!

இக்கடிதம் கி. பி. 1799 மார்ச் முதலாம் நாளில் எழுதப்பட்டுள்ளது.

மேலும் இக்கடிதத்தில் அந்த ஆங்கிலேய மேஜர், ''அரசாங்கத்தில் எந்த நேரத்தில் எது நடக்கும் என்று யாருக்கும் தெரியாது! நம் இருவர் மனதும் ஒன்றாகவே இருப்பதால், உங்களுடைய காரியக்காரர் ஒருவரை எங்களிடத்தில் வந்து, எங்களைவிட்டு நீங்காமல் எப்போதும் எங்கள் அருகிலேயே இருக்குமாறு ஏற்பாடு செய்யவும், தாங்கள் எங்களை எந்த நேரத்திலும் பார்க்க வரலாம்! என எழுதியுள்ளார். ஆங்கிலேயருக்கு ஓர் ஆபத்து வந்தால், அந்தக் காரியக்காரர் மூலம், காலிங்கராயக் கவுண்டருக்குச் செய்தி அனுப்ப இவ்வாறு ஓர் ஏற்பாடு! ஆங்கிலேயர் மூலம் செய்தி அனுப்பினால், ஒரு வேளை அதைக் காலிங்கராயன் நம்பமறுக்கலாம் அல்லவா? அதற்காக அப்படி ஓர் ஏற்பாடு!

'கரூர்ப் பசுபதிசுவரர் தேவத்தான வரலாறு' எனும் சுவடியில், அட்டதிக்குப் பாலகர்கள் சரிதை, வேதவியாசர் சரிதை, முசுகுந்தன் கதை, பசுபதீசுவரர் தலமகிமை ஆகியன மொழியப்பட்டுள. கரூரில் வாழ்ந்து கொண்டிருந்த ஒரு சிவப்பிராமணன், ஸ்ரீரங்கம் சென்று

ஸ்ரீரங்கநாதரை வழிபட்டு இருந்த காலத்தே, ஸ்ரீரங்கநாதர் அப்பிராமணனுக்குத் தன் கழுத்து ஆபரணத்தைத் தந்தாராம்! அதை அவ்வூர்த் தாசிக்குத் தந்தாராம் அப்பிராமணன். ஆலயத்தில் ஆபரணம் களவு போனதை விசாரித்த பாகவதர்கள். அத்தாசியைப் பிடித்து விசாரிக்கும் போது, "எனக்கு ஸ்ரீரங்கநாதர் தந்தார்" என்று அப்பிராமணன் உரைத்தானாம். மற்றவர்கள் நம்ப மறுக்கவே, ஸ்ரீரங்கநாதர் அங்கேயே காட்சி தந்தாராம்! இக்கதை இச்சுவடியில் விவரிக்கப்பட்டுளது. தெய்வ நம்பிக்கையோடு சொல்லப்பட்ட இக்கதை, தெய்வ நம்பிக்கையோடு எழுதப் பட்டுள்ளது என்பது ஈண்டு நாம் அறியத் தக்கது.

தெய்வ நம்பிக்கையோடு கதையை எழுதுவது எப்படி? மெக்கன்சி ஆவணத்தைப் பார்த்து விளங்கிக் கொள்ளவேண்டும்!

'புலியூர்க் கிராம வரலாறு' எனும் சுவடியில், வியாக்கிரபாதர் எனும் முனிவருக்கு ஆநிலைநாதர் காட்சி தந்ததால், இத்தலத்திற்குப் புலியூர் (வியாக்கிரம்-புலி) என்று பேரானது எனக் கூறப் பட்டுள்ளது. மிகச்சிறிய சுவடி இது. தீரன் சின்னமலை மாவட்டத்தில் கரூருக்குக் கிழக்கே உள்ள ஊர் புலியூர்.

திருமுக்கூடல் கிராம வரலாறு எனும் சுவடியில், திருமுக்கூடலின் பெருமை, கருவூர்ப் புராணத்தை அடியொற்றியே உரைக்கப்படுகிறது. கருவூர்ப் புராணத்தில், ஆம்பிராவதி நதிச் சருக்கம் என்ற சருக்கத்தில், 46-ஆம் பாடலே, இச்சுவடியின் முதலில் தரப்பட்டுள்ளதாம். 'வரும் பிரிந்து மதிபோல், என்று சுவடியில் உள்ளது, அச்சில், 'வாம்பிரவதி நதிமதி போல், என்று இருப்பது அறியத்தக்கது. கொங்குமண்டல வரலாறுகள் எனும் இத்தொகுப்பில் உள்ள கரூர் தொடர்பான வேறு சில சுவடிகளும் பொதுவாக, இக்கருவூர்ப் புராணத்தை அடியொட்டியே கூறப் பட்டுள எனலாம். கருவூர்ப் புராணத்தை இயற்றியவர் கந்தசாமி முதலியார் எனும் புலவர் ஆவார்; இவர் கோவையைச் சேர்ந்தவர். கருவூர்ப் புராணத்தில் மொத்தம் 21 சருக்கங்கள் உள்ளன; 1129 பாக்கள் அமைந்துள. கருவூர்த்தேவர் சுதிபெறு சருக்கம், இப்புராணத்தின் ஈற்றுச் சருக்கமாம். திருஞானசம்பந்தர், திருக் கருவூர்த்திருவானிலை என்று பாடியதும் இதே கரூரையே.

கருரைப் பற்றிய, இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள, அரசினர் கீழ்திசை சுவடி நூலகச் சுவடியிலும் கருவூர்ப் புராணத்திலும், பிரம்ம வைவர்த்த புராணத்தில் கருவூரின் சிறப்பு சிவ க்ஷேத்திர கண்டத்தில் கூறப்பட்டுள்ளதாக குறிப்பு உளது. ஆனால், அப்படியொரு கண்டமே பிரம்மவைவர்த்த புராணத்தில் இல்லை! வடமொழியில், **கர்ப்பபுரி மகாத்மியம்** என்று ஒரு சுவடி அரசினர் கீழ்திசை சுவடி நூலகத்தில் உளது. இதுவும் கரூர் மகாத்மியமே. இச்சுவடியிலும், பிரம்மவைவர்த்த புராணத்துச் சிவக்ஷேத்திர கண்டத்தில் கரூரின் சிறப்பு கூறப்பட்டுள்ளதாக எழுதப்பட்டுள்ளது.

**புன்னங்கிராம வரலாறு** எனும் சுவடியில், அந்த ஊர் புன்னை வனம் என்றும் குறிக்கப்படுகிறது. கருவூர்ப் புராணத்திலிருந்து அப்படியே ஒருபாடல் இச்சுவடியில் எழுதப்பட்டுள்ளது. வருணன் இந்தப் புன்னைவனம் எனும் கிராமத்திற்கு வந்து வழிபாடு நடத்தியதாக இதில் எழுதப்பட்டுளது.

**பஞ்சமாதேவி கிராம வரலாறு** எனும் சுவடியில், பஞ்சமுகத்துச் சிவன் காட்சி கொடுத்ததால், அத்தலத்திற்குப் பஞ்சமாதேவி என்று பெயர் வந்தது என்ற குறிப்பு உளது. வேறு பெயர்க் காரணம் உளதா என ஆய்வது நல்லது.

**நெரூர் பூர்வோத்திர சங்கதிகள்** எனும் சுவடியில், இவ்வூர் முன்பு காடாக இருந்ததாகவும், அதில் ஒரு இராட்சசன் மற்றவர்களைத் துன்புறுத்தியதாகவும், முருகன் அந்த இராட்சசனைக் கொன்றதாகவும், அதன் பிறகு, நெரூர் சிறப்பான இடமாக இருந்ததால், அங்கேயே முருகன் தங்கிவிட்டதாகவும் எழுதப் பட்டுள்ளது. பழங்காலத்தில், காடுகளில் கள்வர்கள் இருந்து கொண்டு, மக்களுக்குத் துன்பம் தந்ததை, உருவமர்வாக (symbolic) 'இராட்சசன்' என்று தெரிவிக்கப்பட்டுள்ளதாக எடுத்துக் கொள்ளலாம். இதே நெரூரில் **சதாசிவசுவாமிகள்** என்பாருக்கு மடம் உண்டான வரலாற்றையும் இச்சுவடி விரிவாக எடுத்துரைக்கிறது. இச்சதாசிவர், ஓரிடத்திலிருந்து மாயமாய் மறைந்து இன்னொரு இடத்துக்குப் போகிறார் என்ற செய்தி பரவவே, தொண்டமான் உட்பட அரசர்கள் சிலர் இவரைக் கண்டு வணங்கியதாகவும்

கூறுகிறது. தமிழகத்தில் மடங்கள் உண்டான வரலாற்றை ஆய. இவ்வாறு, மெக்கன்சியின் ஆவணங்கள் இன்று பெருத்த பெட்டகமாக உதவுகிறது.

இத்தருணத்தில், மெக்கன்சி ஆவணங்களில் பொதிந்துள்ள வேறு ஒரு பெட்டகத்தையும் உங்களுக்குத் திறந்து காட்ட வேண்டும்! அதுதான் காடு (forest)! ஆமாம், தமிழகத்தில் அந்தக் காலத்தில் நிலங்களில் காடுகளே மண்டியிருந்தன! எந்தெந்தப் பகுதியில் என்னென்ன மரக்காடுகள் இருந்தன என்பதற்குப் பெரிய ஆதாரமாக இன்று நிற்பவை மெக்கன்சியின் ஆவணங்கள்! தமிழகக் காடுகள் என்று தனியாக ஆய்வுகள் நிகழ்த்தப்பட வேண்டும். அந்தக் காலத்தே, மதுரையில் புன்னைவனம் இருந்தது என்று அறியவருகிறோம். மெக்கன்சியின் சுவடிகளிலும் இதற்கு ஆதாரம் உள்ளது. ஆனால், இன்று மதுரையில் அப்படி ஒரு வனம் இருப்பதாகத் தெரியவில்லை! புன்னை மரமே அங்கு இருக்கிறதா என்பது ஐயமே! கரூர்ப்பகுதி முன்பு அசோகமரக் காடாக இருந்தது என்று மெக்கன்சியின் சுவடி கூறுகிறது. அரசமரக் காடுகளாகக் கொங்கு மண்டலத்தில், வேறு பகுதிகளில், நிரம்பியிருந்தன என்றும் மெக்கன்சியின் சுவடி சுட்டுகிறது. இன்று, இவ்வாறு, ஒரே வகையான மரம் கொண்ட காடு தமிழகத்தில் மிகமிக அரிதாகவே உளது. இப்போதுள்ள கோவை சிறுவாணிக்காடு, பெரியார் மாவட்டத்துத் திம்பம் பகுதிக்காடு போன்றவற்றில் பல மரங்களும் கலந்துள்ளனவே தவிர, ஒரே ஒரு மர வகையைக் கொண்டு அமையவில்லை. ஆனால், வடார்க் காடு மாவட்டத்துச் சிதம்பரத்தில் உள்ள பிச்சாவரம்காடு ஒரே மரத்தினைக் கொண்டது; புன்னை மரக்காடு, பிச்சாவரக்காடு ஆகும். இந்தியாவிலேயே புன்னைக்காடு இரண்டுதான் உள்ளது. ஒன்று பிச்சாவரத்தில், மற்றொன்று மேற்கு வங்காளத்தில். அநேகமாக, பிச்சாவரத்திலிருந்து அங்கு சென்றிருக்கவேண்டும்! இதற்குச் சொல்லாதாரம் உண்டு. மேற்கு வங்காளத்தில் உள்ள புன்னைக்காட்டை, சுந்தர்பன் (sundarban) என்று ஆங்கிலத்தில் குறிப்பர். சுரபுன்னைக்காடு என்ற தமிழ்ச் சொல்லே, சுந்தரி புன்னை என்றாகி, பிறகு சுந்தர்புன் என்று மாறி, அதன்பிறகு சுந்தர்பன் ஆகியிருக்க வேண்டும். சுரபுன்னைக்காடு பிச்சாவரத்துச் சதுப்பு (swamp) நிலத்தில் அமைந்துளது. நீரும் சேறுமான நிலம் சதுப்பு நிலம் எனப்படும்.

மேலே குறிப்பிட்டது போல, தமிழகத்திலிருந்து மேற்கு வங்காளத்திற்குக் காடு மட்டுமல்லாது, வேறு பலவும் சென்றுள. எடுத்துக்காட்டாகக் காளி வழிபாடு; தமிழகக் காளி வழிபாடு, மேற்கு வங்காளத்தில் சென்று, இன்றும் அங்கு புகழுடன் விளங்குகிறது. தமிழகத்து வடமொழி நூற்கள் பலவும் அங்கு சென்றுள்ளன.

**வேட்டைமங்கலத்துப் பூர்வச்சங் கதிகள்** எனும் சுவடியில் (டி. *3057*), **சேர அரசன்** ஒருவன் வேட்டைக்கு வந்து, இடத்தைச் சீர்திருத்தி ஊர் உண்டாக்கியதால், **வேட்டை மங்கலம்** என்று பெயர் ஏற்பட்டது என்று குறிப்பிடப்பட்டுளது. சேர அரசனின் பெயர் குறிப்பிடப்படவிலலை.

**வாங்கல் கிராமத்துப் பூர்வச் சங்கதிக் கைபீது** என்ற சுவடியில் (டி. *3058*), இருடிகள் ஆதிபராசக்தியிடமிருந்து வரம் வாங்கியதால், **வாங்கல்** என்று பேரானது என்று பேசப் பட்டுள்ளது.

**பவித்திரம் கிராம வரலாறு** எனும் சுவடியில் (டி. *3059*), **வெங்கலநாடு** எனப்பெயர் வந்ததன் காரணம் புகலப்படுகிறது. தீயினால் உலகெலாம் அழிந்த போது (இதை வெங்காலம் என்கிறது சுவடி), அழியாது மிஞ்சியிருந்ததால், இந்த நாட்டுக்கு வெங்கால நாடு என்று பெயர் வந்தது என்கிறது சுவடி; முன் இந்திரனுக்குக் கௌதமர், உடம்பெலாம் ஆயிரம் யோனி வருமாறு சாபம் தந்த அந்தச் சாபம் தீர்ந்த சிவத்தலமாதலால், இந்த ஊர் **பவித்திரம்** என்று அழைக்கப்பட்டதாகச் சுவடி நல்குகிறது.

**குப்பம் கிராமத்துப் பூர்வச் சங்கதிக் கைபீது** (டி. *3060*) எனும் சுவடியில் குப்பமுனி (அகத்தியர்), வழிபாடு நடத்தியதால், இவ்வூர் **குப்பம்** என்று அழைக்கப்பட்டது என எழுதப்பட்டுள்ளது.

பொதுவாக, **ஊரும்பேரும்** போன்ற பிற்கால ஊர்ப் பெயர் ஆராய்ச்சி நூற்களுக்கு எல்லாம் முன்னோடி, மெக்கன்சியின் ஆவணங்கள் என்றுகூட இடமுண்டு. மெக்கன்சியின் ஆவணங்களில், ஓர் ஊருக்கு அந்தப் பெயர் எப்படி வந்தது என்று சிந்திக்கப் பட்டுள்ளது; காரணம் கூறியதில் சிலபோழ்து, தவறு இருக்கலாம்;

ஆனால் சிறந்த ஆய்வுக்குக் களம் அமைத்துக் கொடுத்த வகையில், மெக்கன்சியின் சுவடிகளின் பங்கை மறுக்க இயலாது. தமிழில் **ஊர்ப்பெயர் அகராதி** என்று விரிவான நூல் வெளி வர வேண்டும்.

**புகளூர்க் கிராம வரலாறு** (டி *3061*) எனும் சுவடியில், சகல தேவர்களும் இவ்வூரில் சிவனைப் பூசித்துப் புகழ் பெற்றதால், 'புகளூர்' என்று வந்தது எனக் காணப்படுகிறது (சுவடியில், புகழூர் என்று இலாது, புகளூர் என்றே உள்ளது).

**தான்தோணிக்கிராம தேவத்தான வரலாறு** (டி. *3051*) எனும் சுவடியில், **சதாசிவபிரம்மம்** என்பவர், அந்தத் தலம் பின்னாளில் சிறந்து புகழுடையும் என முன்கூட்டியே உணர்ந்ததாயும், தான்தோன்றிப் பகுதி ஒரு காலத்தில் வனாந்திரமாக இருந்தது என்றும், வரையப்பட்டுள்ளது. இந்த வரலாறு, வமிச பரம்பரைச் செய்திகளை ஆதாரமாகக் கொண்டதே.

**தாராபுரம் கைபீது** (டி. *3063*) எனும் சுவடியும், வமிச பரம்பரைச் செய்திகளை ஆதாரமாகக் கொண்டதே. ஆனால், இச்சுவடி குறிப்பிடத்தக்க செய்தி எதையும் சிறப்பாக நல்கவில்லை.

**தாராபுரம் கசுபா தானிகர் கைபீது** (டி. *3064*) எனும் சுவடியில், **கிருஷ்ணராஜ உடையார்** ஆட்சிக் காலத்தில், **கெம்புத் தேவர்** என்பார் ஒரு சிற்றரசனாகத் தாராபுரம் பகுதியில் ஆண்ட வரலாற்றுக் குறிப்பு கிடைக்கிறது. இச்சுவடி, வமிசபரம்பரைச் செய்தியை ஆதாரமாகக் கொண்டது.

**பெரிய மருதூர் குருக்கள் கைபீது** எனும் சுவடியில் (டி. *3065*), செண்பகச் சித்தாறு' ஓடும் பகுதியில் **மாவண் பாண்டியன்** என்பான் ஒரு காலத்தில் ஆண்டதாகக் குறிப்பு உளது. **சட்டைமுனி** என்ற முனிவரைப் பற்றிய செய்திகள் இச் சுவடியில் உளது; **சட்டைமுனி ஞானம்** முதலிய பல ஓலைச் சுவடிகள், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் இன்றும் பாதுகாக்கப்பெற்று வருகின்றன. சுவடி குறிக்கும் சட்டை முனியும், மருத்துவ ஓலைச் சுவடிகள் பேசும் சட்டைமுனியும் ஒருவராகவே இருத்தல் வேண்டும். இச்சட்டைமுனி கி.பி. 17,18-ஆம் நூற்றாண்டுகளை ஒட்டி, கொங்கு நாட்டில் வாழ்ந்தவராதல் வேண்டும். சட்டைமுனிக்குச் சிவன் லிங்க வடிவில் தோன்றி, பிறகு

காட்சியும் கொடுத்ததால், இவ்வூரில் ஆலயம் ஏற்பட்டது என்கிறது சுவடி. இச்சுவடிக்கு ஆதாரம், வமிசபரம்பரைச் செய்திகள் மற்றும் தொலைந்துபோன சாசனங்கள் என்றும் இந்தச் சுவடி குறிக்கிறது.

தூரம்பாண்டிக் கிராமக் கோயில் வரலாறு (டி. 3066) எனும் சுவடியின் மூலம், ஊர் வரலாற்றில் ஒரு சிந்தனை கிட்டுகிறது! 'பாடி' என்பதே 'பாண்டி' என்று தமிழ்நாட்டில் வழங்குகிறது என எண்ணலாம். பாடிச்சேரி என்பதே, பாண்டிச்சேரி என வந்துள்ளது என்று மதிப்பிட இச்சுவடி இடமளிக்கிறது. இந்தச் சுவடி, தூரம்பாண்டி எனும் கிராமத்தில் வாழ்ந்த குப்பய்யன் என்ற ஸ்தானிகர் எழுதிய வட்டார வரலாறு ஆகும். தூரம் பாண்டிக்குத் தூரநகர் என்றும் ஒரு பெயர் இருந்துள்ளதற்கு இந்தச் சுவடியில் சான்று உளது. இவ்வூர் உத்தமபாளையத்திற்குத் தெற்கே உள்ளது. இவ்வூருக்குக் குலோத்துங்க சோழன் என்றொரு சோழன் வந்ததாகவும், அவனே இவ்வூர்க் கோயிலையும், இவ்வூரையும் ஏற்படுத்தினவன் எனவும் இந்தச்சுவடி பேசுகிறது.

இவ்வாறு ஊர்கள் எப்படியெல்லாம் தமிழகத்தில் ஏற்பட்டன என்பதை அறிய மெக்கன்சியின் சுவடிகள் கருத்துக் கருவூலமாகத் திகழ்கின்றன.

முன்றூர்க் கிராமக் கோயில் வரலாறு (டி. 3067) எனும் சுவடியில், அவ்வூருக்கு திருமூலனூர் என்று ஒரு பெயர் இருந்ததாகக் குறிப்பு உள்ளது; முன்னூர் என அழைக்கப்படுவதே, சுவடியில் முன்றூர் என வந்துள்ளது போலும். இச்சுவடியிலும், குலோத்துங்கசோழனால் இவ்வூர் ஏற்பட்டது என்று காணப் படுகிறது.

இவ்வாறு, சோழர்கள் தமிழகத்தில் பல ஊர்களை ஏற்படுத்தியதற்கு மெக்கன்சியின் சுவடிகள் சான்று பகர்கின்றன.

மாம்பாடிக் கிராமக் குருக்கள் கைபீது (டி. 3069) எனும் சுவடியில், மனு, மாந்தாதா ஆகியோர் ஆட்சிக் காலத்திலேயே, இப்பகுதி மந்தநகர் என்ற பெயருடன் விளங்கியதாகவும், அதனால், மாந்தீசுவரர் என்று சுவாமிக்கும் பெயர் வந்தது என்றும் பொறிக்கப்பட்டுள்ளது. இராமய்யன் என்ற குருக்கள் தனது பரம்பரையோர் கூறியதாக இச்சுவடியில் குறித்துள்ளார்.

'குன்றமம் கிராமம் குறித்த சுவடியில் (டி. 3068) விக்கிரம சோழன் என்பவன், ஒரு புதரில் சிவலிங்கத்தைக் கண்டு, அங்கே ஏற்படுத்திய கோயிலே கொங்கு விடங்கேசுவரர் கோயில் என்று காணப்படுகிறது. வமிசபரம்பரைச் செய்தியை ஆதாரமாகக் கொண்டது இச்சுவடி.

மசகூர் மகாசனங்கள் கைபீது (டி. 3072) எனும் சுவடியில், கஞ்சம்பள்ளி மிட்டாவைச் சேர்ந்த மசகூர் தேனீசுவரசுவாமி வரலாறு கூறப்படுகிறது. பிரம்மா, கஞ்சம்பள்ளி வந்து, தனது தோஷத்தை நீக்கிக் கொண்டதாக இச்சுவடி பேசுகிறது. ஹைதர்அலி திப்புசுல்தான் ஆகியோர் இவ்வூர்ப் பகுதியில் ஆதிக்கம் கொண்டதாகவும், மதுரை மன்னர்களின் ஆதிக்கத்தையும் இச்சுவடி குறிப்பிடுவதால், வரலாற்றுக்குத் துணை செய்யும் சுவடி இது என்பது போதருகிறது.

பழனித் தலவரலாறு எனும் சுவடி (டி. 3093), கி.பி.1816இல் எழுதப்பட்டது. திருவிளையாடற் புராணத்தை ஒட்டிய வரலாறு களும் இதில் இடம் பெறுகின்றன. சுப்பிரமணியர் கோபமாக மலையேறியதன் பின், 'பழனி' என்ற பெயர் வந்தது எனக் குறிக்கும் சுவடி, அதற்கு முன்பு சபரபுரம் என்று பழனிக்குப் பெயர் இருந்ததாகத் தெரிவிக்கிறது. மேலும், சிவபுரம், இலக்குமி நாராயணபுரம் என்றெல்லாம் பழனிக்கு உள்ள வேறு பெயர் களையும் அவை வந்ததன் காரணத்தையும் புலப்படுத்துகிறது. ஊர்ப்பெயர் ஆய்வுக்கு இச்சுவடி பெரிதும் பயனாகும். இடும்பாசுரன், பொதியமலைக்குச் செல்லும் போது, பழனி வழியாகச் சென்ற தாக இச்சுவடி குறிக்கிறது. இதைப்போல, இன்ன ஊரை இன்ன ஊர் வழியாக இவர் அடைந்தார் என்ற விவரங்கள் இத்தொகுப்பில் நிறைய உள. பழந்தமிழக வரைபடம் (Map of Ancient Tamil country) உருவாக்க இக்குறிப்புகள் தேவைப்படும்.

பழந்தமிழக வரைபடம் குறித்த ஆய்வுகள் தமிழில் இதுவரை மேற்கொள்ளப்படவில்லை. தொலைதூர நுட்ப உணர்வு (Remote Sensing) அறிவையும் இத்தகு வரைபடத்திற்கும் பயன்படுத்தலாம்.

பழனிமலைப் பகுதியை பாலராசாக்கள் என்ற சத்திரியர்கள் ஆண்டது, மூன்று வீட்டுக்கார வேடர் ஆண்டது போன்ற பல செய்திகளை இச்சுவடி தருகிறது.

பழனித்தலத்துக்கும் **பண்டாரம்** என்போருக்குமுள்ள உறவுகள் இச்சுவடியில் நன்கு கூறப்பட்டுளது.

பழனித் தலபுராணச் செய்திகளை ஒட்டியே இச்சுவடியும் செய்கிறது.

**பழனித்தலபுராணம்** என்ற செய்யுள் நூல் **பாலசுப்பிரமணியக் கவிராயர்** என்பவரால் இயற்றப்பட்டது. இந்நூலின் காலம் **கி.பி. 1628** ஆகும். இக்கவிராயர் **துளுவ வேளாளர்** ஆவார். **மாம்பழக்கவிச்சிங்க நாவலரும் பழனாபுரிமாலை** பாடியுள்ளார். **நக்கீரர்** தமது திருமுருகாற்றுப்படையில் **திருவாவினன்குடி** என்று குறிப்பிட்டுப் பாடியுள்ளார். முதன்முதலாகத் திருவாவினன் குடி என்ற சொல்லை இங்குதான் கேட்கிறோம். **வீரபாகுதேவர்** பாடிய பாக்கள் நமது இத்தொகுப்பில் உள. **தேவரடியார்கள்** பற்றிய சில புதிய செய்திகளும் இச்சுவடியில் உள.

**கொடுமுடி தேவத்தானக் கைபீது** (டி. *3090*) எனும் சுவடியில், அகத்தியர், குலசேகர பாண்டியன், ஹைதர்அலி, திப்பு சுல்தான் என்று பல்வேறு காலகட்டத்தவர்கள் பற்றி உரைக்கப் பட்டுளது. புராணக் கருத்துகளை அடியொற்றி நவின்றாலும், எத்தனையோ வரலாற்று மானிடவியற் (Anthropology) குறிப்பு களை இதிலிருந்து அள்ள முடியும். கொடுமுடியில் உள்ள வன்னி மரத்தில் **கி. பி. 1782**-இல் ஒரு முறையும், **கி. பி. 1797**-இல் மறு முறையும் முள் முளைத்ததாகவும், அக்காலங்களில் முறையே ஹைதர்அலியும், திப்புசுல்தானும் இறந்துபட்டனர் என்றும் அவ் வன்னிமரத்தில் முள் முளைப்பது இப்படிப்பட்ட குறியைக் காட்டும் என்றும் இச்சுவடி உரைக்கிறது. இந்தச் சுவடி **கி.பி. 1807**-ஆம் ஆண்டில் எழுதப்பட்டது; கையொப்பங்கள் உட்பட அனைத்தும் இதே ஆண்டில் எழுதப்பட்ட மூலச்சுவடி இது.

**காங்கேய தேவஸ்தானக் குருக்கள் எழுதிய வரலாறு** (டி. *3322*) எனும் சுவடி பெரும்பாலும் புராணக் கருத்தை அடியொட்டியே செல்கிறது. இக்குருக்களின் வரலாற்றுக்கு ஆதார மான தாமிரப்பட்டயங்கள் முதலியவை, காலஅடைவில் தொலைந்து போயின என்ற குறிப்பும் இச்சுவடியில் உளது.

திண்டுக்கல் நகரத்து வியாபார வரலாறு (டி. 3005): ஆர். 8178) எனும் சுவடி, அரிய சுவடியாகும். பாண்டிய மண்டலத்தின் ஒருபகுதியில் நடந்த வியாபாரம் பற்றி உரைப்பது இச்சுவடியாகும். இந்த வியாபார முறையே பாண்டிய மண்டலம் முழுவதும் 300, 400 ஆண்டுகளுக்கு முன்பு இருந்தது என்று கொள்ளலாம். இச்சுவடியின் காலம், கி.பி. 18, 19-ஆம் நூற்றாண்டு ஆயினும், சுவடியில் கூறப்பட்டுள்ள வாணிக முறை, அதற்கும் முன்பு சில நூறு ஆண்டுகளாக நடைபெற்று வந்ததே ஆகும்.

ஒரு நாட்டு வரலாறு என்பது, போர் வரலாறு மட்டும் தான் என்ற தவறான கருத்து தற்போது உள்ளது: நாட்டு வரலாற்றில் வணிக வரலாறும் அடங்கும். எனவே, இச்சுவடி இன்றியமையாதது ஆகிறது.

திண்டுக்கல் நகரச் சந்தைக்கு என்னென்ன பொருட்கள், எவ்வெவ்விடங்களிலிருந்து அந்நாளில் வந்தன என்ற விபரம் இதில் தரப்பட்டுள்ளது; இது மேலாராய்ச்சிகளுக்குப் பெரிதும் பயனுடையதாகும்.

மேலும் இப்பகுதியில் பட்டுநூல் நெசவு பற்றிய அரிய செய்திகளும் இச்சுவடியில் உள. பட்டுக்குப் புகழ்பெற்ற பூமி தமிழ்ப் பூமி! அந்த வரலாறு நமக்கு இனறியமையாதது அல்லவா? அத்தகைய பட்டு நெசவின் சில நுணுக்கங்களும், சில கலைச் சொற்களும் இச்சுவடியில் காணப்படுகின்றன.

தமிழகத்தில் சாலியர், பத்மசாலியர் என்போர் தற்போது பட்டுப் புடவை உற்பத்தி மற்றும் விற்பனையில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆவர். செட்டியார், முதலியார் பட்டங்கள் கொண்ட பிரிவினரும் பட்டுத்தொழில் உலகில் உள்ளனர். இன்னும் சில பிரிவாரும் பட்டுப்புடவை உற்பத்தியில் பாடுபட்டு வருகிறார்கள். பட்டு வணிகத்தை இன்னும் உலகளாவிய நிலையில் நடத்தினால், இத் தொழிலில் ஈடுபடுவோர் உயர மேலும் வழிகள் கிட்டும்.

திண்டுக்கல் மாவட்டத்து, தாடிக்கொம்பு எனும் நகரத்தை அடுத்த முள்ளிப்பாடி எனும் கிராமத்து ரங்கராசர் வமிசாவளி பற்றி

ஒரு சுவடி (ஆர். 8180) இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. **இலிங்கராசர்** என்ற பிராமணரே முதன்முதலில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் முள்ளிப்பாடி என்ற கிராமத்தைக் காடு வெட்டித் தோற்றுவித்ததாக இதில் வரலாறு உளது. இந்தத் தாள் ஆவணம் (டி. 3008), கி. பி. 1816-ஆம் ஆண்டு எழுதப்பட்டது; இதற்கான குறிப்பு சுவடியின் ஈற்றிலேயே எழுதப்பட்டுள்ளது.

திண்டுக்கல் தருமராசர் கோயில் திருநாள் வரலாறு சிறப்பான சுவடியே; நூறு, நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு, தமிழ்மக்கள் யாங்ஙனம் கோயில் திருநாளுக்கு முக்கிய இடம் கொடுத்து. அவர்களின் வாழ்க்கையோடு அதை ஒட்டிக்கொண்டனர், என்பதற்கு இது விளக்கமாக இருக்கிறது. பலநாட்கள் ஒரே கோயிலில் விழா எடுத்துத் தமிழ்மக்கள் மகிழ்ந்துள்ளனர்; இந் நிலை இப்போதும் ஆங்காங்கே காணப்படுகிறது. ஆனால் இப்போது நம்பிக்கையற்று வெறும் சடங்கு நிலையிலேயே நடந்துகொண்டிருக்கிறது; அன்று நம்பிக்கைகொண்டு' நெஞ்சார்ந்த மமிழ்வுடன் நடத்தப்பட்டு வந்துள்ளது; இதுபோன்ற உண்மை களுக்கு ஆதாரமாக நமககுக் கிடைத்துள்ளது திண்டுக்கல் தருமராசர் கோயில் பற்றிய இச்சுவடி எனலாம்.

வேடச்சந்தையூர் நாட்டாண்மை வாக்குமூலம் எனும் சுவடி திண்டுக்கல் மாவட்டத்து வேடச்சந்தையூர் என்ற ஊர் பற்றியது. இவ்வூர் வேடசெந்தூர் என்றும் குறிக்கப்படுகிறது. இவ்வூரில், முதன்முதலாக வேடர்கள் ஆண்டுவந்ததாக இச்சுவடி குறிக்கிறது. பிறகு, அம்மைய நாயக்கன் எனும் பாளையக்காரன் வடக்கேயிருந்து வந்து, இங்கு ஆட்சியைப் பிடித்து ஆண்டதாகச் சுவடி குறிப்பிடு கிறது. அதன்பின், மைசூர்ப் படையெடுப்பும் இவ்வூர் மீது நடந்துள்ளதாகச் சில வரலாறுகளைச் சுருக்கமாகத் தொட்டுக் காட்டுகிறது இந்தச் சுவடி.

வேடச்சந்தையூர் நாகன்பட்டி நாட்டாண்மை எழுதிக் கொடுத்த வரலாறு எனும் சுவடியில், குறும்பர் என்போர் குறும்பை ஆடு மேய்ப்போர் என்றும், அச்சாதிப் பெண்டிர், அக் குறும்பாட்டினின்றும் உரோமம் அறுத்தெடுத்து, கம்பளி தயாரிப்பர் என்றும் அறியவருகிறோம்.

அகரம் முத்தாலம்மன் வரலாறு எனும் சுவடி கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் அகரம் என்ற ஊரில் (திண்டுக்கல் அருகே உள்ளது) உள்ள முத்தாலம்மன் கோயிலில் எடுப்பித்த விழா முறைகளை விரிவாகக் கூறுகிறது. இன்றும் இவ்வூரில் முத்தாலம்மன் விழா சிறப்பாக நடக்கிறது. இவ்வூர்க் கோயிலில் விழாவை நடத்துவதற்கு முன், சன்னதியில் பல்லி 'சொல்லும்' சகுனத்தைக் கேட்டுத் தொடங்குவர் என்ற செய்தி இச்சுவடியில் உள்ளது. இப்பழக்கம் இன்றும் அகரக் கோயிலில் உள்ளதாக அறிகிறோம்.

குட்டம் கிராமத்துக் குப்பாகவுண்டன் எழுதிக்கொடுத்த வரலாறு எனும் சுவடி, திண்டுக்கல்லுக்கு வடபகுதியில் இருக்கும் குட்டம் கிராமப்பகுதி வரலாறு கூறுகிறது. இப்பகுதியை முதலில் ஒரு கம்பளத்துப் பாளையக்காரன் ஆண்டதான ஒரு வரலாற்றுச் செய்தியை இச்சுவடி பெறுகிறது.

கல்வாரப்பட்டி நாட்டாண்மை எழுதிக் கொடுத்த வரலாறு எனும் சுவடி, காப்பிலிய நாட்டாண்மைக்காரர் கூற்றாக வருகிறது; விருபாக்ஷி பாளையக்காரன் கல்வாரப்பட்டிப் பகுதியை முன்பு ஆண்டிருந்த ஒரு குறிப்பை இது நல்குவதாக அமைகிறது.

இவ்வாறு, கொங்குமண்டல வரலாறுகள் எனும் இந்நூல் பல்லாற்றானும் வரலாற்று, மொழி உலகில் ஒரு சிறப்பிடத்தை வகிக்கிறது.

இத்தகு முயற்சிகளுக்குத் தொடர்ந்து ஆதரவு நல்கி வரும் தமிழ் ஆட்சிமொழி வளர்ச்சித்துறை அமைச்சர் அவர்களுக்கும், அத்துறைச் செயலர் அவர்களுக்கும், தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் திரு. நடன. காசிநாதன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

அன்பன்

**முனைவர் சு. சௌந்தரபாண்டியன்**

எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ.(ஆங்), பி.எட்., டிப்.வ.மொழி, பிஎச்.டி.

பதிப்பாசிரியர்

# INTRODUCTION

This volume on your hand is nothing but the edited works of original manuscripts collected by Colin Mackenzie (1754-1821)

Manuscripts have been reproduced here without changing or correcting the original. Method of publishing the inscriptions has been followed here.

Amidst puranic recount, we see innumeral historical evidences and sources in this collection which is exclusively on Kongu country.

Undeniably this will give impetus to researchers of not only history but also of language and culture of Tamil soil.

**Dr. S. Soundarapandian**
M.A(Tamil)., M.A.(Eng.), B.Ed., Dip. Skt, Ph.D.
Curator,
Government Oriental Manuscripts Library, Chennai-5

# பொருளடக்கம்

பக்கம்

# 1. கொங்கு மண்டல வரலாறு
(டி. 3133; ஆர். 7991)

## புரவிபாளையங் கோபணமன்றாடியிடத்துள்ள
## ஐந்து ஜாதி அல்லது
## கொங்கு மண்டல வரலாறு

*1.* **தாராபுரம்** துக்குடி **பொள்ளாச்சி தாலுக்கா புரவி பாளையம்** கோபணமன்றாடியிடத்தில் இருக்கும் ஐந்து ஜாதி வரலாறு என்ற புத்தகத்துக்கு நக்கல் :-

2. **கொங்கு மண்டலம்** பூர்வ வரலாறு

**ஜமதக்கனி** பகவான் என்ற இருஷியின் பெண் ஜாதி **இரேணுகாதேவி** யென்பாள் புத்திரனில்லாமல் தவஞ்செய்து கொண்டிருக்கிற காலத்திலே, மகாரிஷி வந்து பரசுராமன் என்று மழுவாயுதத்துடனே பிள்ளையாக வந்து, சகல சாஸ்திரங்களுங் கற்றுப் பிரபலனாகி இருக்கிற காலத்திலே, இருள்வகைச் சக்கிர வர்த்தியருள்ள ஆதித்தன் வங்கிஷத்திலே உதித்த காத்திகை

---

1. துக்குடி – துக்கடி என்றும் கூறப்படும்; மாவட்டத்திற்குள் அடங்கிய, தாலுகாவைவிடச் சற்றுப் பெரிதான, ஒரு பிரிவு. தாராபுரம் – கோவை மாவட்டத்தில், சின்னக்காம்பாளையம், சித்தரவுத்தன்பாளையம், கொளுஞ்சிவாடி ஆகிய ஊர்கள் சூழ, மாவட்டத்தின் தென்கிழக்கு ஓரமாக அமைந்துள்ள ஊர்.

பொள்ளாச்சி – கோவை மாவட்டத்தின் தென்மேற்குக்கரை ஓரமாக அமைந்துள்ள ஊர். அமரம்பாளையம், சமத்தூர், கோமங்கலம் புதூர் ஆகிய ஊர்கள் சூழ அமைந்துள்ள ஊர்.

புரவிபாளையம் – பொள்ளாச்சிக்கு வடமேற்கே உள்ள ஊர். இராம பட்டணம், தேவம்பாடி வடக்கிபாளையம் ஆகிய ஊர்களை அடுத்துள்ள ஊர். புரவிபாளையம் ஜமீன் என்றும் குறிக்கப் படும்.

நக்கல் – நகல் (Copy)

வீரரென்பான் வந்து, உள்ள ராசாக்களை வெட்டி, ரெத்த மெல்லாம் ஒரு குண்டலத்திலே விட்டு, முழுகி யெழுந்திருந்தான்! பரசுராமன் இது கண்டு பயந்து உண்டான காத்திகை வீரனைச் சயித்துப் பரசுராமனுக்கு அடிமை புகுந்தார்கள். அடிமை புகுந்த அரசமக்கள், அக்கினிக் குண்டத்துக்குக் காவலாக இருந்தார்கள்.

இந்த அக்கினி குண்டத்துக்குக் காவலுமிட்டு, வனத்திலே பரசுராமர் சிறிது காலம் யெழுந்தருளி வருகிற தருவாயிலே, அக்கினிச் சாலையைக் காத்திருந்த அரசமக்களை **அக்கினிவிஷமர்** என்று பேரிட்டார்.

3. அப்போது, அடியேங்களுக்கு] இருக்கிறத்துக்குத் தேசம் வேணும் என்று கேட்டுப் பரசுராமன் ஓமத்திரவியங் கொண்டு வந்து, சுளகை யெடுத்துத் தெற்கு நோக்கி எறிந்தார். அப்போது, சமுத்திரம் ஆயிரத்து நூற்றுக் காதம் வாங்கிப் போய்விட்டது. இந்தப் பூமி உங்களுக்கு உரிய தேசம் என்று கற்பித்து அக்கினி காரியம் வழுவாமற் செய்து, பிராம்மணரையும், குருவையும், தெய்வத்தையும் பேணுங்கள் என்றும், பெண்கொலை வேண்டாம் என்றும், கற்பித்து, வைகுண்டம் ஏறப் பரசுராமன் எழுந்தருளி யிருந்த கற்பனை படிக்கு இராச்சியம் செய்து, **சேரமண்டலம்** என்று பேரானது இதுக்குச் சிறப்புப் பெயர்.

4. **சேரமான் பெருமாளுக்குக் கொங்கர்** என்று பேர். அந்த முன்னிலையிலே **'கொங்கு மண்டலம்'** என்று பேர் நடந்து வந்தது.

5. இப்படிக்கொத்த கொங்கு மண்டலத்துப் பெருமை வரலாறு.-

பவானி, நொய்யில், காவேரி, ஆண்பொருந்தல், ஆளியாறு, திருமணிமுத்தாறு, தொட்டையாறு ஆக நதிகள் ஏழு ஆம்.

6. சிவாலயத்து வரலாறு:-

கருவூர், வெஞ்சை மாக்கூடல், கொடிமுடி, திருநன்னாலி, திருமுருகன் பூண்டி, அவிநாசி, பேரூர் ஆகத் திருப்பாட்டு பாடல் பெற்ற திருப்பதிகள் ஏழு.

---

3. வாங்கிப் போய்விட்டது - உள்ளே போய்விட்டது.

ஏழு நதியும், ஏழு பாடல் வீடும் உண்டானபடியினாலே, கொங்கு மண்டலம், ஏழுகரை நாடு என்று சொல்லப்பட்டது கொங்கு மண்டலத்து ஈரோட்டுக்கு பேர் பூராந்தபுரம், தில்லை, புகனி, வஞ்சி, யிராசை என்று அஞ்சு பேர் வந்து, இந்த தாராபுரம் சூழ்ந்த இருபத்துநாலு நாட்டுக்குவுள்விட விபரம்:-

1. நாயனூர் நாடு
2. கரைவளி நாடு
3. வங்காவூர் நாடு
4. ஆறை நாடு
5. அதப்ப நாடு
6. தென் பொங்கலூர் கால்நாடு
7. பொங்கலூர் கால்நாடு
8. காங்கய னாடு
9. தென்ங்கரை நாடு
10. வாயனக்கால் நாடு
11. நல்லூரக்கால் னாடு
12. காவடிக்கால் னாடு
13. தலைய நாடு
14. இடைபூசல் நாடு
15. பூந்துரை நாடு
16. வஞ்சி நாடு
17. காஞ்சிக் கொடால் நாடு

ஆக, தாராபுரம் சூழ்ந்த நாடு - 24

7. கோட்டை சூழ்ந்த வடபாரிச ஆறு நாடு:-

1. ஒடுவங்க னாடு
2. குருப்பை நாடு

---

6. பட்டியலில் 17 நாடுகளே உள; இதன் சரியான வடிவங் களைப் பதிப்புரையில் தரப்பட்டுள்ள பட்டியலோடு ஒப்பிட்டுத் தெளியலாம்.

7. பட்டியலில் 5 நாடுகளே உள.

கண்ணை காளத்தீசுவரன் கண்ணை நோக்காடு போலே காட்டி, கண்ணு ஒளுகியாச்சுது. "இந்தக் கண்ணுக்கு உன் கண்ணை அப்"பென்று திண்ணனுக்குச் சொல்ல திண்ணனும், தன்கண்ணைப் பிடுங்கி வைத்துவிட, மற்ற கண்ணும் நீர்விழா நின்றுது. அதுகண்டு, **திண்ணன்**, மற்ற கண்ணையும் பிடுங்கி வைத்தான்.

*12.* வைத்தவுடனே தன் பிரானுடைய திருமேனி சேர்ந்தார்! அதன் பின்பு, திண்ணன் என்கிற பேர் போய், கண்ணப்பரென்னும் பேரானது. இந்த **கண்ணப்பன்** செய்த கடுமைத்திறம் **சேரமான் பெருமாள்** கேட்டு, பரிகாரத்துடனே திருக்காளத்திக்குப் போய், பொன்றாகரியாற்றிலே முழுகி, திருக்காளத்தியப்பரையும் நமஸ்கரித்து, இந்தப் புல்வேட ரிருக்கிற தொத்தப்ப நாட்டு உடுப்பூருக்குப் போய், இந்தப்புல்வேடரிட ஒக்கப்பதினாலாயிரம் பேரைக் கூட்டிக்கொண்டு, **கொங்குமண்டலத்திலே** வந்து, இவர்களுக்கு சேரமான் பெருமாள் கற்பித்த ஊழியமாவது - நித்தம் கட்டளை நூற்றறுவது பூந்தோட்டம் காற்கும்படிக்கு சிலபேரை வைத்தான். வூர்வளிப் பாடிகாவல் காத்து, கள்வரானவர்களை ஆக்கினை செய்யும்படியாக சிலபேரை வைத்தான். பூந்தோட்டம் பார்த்த பூந்துனென்றும் பேரானான்; மெய்க்காவல் கார்த்தவன் காவுல்லனென்றும் பேரானான்; பாடிகாவல் சுற்றி, கள்ளரை பிடித்து வெட்டினவன் வெட்டுவனென்றும் பேரானான்; கொத்தப்ப னாட்டு உடுப்பூரிலும் சேரமான் பெருமாள் கொண்டுவந்து, கொங்குமண்டலத்திலே வைத்து ஒக்கப் பூந்துவர், காவலவர், வெட்டுவரென்றும் சொல்லப்பட்ட சாதி யுண்டானவர்கள் இப்படி யறியவும்.

*12.* இவ்வண்ண மிருக்கின்ற னாளிலே சகம் 700 வருஷம் செல்லாநின்ற காலத்திலே **வீரராசேந்திர சோழ தேவரின்** தேவி . . . . விஷப்பிணியானவள் . . . . காயங்கேட்டு வருந்த, காரியப்பேரை மூன்று வருஷம் சக்கரமாக வீணே வைத்துக்கொண்டு இருந்து . . . காயங் கொடாமல் **சேரமான் பெருமாள்** தள்ளி விட்டார்.

---

11. காளத்தி - காளஹஸ்தி என்று அழைக்கப்படும் இவ்வூர் தற்போதைய ஆந்திர மாநிலத்தில் உளது. திருக்காளத்தி என்பதும் இவ்வூரே.

ஆசையினாலே, வீரராஜேந்திரன் சோழன் படையெடுத்து, சேரமான் பெருமானையும் முடுக்கி, கொங்குமண்டலத்திலே வீரசோழ வளனாடென்று ஊரைப் பிரித்து நாடுங் கட்டிவித்து, வீரசோளீசுரமுடையாரென்று சிவலிங்க பிரதிஷ்டை செய்து, கோவில்களுங் கட்டிவைத்து, இப்படி கட்டளையிட்டு, தஞ்சாவூர் பட்டணத்தை விட்டுக் கருவூரைத் படை வீடாக்கிக் கொண்டு யிருந்து, ராச்சியம் செய்து கொண்டு யிருந்தார்கள். சோழர்களான வீரசோழன், விக்கிரம சோழன், குலோத்துங்க சோழன், இராசேந்திர சோழன், உத்தமசோழன், கரிகால் சோழன், இந்தச் சோழன் ராச்சியம் ஆண்டு, காலந் செயித பின்பு, பாண்டியர் வந்து, கொங்கு மண்டலம் ஆண்டார்கள்.

*13.* வீரபாண்டியன், சுந்தரபாண்டியன், திரிபுவன சக்கரவர்த்தி கோச்சடய மாறன், கோனேரிமை கொண்டான் இவர்கள் இராச்சியபாரம் ஆண்டதின் பின்பு மூன்று . . . முனியபெருமாள் என்கிற பாண்டியன் கொங்குமண்டல மாண்டபடியினாலே, கொங்கு பெருமானென்றும் பேரானான். இந்த கொங்கிற் பெருமாள், கொங்கு மண்டலத்திலே, காவுலவர், பூ வுலவர், வெட்டுவர் ஒழக்கந்தவறி, கள்ளுங் குடித்து, கறியும் தின்று. அஞ்சு மணிகோவணமுங் கட்டிக்கொண்டு, ஆயல் குழலூதி துண்டு பறையுங் கொட்டிக் கொண்டு இருந்தார்கள்.

*14.* இப்படி ஒழுக்கந் தவறியிருக்கிறார்களென்று கண்டு கொங்கு மண்டலத்துக்கு ஒழுக்கமுள்ள ஒக்கலவாள் வேண்டுமென்று பாண்டிமண்டிலத் திருப்பாலைக் குடியில் . . . வேளாளரையும் கேட்டார்கள். அதிலும் சில வேளாளரையுங் கொண்டு வந்து தென்பொங்கலூரார்கால்னாட்டு திருமணி பருத்தியூர் . . . சேதி மலையிலே வைத்தார்கள். இந்த வேளாளர் எல்லாரும் சேதி மலையிலே விடுதிவிட்டு யிருக்கிற காலத்திலே பால்வேளாளரை கூடாரத்திலே கள்ளுப்பானையும் இருக்கிறதைக் கண்டு பிரிந்து, வேற்றுமைப்பட்ட படியினாலே, கூடிபிரித்து தென்திசை வேளாளனானான்.

---

14. திருப்பாலைக்குடி – இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள ஊர்; ஆர்.எஸ். மங்கலம், திருவாடானை, ஆகிய ஊர்களை அடுத்துள்ளது.

*15.* இப்படிக் கண்டு ஒழுக்கமற்ற . . . . . வந்தவரெல்லாம் பூருவத்துக்கு ஆடுமாடு ஓட்டிக்கொண்டு மோருவிற்ற இடையரும் எடச்சியளும் . . . . பேரிட்டுக் கொண்டு இருக்கிறார்கள், . . . . . . . என்ற பட்டமும், . . . . . . என்கிற பட்டமும் ஆனபடியினாலே மோருவிற்று, தண்டிகையும் காவியாடையும் பூசியிருந்த படியினாலே கொங்கு மண்டலத்து வேளாரென்று இருக்கிறார்கள். சேரமான் பெருமாள் தொண்டைமண்டலத்து கொத்தப்பனாட்டு உடுப்பூரிலுங் கொண்டு வந்து, புல்வேடர் பதினாயிரம் ஒக்கலும் காவுலவர், பூவுலவர், வெட்டுபவர் என்று மிருக்கிறார்கள்.

*16.* கொங்குமண்டலத்துப் பூர்வ வரலாறாவது

பரசுராமர், சமுத்திரத்துத் தண்ணீரை ஆஞ்ஞையினாலே யகற்றிச் சேரமான் பெருமாளுக்குக் கொடுத்த பூமி கொங்கு மண்டலம்; சேரமான் பெருமாள் சேரன். சோழன், பாண்டியன் இந்த மூன்று இராசாக்களும் இராச்சியம் செய்து மகாமேருவிலே சோழன், புலிக்கொடியை எழுதினான்; பாண்டியன், மீனக் கொடியை எழுதினான்; சேரன் விற்கொடியை யெழுதினான். இப்படியே மகாமேரு அளவுக்கும் ஆண்டார்கள். விரும வங்கிஷத்து மகாவிருஷி புத்திரனானவர்கள் நாலுபேர் உண்டு. கலியாண வாசலுக்குக் கணக்கு எழுத, கண்டீசுவரனைக் கொண்டுபோய் வைத்தார்கள். அமராபதி பட்டணத்திலே தேவேந்திரன் வாசலுக்குக் கணக்கு எழுதும்படிக்கு யியமதற்காரனென்கிறவனை வைத்தார்கள். தன்மபுத்திரன் என்கிற பட்டணத்திலே எமராஜன் வாசலுக்குக் கணக்கெழுதும்படிக்குச் சித்திரபுத்திரனை வைத்தார்கள். பூலோகத்திலே சேரன், சோழன், பாண்டியன் இவர்கள் மூன்று பேரு வாசலுக்குங் கணக்கெழுதும் படிக்குத் திருக்கருணன் என்பானை வைத்தார்கள், திருக்கருணன் பிள்ளைகள் பூலோகத்துக்குக் கணக்கெழுதும்படிக்கு வைத்தார்கள் என்ற வரலாறு.

---

15. ஒக்கலும் – முழுவதும்



# 2. மறுதுரைக் கிராமம் ஆலாலசுந்தர பண்டிதர் வமிசாவளி

(ஆர். 7993; டி. 3135)

1. தாராபுரம் துக்குடி, காங்கேயம் தாலூக்காவுக்குச் சேர்ந்த மறுதுறை கிராமத்திலே யிருக்கும் ஆலாலசுந்தர பண்டிதர் என்னப்பட்டவருடைய வமிசாவளி முதலான வரலாறு என்ன வென்றால்,

பூர்வத்தில் சுந்தரமூர்த்தி யென்னப்பவர், தேவதா பிரயாசை யினாலே, திருக்காவலூரில், கௌசிக கோத்திரத்தில் சடையன் நம்பியார் என்னப்பட்ட சிவப்பிராமணன் சாதியில் இருக்கப் பட்டவருக்குப் புத்திரனாக அவதரித்து, சுந்தரமூர்த்தி என்னப் பட்ட பேர் பிரசித்திபட்டு, ஈசுவரர் வரப்பிரசாதத்தினாலே சிவமூல்லியமாய்த் தேவாரம் என்னப்பட்ட பாட்டுகள் அனேகமாய் ஸ்தலங்களிலே யெல்லாம் சொல்லப்பட்டவராய்ச் சேர மண்டலத்தில் சேர ராஜாவையும் கைக்கொண்டவராய்ப் போதையுடனே கைலாசத்துக்குப் போனார். அக்காலத்துக் கலியுக சகாப்தம் 905 வருடம். 905-ஆம் வருடம் சுந்தரமூர்த்தி கைலாசத்துக்கு எழுந் தருளுங் காலத்திலே, தன்னுடைய சிறு தகப்பனார் பிள்ளை பிரம்மநாதய்யன் என்னப்பட்டவருக்குத் தம்முடைய பேர் பூலோகத்திலே விளங்கத்தக்கதாக உபதேசங்கள் சமய விசேஷ ஞான நிர்வாணம் முதலான தச தீட்சாவிதியும் உபதேசம் செய்து, பட்டாதிகாரியாய்க் கும்பாபிஷேகஞ் செய்து வமிச பரம்பரையாய் ஆலாலசுந்தர பண்டிதர் என்னப்பட்ட நாமதேயம் வரப்பட்டது.

---

1. சுந்தரமூர்த்தி – 63 நாயன்மார்களில் ஒருவர்; சுந்தரமூர்த்தி நாயனார் யட்சகானம் என்று அ.கீ.சு. நூலகத்தில் ஒரு நூலும் வெளியிடப்பட்டுள்ளது. இவர் காலத்தைக் கலியுகம் 905 என்று இச்சுவடி கூறுவது பொருந்துமாறில்லை; சுந்தரர் காலம் பொதுவாகக் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு என்று கருதப் படுகிறது.

2. பிரம்மநாதய்யன் என்னப்பட்டவருக்கு ஆலால சுந்தர பண்டித ரென்னப்பட்ட பேர் ஈஸ்வரானுக்கிரகத்துனாலே சுந்தர மூர்த்திகள் சொல்லப்பட்ட தேவாரங்கள் முதலான கிரந்தங்கள் முதலான ஆகமங்கள் சோதனை பண்ணிக்கொண்டு சேரன் சீமையின் கொங்குதேசத்தில் காஞ்சிமா நதி தீரமான சேத்திரத்தில் ஆத்துமார்த்த, பறாற்த்த சிவபூசைகள் பண்ணிக்கொண்டு, மடாதிபதியாய் மறுதுறை ஸ்தலத்தில் வாசஸ்தரா யிருந்தார்.

3. அக்காலத்தில், சேரராசா கைலாசத்துக்குப் போகிற சமயத்தில் தம்முடைய தேசத்தில் உள்ள பூமிக்கு காணியாட்சிகாரர் களாய் இருக்கும்படியாக, . . . சுந்தரமூர்த்திகளுடைய உபதேசத் தினாலே, ஸ்வஞ்சனமான சிவபிராமணாளுக்கு காணியாட்சி தாராதத்துவம் பண்ணிப்போட்டுப் போனார்கள்.

4. மேல் எழுதப்பட்ட சிவபிராமணாள் சேர தேசத்தில் காணியாட்சிக்காரர்களாய் இருக்கும் காலத்தில், ஆலாலசுந்தர நயினார் என்னப்பட்ட பேர் பெறசுத்திப்பட்டவராய் மடாதிபதி களாய் இருந்தவர்களுடைய வமிசாவளி முதலான சறியகள் இதின் கீழ் எழுதி வருகிறது.

5. சாலிவாகன சகாப்தம் 1361 சித்தார்த்தி வருடம் முதல் சிறிது ஒளுகு ஏழாம் தலைமுறை ஆலாலசுந்தர பண்டிதர் நாளையில், சென்னிமலைக்கு சுவாமி தரிசனத்துக்குப் போயிருந்த சமயத்தில், வருஷம் வந்து, நொயிலாறு பெறுகி, பூர்ண பிறவாகம் வந்தபடி

---

2. ஈஸ்வர + அனுக்கிரகம் = ஈஸ்வரானுக்கிரகம்;
கிரந்தம் — நூல்; தீரம் — கரை;

3. தாராதத்துவம் - தாரை வார்த்து உரிமை வழங்குதல்.

4. சறியகள் - சரிதைகள்

5. சாலிவ்ாகன சகாப்தம் 1361க்கு நிகரான கிறித்தவ ஆண்டு 1439 A.D. ஆகும்;
நொயிலாறு - நொய்யலாறு; கோவை மாநகரின் குறுக்காக ஓடுகிறது;
வருஷம் - மழை;

யினாலே, சிவபூஜை காலந்தப்பிப்போகிறதென்று தம்முடைய மடத்துக்கு வரவேணுமென்று வந்த சமயத்தில், பூர்ணபிரவாக மாயிருந்த நொயிலாறு, இவர் வருகிற மட்டத்துக்கும் சலம் வடிஞ்சு, இவர் ஆறு தாண்டினவுடனே திரும்பவும் பூர்ண பிறவாகமாச்சுது.

6. இப்படிக்கு வம்சபரம்பரையிலும், அந்த மடத்துனுடைய சிவபூஜை நமது நாளிலே சிறிது மகுமைகளாய் நடந்துகொண்டு பிறசத்தி புருஷாளாய் இருந்தார்கள்.

7. சாலிவாகன சகாப்தம் 1706 பிலவங்க வருடம் ஆனி மாதம் 15-ஆம் நாள் தசமி சுக்கிரவாரம் பெற்ற சுபதினத்தில், ருக்கு வேத, யதுர் வேத, சாம வேத, அதர்வண வேத முதலான ஆறு சாஸ்திரங்களிலும், சரிகை கிரிகை, யோகம், ஞானம் என்னப் படாநின்ற சிவபூசா விதிக்கிரமமான சைவ சித்தாந்தத் தெளிவான ஆகமங்களில் காமிகம், யோகம், சித்தியம், கரணம், அசிதம், தீப்புத்தம், சாஸ்திரம், அகுசமானம், அப்பிறபேதம், சூட்சுமம், வீரம், தமதிகம், விசயம், விசுவாசம், சுயம்புவனம், மகுடம், விப்பம் விமலம், ரவரவம் சந்திரஞானம், சறுருத்துமம், சத்தானம், சித்தம், புரோகிரதம், வாதுளம், பரமேசுவரம், லளிதம், கிரணம், இப்படி சொல்லப்பட்ட இருபத்தெட்டு ஆகமங்களிலும், சைவம், பவுடிகம், மார்க்கண்டம், லிங்கம், கூர்மம், காந்தம், வராகம், மச்சம், வாமனம், பிரமாண்டம், வாருணம், விஷ்டகுணுவம், பாகவதம், நாதரதம், காருடம், பிரமம், பதுமம், பிரம்ம கைத்தவம், ஆக்கினேயம் என்னப் பட்ட பதினெட்டுப் புராணங்களிலும் அறுபத்துநாலு கலைக்கியா னங்களிலும் தொண்ணூற்றாறு தத்துவங்களுடைய னிலை தெரியும் பொருட்டாக, மந்திரம், பதம், விறனனம், புவனம், தத்துவம், கலை என்னப்படாநின்ற ஷட்டகாறும் விதியும், சமய விசேஷ ஞான நிர்வாண தீட்சாதி கும்பாபிஷேகமும், சிவசமய ஆகமம், சைவ சித்தாந்த யோக்கியமுள்ள ஆத்மீக தேசிகரனைவரும் கூடி, பீட்டாதி காரமும், யோகாதிகாரமும், ஞானாதிகாரமும், சிவஞான தரிசனமும் தெரியும்படி போதனம் செய்து, ஸ்தபன, சமகல்ப, புண்ணியாவாசன விக்கினேசுவர பூசித, தெட்சிணாமூர்த்தி அனுக்கியாபன, இமை சாத்தி, மிற்த்து, சமகற்ஷண, யாகாசல, மட்டபாற்சன, சுமக்கு வாற்ப்பண, வாஸ்து சாமகதி கவுதகபந்தன, ரட்சாபந்தன முதலான அறுபத்துநாலு கிரியையும், முப்பத்துரெண்டு முந்திராதி மார்க்க மான கிரியையுடனே சக்கரபிஷேக கும்பாபிஷேக முதலான

பிராமண பிரதிஷ்டா மந்திரத்துடனே சோடசோபகாரத்துடனே, பேரி, மத்தன, முளவ, சசவரி, சங்கு முதலான தேவவாத்திய கோஷத்துடனே ஆசுரி ஆபிஷேகமும் செய்து, ஆலாலசுந்தரபண்டித நாயனார் எண்ணப்பட்ட பேர் விளங்க செய்தார்கள்.

8. அந்த நாள் முதல் பக்தியுடனே சிவபூஜை பண்ணிக் கொண்டு மறுதுறையிற் குடியிருப்புக்காரனாய் இருக்கும் நாளையில் சாலிவாகன சகாப்தம் 1726 இரத்தாட்சி வருடம் ஆடி மாதம் 13-ஆம் நாள் நான் பண்ணிக் கொண்டு வந்த சிவபூசா மடத்திலே ஆத்துமார்த்த உடையவர் முதலானதும் ஆபரணங்கள் முதலான வையும் திருடன் கொண்டு போய் விட்டபடியினாலே, அந்த நாள் முதல் அந்த சிவலிங்கம் இல்லாமல் தீர்த்தபானமும் பண்ணுகிற தில்லை யென்று ஒரு பட்சம் தீர்த்தபானம் இல்லாமல் இருந்தபடி யினாலே ஆடி மாதம் 28-ஆம் தேதி, நான் அந்த ஆத்துமார்த்த இலிங்கம் தற்செயலால் பூசை பெட்டி சம்புடத்தில், காஞ்சிமா நதிக் கரையில், சுவாமி தயவாய்ப் பெரியவர்கள் தெய்வ பிராம்மணர்கள் அனுக்கிரகத்தினாலே வந்து இருந்து, சகலமான பேரும் அறியத் தக்கதாய் வந்து சுவாமி தரிசனமாயிற்று.

9. அந்த நாள் முதல், சிவபூஜை பண்ணிக்கொண்டு மடாதி பதியாய் மறுதுறை குடியிருப்புக் காரராய் இருக்கிறேன்.

முற்றும்

---

7. முளவ – முழவு வாத்தியம்;
சோடச + உபசாரத்துடனே = சோடசோபசாரத்துடனே.
சோடசம் – பதினாறு;

8. ஒரு பட்சம் – 15 நாட்கள்



# 3. மறுதுறை கிராமத்துச் சைவமடாதிபதி ஆலால சுந்தர பண்டிதர்க்குரிய பூதான சிலாசாசனம்

(டி. 3136; ஆர். 7994)

*1.* ஷை கிராமத்து, மறுதுறை கிராமத்திலே யிருக்கும் **ஆலால சுந்தர** பண்டித நாயனாருக்கு மறுதுறை கிராமத்திலே நடந்து வந்த பூமிகளுக்குச் சிலாசாசனத்துக்கு நக்கல் :—

ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீமன் கிருஷ்ணராயர் காரியத்துக்குக் கர்த்தரான கொண்டம நாயக்கனுக்குச் செல்லாநின்ற தாது வருடம் வைகாசி மாதம் 22-ஆம் நாள் காங்கேய நாட்டு மறுதுறையில் ஊரும் உரானவரும் நம்முடைய தம்பிரானார் பட்டியாருக்கும் ஊரில் ஆலாலசுந்தர பண்டித நாயனாருக்கு நொய்யிலாற்றுக்கு வடகரை யில் குளமும் எங்கள் முதன்மையில் சொவந்திரமும் கல்லணை நீர் போக்கி, அக்கரையில் பாதியினில் அளவாக மாவடை மரவடையும், பட்டியாருக்கு ஒன்று பாதியும், ஆலாலசுந்தர பண்டித நாயனாருக்கு ஒன்று பாதியுமாகக் கொடுத்தோம். செம்பிலும் சிலையிலுமாக காண பூர்வமாக சந்திராதித்தியர் உள்ளவரைக்கும் நடப்பிச்சு வரும்படிக்குக் கொடுத்தோம். இந்த தருமம் இகழ்ச்சி பண்ணின பேர்கள் வழியெச்சம் அறுவராகவும்.

ஒப்பம்

---

1. காங்கேய நாடு – தாராபுரம் தாலுகாவின் வடக்குப் பகுதி யாகிய காங்கேயம், வெள்ளைக்கோயில் வட்டாரங்கள்.
சொவந்திரம் - சுதந்திரம்

# 4. சிவகிரி சுப்பிரமணிய சுவாமி ஸ்தல வரலாறு

(டி. 3137; ஆர். 7995)

1. கோயமுத்தூர் ஜில்லா, ஈரோடு, தாலுக்கா, சிவகிரி சுப்பிரமணிய சுவாமி ஸ்தல வரலாறு ஆதிமுதல் அந்தம் வரைக்கும் ஷி ஸ்தலத்தார் எழுதிக்கொடுத்த கைபீயத்து என்னவென்றால்,

நைமிசாரண்ணியத்திலே சகலமான ரிஷிகளும் சூதரைப் பார்த்து, பச்சிம பில்வாரண்ய ஸ்தலம் ஆத்யம் முதல் சுப்பிரமண்ணிய சுவாமி வந்த பிரகாரமும், இது முதலான மகிமைகளெல்லாம் விஸ்தாரமாகச் சொல்லச்சொல்லி கேட்டவிடத்தில், சூதர் சொல்லுகிற பிரகாரம்.

பூர்வம் காலாந்தரத்திலே, கைலாச பருவதத்திலே பரமேசுவர தரிசணார்த்தமாகப் பிரமாதி தேவர்கள் வந்து, ஓரானொரு பழத்தை காணிக்கையாக வைத்துப் பிரதட்சிண நமஸ்காரம் பண்ணி ஸ்தோத்திரம் பண்ணுகிறபோது, சுப்பிரமணியரும் விநாயகரும் 'இந்தப் பழம் உனக்கு, எனக்கு'' என்று சண்டைபண்ணிக் கொண்டார்கள்.

2. அந்த வேளையிலே பார்வதி பரமேசுவரன் அவர்களுடைய சண்டையைப் பார்த்து, புத்திர வாட்சல்லியத்தினாலே இதெல்லாம் இன்னவனுக்கு என்று சொல்லமாட்டாமல், புத்திராளைப் பார்த்து லீலையாக ஒரு வார்த்தை சொன்னார்கள். அது என்னவென்றால், ''குழந்தைகள் நீங்கள் ரெண்டுபேரும் பூப்பிரதட்சிணம் பண்ணிக்

---

1. சிவகிரி – பெரியார் மாவட்டத்தில், தனி நகரப் பஞ்சாயத்தாக உள்ளது.
ஈரோடு – பெரியார் மாவட்டத்தில், தனி நகராட்சியாக விளங்குகிறது.
ஆத்யம் – தொடக்கம்;

2. வாட்சல்லியம் – வாத்சல்யம் – பாசம்;
பூப்பிரதட்சிணம் – உலகை வலம் வருதல்;

கொண்டு வந்து, எங்களை முன்னதாக யார் தொடுகிறார்களோ அவனுக்கு இந்தப் பழம்'' என்று சொன்னார்கள்.

3. அந்த வார்த்தையைக் கேட்டு, அதே க்ஷணத்தில், சுப்பிர மணிய சுவாமி மயூர வாகனத்தின் மேலேறிக்கொண்டு, பூப்பிரதட்சி ணார்த்தமாக, அதிவேகத்துடனே போனார்.

அப்போது, விக்கினேஸ்வரர், புத்தி விசேஷத்தினாலே யோஜனை பண்ணி, அனேக கோடி பிரம்மாண்டங்களெல்லாம் வயிற்றுக்குள் வைத்துக்கொண்டிருக்கிற தன்னுடைய மாதா பிதாக்களை பிரதட்சணமாக வந்து, அந்தப்பழத்தை எடுத்துக் கொண்டார். அப்போது, பார்வதி பரமேஸ்வரன் மந்த ஆசகத் துடனே பிரமாதி தேவர்களைப் பார்த்தார்கள். அப்போ, பிரமாதி தேவதைகள், பார்வதி பரமேசுராளுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு, "அந்தப்பழம் விநாயகருக்குச் சரி" யென்று விதிச்சார்கள்.

4. இப்படி இருக்கச்சே, பூப்பிரதட்சிணம் பண்ணிக்கொண்டு சுப்பிரமணியசுவாமி வந்து சேர்ந்தார். அப்போ அங்கே நடந்த கதைகளெல்லாம் கேட்டு, மாதா பிதாக்களிடத்திலேயும் பிரமாதி தேவதைகளிடத்திலேயும் அத்தியந்த கோபத்தோடே கூட, அந்தரத்தானமாய்ப் போய், காவேரி தீர்த்தத்திலே, மேலுகரையிலே ஆதிசேஷருக்கும் வாயுபகவாருக்கும் பூருவம் வந்த காரணத்தினாலே, மகாமேருவிலே இருந்து வந்து விளுந்து இருக்கிற . . . சீரங்கத்திலே வந்து சேர்ந்து அந்த சீரங்கத்தினுடைய சவுந்தரியத்தினுடைய விசேஷந் தெரிந்துகொண்டு வருகிறபோது, மேற்குத் திக்கிலே பச்ச பில்வாரண்யத்தைப் பார்த்து, பரமசந்தோஷத்துனாலே, பில்வமரத்தடியிலே வந்து உட்கார்ந்தார்.

அங்கே இருந்த ரிஷீபராள் சுப்பிரமணியசுவாமியைக் கண்டு, வாசம்பண்ண வேணுமென்று பிரார்த்திக்கிற போது, அவர்களுக்குப் பிரீதி விஷயமாக அங்கேயே வாசம் பண்ணுகிறார்.

---

3. மயூர வாகனம் – மயில் வாகனம்

பிள்ளையும் ரிஷீசுவராள் சூதரைப் பார்த்துக் கேட்ட பிரகாரம் என்னவென்றால், ஒரு ஸ்தலத்திற் சீறங்கத்திலே இருக்கிற பில்வாரண்ய ஸ்தலத்துக்கு பிரத்தியோகமாக சிவகிரி என்று பேர் வந்த காரணம் என்னவென்று கேழ்க்கிறபோது, சூதபுராணிகர் ரிஷீசுராளைப் பார்த்துச் சொன்ன பிரகாரம்-சுலோகம் (வடமொழியில்) இதுக்கு அர்த்தம்:-

சுப்பிரமணிய சுவாமி, கைலாச பருவத்திலே இருந்து வந்து, பச்சிம பில்வாரண்யத்திலே, பில்வ மரத்து அடியிலே உட்கார்ந்த போது, இந்தப் பருவதமானது, சிவமாயி, மங்களகறமாயி இருக்கிறது. என்ற படியினாலே சிவகிரி என்று பெயர் வந்தது.

5. பின்னையும், அந்த ஸ்தளமகிமை என்னவென்றால், தருமபுத்திராதிகள், அக்கியான வாச அந்த ஸ்தளத்திலே வந்து பதினஞ்சுநாள் சுப்பிரமணிய ஸ்தலத்திலே தவசு பண்ணிக் கொண்டு பதினஞ்சுநாள் பூசை பண்ணினார்கள். அப்போ, சுவாமி பிரதட்சணமாய் வந்து, கேட்ட வரங்களெல்லாங் கொடுத்து, அநுகிரகணம் பண்ணிப்போட்டு அந்தர்தானமாயினார். அதற்கு மேலே, தர்மபுத்திராதிகள் கிழக்குத் திக்கிலே வந்து வன்னிமரத்தில் தங்கள் தங்கள் ஆயுதங்களை ஒசற கட்டி வச்சிட்டு, வேறே வேஷம் போட்டுக் கொண்டு சுப்பிரமணியசுவாமி அனுக்கிரகத் தினாலே இன்ன பேறுகள் என்றும் அறியப்படாத பேர்களாக விராடநகரமான பெரியதாராபுரம் வந்து சேர்ந்து மச்சமன்னன் அவைக்களனில் அமர்ந்திருந்தனர்.

6. ஒரு வருஷ காலம் அப்படி பண்ணிப்போட்டு, தனக்குச் சத்துருக்களான துரியோதனாதிகளைச் சம்மாரப் பண்ணிப் போட்டு பட்டஸ்தராய் இராச்சியப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு சுகத் திலே இருந்தார்கள்.

7. பின்ளையும் அந்த ஸ்தலத்தின் மகிமை என்னவென்றால், கோதாவரி தீரத்திலே அளகாபுரிக்கு சமானமாக கேதாரம் என்று ஒரு அக்கிரகாரம். அந்த அக்கிரகாரத்திலே, சுமதி என்னும் பேரோடே, குபேர சம்பத்தோடே கூட ஒரு பிராமணன்; அவனுக்கு

---

5. அந்தர்த்தானமாயினார் - மேலே சென்றார்

6. சம்பத்து - செல்வம்

குணவதி என்கிற மனைவி வெகுகாலம் புத்திரனில்லா குறை; மகா விசனத்தினாலே, புத்திரனுண்டாகிற நிமித்தியம் அனேகம் சிவாலயம், விஷ்ணு ஆலயம், அன்ன சத்திரம் முதலான இன்னம் அனேக தர்மங்கள் பண்ணியும் புத்திரனுண்டாகாமல், மகா விசனத்துடனே சுமதி, மனைவி குணவதியுடன் வந்து முருகனிடத்துப் புத்திரப் பேறும் பெற்றனர் என்பது அருணோதயத்தில் சுப்பிரமணிய சுவாமியானவர் விருத்தாந்த பிராமண உருவத்தோடே வந்து, "நீங்கள் ஒரு மாதம் பில்வாரண்ணியச் சேத்திரத்திலே வாசம் பண்ணினீர்களேயானால், உங்கள் மனோரதம் நிறைவேறுகிறது என்று சொல்லிப்போட்டு, அந்தர்த்தியானமாய் போய் விட்டார்!

அந்த மறுநாள், மத்தியான காலத்திலே, தான் கண்ட சொப்பனத்தைச் சொல்லிக் கொண்டு யிருக்கிறபோது, ஒரு சித்த புருஷர் வந்தார். அவரைக் கண்டு, வெகு சந்தோஷத்துடனே அன்ன பானாதிகளைக் கொடுத்து, மரியாதை பண்ணினார்கள். அப்போதந்த சித்த புருஷர் தம்முடைய தியானத்தினால், அவாள் மனோ அபிப்பிராயம் தெரிஞ்சு கொண்டு போனார்.

பில்வாரண்ணிய க்ஷேத்திரம் வந்து சேர்ந்து, ஸ்கந்தத் தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணி, சுவாமியைப் பூஜை பண்ணிக்கொண்டு தபசு பண்ணுகிறபோது ஒரு மாசத்துக்கு மேலே அந்த குணவதி என்கிறவள் கெர்ப்பமாய் வருஷம்மானதும் பேரிலே மன்மத சமான ராசகுமாரன் [பெற்று], சந்தோஷத்துடனே சுவாமியைப் பூசைபண்ணி கொண்டு, அங்கேயே வாசம் பண்ணிக் கொண்டு இருந்தார்கள்.

8. பின்னையும் அந்த ஸ்தலம், பூர்வம் சப்தரிஷிகள் அனாவிறட்டியத்தினாலே கெளதம ரிஷி ஆசிரமத்திலே போய், அனாவிறட்டி பரிகாரமாகிற மட்டுக்கும் அவ்விடத்தில் வாசம் பண்ணிப் போட்டு, தங்கள் தங்கள் ஆசிரமத்துக்குப் போக வேண்டியதுக்காக உத்திரவு கேட்குமிடத்து, அந்த கெவுதம முனியீசுரர், அப்படி உண்டாவதுனாலே முந்த ஸப்தரிஷிகள் மாயையினாலே கோவு உண்டுபண்ணி, அந்த கோவே சுத்தி பண்ணாப் போலே. வஞ்சனையினாலே பண்ணிவிச்சார்கள். அதை கெவுதமர் தெரிஞ்சிகொண்டு சாபம் கொடுத்தார். அந்தச் சாபம் பரியாறமாறு நிமித்தியம் பிற

---

7. மனோரதம் – ஆசை

8. பரியாறமாறு நிமித்தியம் – பரிகார மாற்றத்திற்காக

இடங்களெல்லாம் சுற்றிப்போட்டு, எங்கும் சாபம் நிவாறண மாகாமல், பச்சபில் வாரண்ணிய ஸ்தலம் வந்து சேர்ந்து, ஸ்கந்த தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணி, சுவாமி தெரிசனமும் பண்ணிக் கொண்டு, சிறிது நாள் அவ்விடத்திலே வாசம் பண்ணிக் கொண்டு இருந்தார்கள். இருந்ததின் பேரிலே, சாப நிவாரண மாச்சுது. அதுக்கு மேல், ஈசான்னியத்திலே சிவபிரதிஷ்டை விஷ்ணு பிரதிஷ்டை பண்ணிப்போட்டு, தங்கள் தங்கள் ஆசிரமத்துக்குப் போனார்கள்.

9. பின்னையும் அந்த ஸ்தலம் ஆத்தியம் என்னவென்றால், தேவேந்திரன், தன்னுடைய ஆங்காரத்தினாலே தூருவாச ரிஷியீசுரரை அவமானம் பண்ணி, அவருடைய சாபத்தினாலே தன்னுடைய ராச்சியம் சத்துரு வசமாய்ப் போய், வெகுகாலம் அலைந்து. குருவினுடைய வாக்கியத்தினாலே பச்ச பில்வாரண்ணிய ஸ்தலம் வந்து சேர்ந்து, சிறிது நாள் தபசு பண்ணினதின் பேரிலே, சுவாமி பிரதட்சணமாய் அனுக்கிரம் பண்ணினதினாலே, சத்துருக்களை எல்லாம் எதாபிரகாரம் தன்னுடைய இராச்சியத்தை அடைஞ்சான்.

பின்னையும் முசுகுந்த சக்கரவர்த்தி பூர்வம் பிராமணர்களை உதாசீனம் பண்ணி, அவமானம் பண்ணினதினாலே, சிறிது நாள் இராச்சியம் விட்டு அலைந்து, இந்தப் பில்வாரண்ணிய ஸ்தலம் வந்து சேர்ந்து, சிறிதுநாள் தபசுபண்ணிச் சுவாமியைப் பூசை பண்ணினார். அதுவின் பேரிலே, பிராம்மாணவமான பாபம் பரிகாரமாய்த் தம்முடைய இராச்சியத்தை யடைந்து சுகித்திருந்தார்.

பின்னையும், பிரகஸ்பதி புத்திரன் கஜன், பில்வாரண்யத்திலே தபசு பண்ணிச் சுக்கிராச்சாரியரிடத்திலிருந்து மிருத சஞ்சீவினியை இந்தவிடத்தே யடைந்தான்.

10. அதற்குப் பிற்காலம், காலாந்திரங்களிலே யிருக்கப்பட்ட இராசாக்கள் கூடி. தேவஸ்தானத்துக்குத் திருப்பணி முதலானவைகள் ஜீர்ணோத்தாரம் முதலானவை பண்ணிக்கொண்டு வந்தார்கள்.

1807.ஆம் வருடம் மே மாதம், 13-ஆம் நாள்; ஸ்த்தானிகம் முத்தையண்ணயெழுத்து.

---

9. எதாபிரகாரம் – ஏற்கனவே இருந்தபடி

10. ஜீர்ணோத்தாரம் - புனரமைப்பு

# 5. கோயமுத்தூர் வரலாறு

## (டி. 3073)

### கோயமுத்தூறு தாலுகாவுக்குச் சேந்த கசுபா கோயமுத்தூற் கைபீது

1. யென்னவென்றால்,

பூற்வத்தில் பிப்பலராண்ணியட் சேத்திரத்தில், பம்ச்சக் குரோச மத்தியில், புறாணங்களுலே சொல்லப்பட்ட ஸ்தளங்களிலே **மறுதமலை** சுப்பிரமண்ணிய சுவாமி அனேக தேவதைகளாலே றிஷிகளாலே பூசைக்கொண்டருளிய சுப்பிரம்மண்ணிய சுவாமி யென்று பேருறு ஸ்தளபுராணத்துலே சொல்லிவருகிறது.

பிரசுத்தமான ஸ்தளமான படியினாலே, பூர்வத்தில் அந்தந்த காலத்து ராசாக்கள் சீறனோதாரணம் பண்ணி, கிராமங்கள், பூமிகள் விட்டு, வுச்சவ ஏதோச்சவங்கள் நடப்பிவிச்சு பிரசுத்தி ஸ்தளமாக வெளங்க பண்ணிக்கொண்டு வந்தார்கள்.

யிதுக்கு தகவலா யிறுக்கப்பட்ட ஸ்தளபுராணங்கள் முதலான தாம்பிர சாசனங்கள் காலாந்திரங்களிலே, ராசீகங்களிலே கைசோறந்து போயிவிட்டது.

சிலாசாசனங்கள், காலாந்திரங்களிலே ஆலயம் சீரணோத் தாரணம் பண்ணுகுர காலங்களிலே கல்லுகள், மாராட்டமாயி போனபடியினாலே, யெளுத்துகள் தெரியவில்லை.

2. கோயமுத்தூர் வூரு வுண்டாகிய கைபீது :-

பூற்வத்தில், பிப்பிலாரண்ணியம் சேத்திரத்துக்கு சேந்த, வனாந் திரங்களாயிருந்த னாளையில், அந்த கானல்களுலே பதிகள்

---

1. கோவை - கோவை மாவட்டத்துத் தலைநகர்;
2, பிப்பிலாரண்ணியம் - அரசமரக்காடு;

போட்டுக் கொண்டு, அந்த பதிகளிலே மலசற் சஞ்சாரம் பண்ணிக் கொண்டு இருக்கும் னாளையில், அக்காலத்தில் பதிகளுக்கு முதம காறகளாஇ யிருக்கப்பட்டவர்களுடைய பேற்களாலே கோன மூப்பன்பதி யென்றும், போமூப்பன்பதி யென்றும் இப்படிக்கி பதி களுக்கு பேற்வுண்டாயி இறுந்தது.

3. அதின் பிர்க்காலம், கோனமூப்பன்பதி யென்று பதிக்கு பேற்வுண்டாஇ இருக்கும் நாளையில், அந்த பதிக் கானல்களிலே சம்ஞ்சாரம் பண்ணிக் கொண்டு இருக்கப்பட்ட கோனமூப்பனுக்கு, ஒரு னாள் சமயத்தில் ஒரு விறுட்சத்தின் கீளை துறங்கியானது வுத்துபத்தியா யிறுந்து, அந்த மலசனுக்கு தென்ப்பட்டு அந்த மலசனெ பூசை பண்ணிக் கொண்டு வரச்சொல்லி, சொன்ப் பனத்துலே சொன்னபடியனாலே, அந்த கோனமூப்ப னென்ங்குர மலசன் பூசை பண்ணிக் கொண்டு பதியிலே வாசம் பண்ணிக் கொண்டுயிறுந்தான்.

4. அதின் பிர்க்காலம், கோனமூப்பன் யென்ங்குரவன் பதியிலே வாசம் பண்ணிக்கொண்டு துறங்கிய பூசை பண்ணிக்கொண்டு யிறுக்கும் னாளையில், அக்காலத்துக்கு பாளையப்பட்டாக ஆண்டு கொண்டு யிருக்கப்பட்ட வடவள்ளி ஈசுரமூர்த்திக்கவுண்டன் வமுசத்தில்லுள்ள பெரியோர்களில் மசக்கவுண்டன் யென்ங்குரவன் நாளையில், கோணமுப்பன் பதியிலே துரங்கி சொப்பனத்தில் சொல்லி, மலச்னாலே பூசை நடத்தி வச்சுக்கொண்டு வருகுற சமாசாரம் கேள்விப்பட்டு, அக்காலத்தில் பாளையப்பட்டு ஆண்டு வரப்பட்டவாள் கானல்களுக்கு வந்துபாத்து, கால்வெட்டி சோதிச்சு கோனமுப்பனுக்கு பிரதிட்சமான துரங்கிக்கி கோயில்கட்டிவிச்சு, மூலவிக்கிரஹம், வுச்சவிக்கிரஹங்கள் பண்ணிவிச்சு, கோயில் பிறத்திட்சை பண்ணி, கோனமூப்பனுக்கு பிரதிட்சமானபடியினாலே கோனம்மனென்று பேற்பெரசுத்தியாக சனங்களுக்கு கோரின அபீஷ்டம் சித்திக்கும் படியாக செக்கியுள்ளதாயி பிரசுத்தியாச்சுது.

---

2. சய்சாரம் - சஞ்சாரம்; கீளை - கீழே;
3. துறங்கி – கல்;
4. உச்சவிக்கிரகம் - உற்சவ விக்கிரகம்;

அந்த கானல்களுலே வூரு வுண்டாக்க வேணுமென்று. கானல் வெட்டி சோதிக்கும் யிடத்தில், கோனம்மன் சன்னதிக்கி தென் பரத்தில், பூர்வத்தில் சோள பிரதிஷ்டையான சங்கமேசுர சுவாமி யும், அகிலாண்டேசுவரி அம்மனும் தென்ப்பட்ட படியனாலே, சங்கமேசுர சுவாமி அகிலாண்டிசுவரி அம்மனுக்கு ஆலயம் கட்டி விச்சாற்கள்.

சங்கமேசுர அகிலாண்டீசுவர சன்னதிக்கி தென்பரம் கரிவரத ராசபெருமாள் தென்பட்ட படியனாலே, அந்த சன்னதிக்கு ஆலயம் கட்டிவிச்சு, தேவாலயங்களுக்கு பூசைகள் நடப்பிவிச்சுக் கொண்டு வந்தார்கள்.

5. கோனமூப்பன் பதியிலே, கோனம்மன் உத்திபத்தியாயி செகித்தி வுள்ளதாயி அகப்பட்டு சனங்களுக்கு அவாளவாள் அபீஷ்ட்டம்ங்களை வரங்கள் குடுத்துக்கொண்டு யிறுக்கும் நாளை யில், வடவள்ளி பாளையப்பட்டு ஆண்டு வரப்பட்ட மசக் கவுண்டற், அந்த பதிக்கானல்கள் யெல்லாம் வெட்டிவச்சு, வீடேத்தி. கோயம்முத்தூற் யென்ங்குற நாமதேயம் வச்சு கோய முத்தூருக்கு வுக்கிர தேவதையான கோனம்மன் சன்னதிக்கி படித்திரம் வுச்சவரதோசவங்கள் முதலானதும் நடப்பிவிச்சுக் கொண்டு வந்தாற்கள்.

அதின் பிர்க்காலம், கோயம்முத்தூற் யென்ங்குற பேற் பிர சுத்திப்பட்டு, கோனம்மன் சன்னதி-1, சங்கமேசுர அகிலாண்டேசுவரி சன்னதி-1, கரிவரதராச பெருமாள் சன்னதி-1, மூணு சன்னதிக்கும் ரதோச்சுவம் முதலான வுச்சவங்களும் நடத்திக்கொண்டு, பாளைய காற் பாளையப்பட்டு ஆண்டுவரப்பட்டவர்கள் நாள் வரைக்கும் பிரபலமாயி நடப்பிவிச்சுக் கொண்டு வந்தார்கள்.

6. அதின் பிர்க்காலம், ராய சமுஸ்தானத்தாற் மதுரை சமுஸ் தானத்தாற் நாளையிலே கோயமுத்தூறுக்கு கோட்டை போட்டு,

---

4. பெரசுத்தியாக - பிரசித்தியாக;
அபீஷ்டம் சித்திக்கும்படியாக - விருப்பம் நிறைவேறுமாறு;
தென்பரம் - தென்புறம்;

5. செகித்தி - சக்தி; உத்திபத்தி - உற்பத்தி;
ரத + உற்சவம் = ரதோற்சவம்;

கோயமுத்தூற் கெடி பண்ணிக் கொண்டு அரமனையார் சனம் முதலானதும் டாணயம் போட்டுக் கொண்டு யிருந்தபடியனாலே, கோயமுத்தூற் கெடி யென்று கோயமுத்தூறுக்கு யானை மலை பனிரெண்டு பாளையப்பட்டு யென்றும், கணுவாயிக்கு கீள்ப்பட்டு பதினெட்டு கெடியில் பெரிய கெடியாக பேற் பிரசுத்தி யாச்சுது.

7. அந்த னாள்முதல், கோனம்மன், சங்கமேசுர அகிலாண்டீசுவரி அம்மன், கரிவரதராசசுவாமி யிந்த மூணு சன்னதிக்கும் அந்தக்காலத்து ராசாக்கள் பூசை படித்திரம் முதலாகிய உச்சவங்களும், கோனம்மனுக்கு ரதோச்சவம் செரப்பாயி நடப்பிவிக்குக் கொண்டு வந்தார்கள்.

8. அதின் பிர்க்காலம், சாலீவாகன சகாபுதம் 1690க்கு மேல் மயிசூரு கற்த்தாக்கள் நவாபு அயிதரல்லி துரத்தனத்தில் கணுவாயிக்கு கீள்ப்பட்ட கெடிகளுக்கெல்லாம் சருவாதியாரியாக யிருந்த மாதே ராசா அவற்கள், கோயமுத்தூற் பட்டணத்து நடுவே மஹடி கட்டி, சருவாதிகாரம் பண்ணிக்கொண்டு யிருந்தாற்கள். மாதே ராசா அவர்கள், பேரூற் ஸ்தனத்திலே தெப்பக்கொளமும் கட்டிவிச்சு, னாலு திக்குலேயும் திருகணாம்பி சங்கரய்யனவற்கள் மகன் மாதய்யன் சேவை யென்று கல்வெட்டு போட்டு யிருக்குராற்கள்.

9. கோயமுத்தூறு கோனம்மன் மஹா உக்கிர சகுத்தியாக வருஷ பிரதியும் உச்சவரதோச்சவம் நடந்துகொண்டு வருகுறது.

கோயம்முத்நூறு பட்டணம் கெழக்கு மேற்க்கு அரைனாளிகை வளி, தென்வடல் அரைனாளிகைவளி, யிதுக்குள்ப்பட்ட பிராமணாள் முத்லாகிய வீடுகள் ரெண்டாயிரம் வீடுகள் யிருக்குறது.

---

6. கெடி - நகரம்; டாணயம் - காவல்;

7. செரப்பாயி - சிறப்பாய்;

8. சாலிவாகனம் 1690க்கு இணையான கிறித்தவம் 1768 A.D. ஆகும்; அயிதரல்லி - ஹைதர் அலி; மஹடு - ஊதுகுழல்; ஆராய்ச்சி மணியைப் போன்றது போலும்;

9. சகுத்தி - சக்தி;
நாழிகை வழி - ஒரு நாழிகை நேரத்தில், ஒரு மனிதன், இயல்பாக எவ்வளவு தூரம் நடப்பானோ, அந்தத் தூரமே ஒரு நாழிகை வழி எனப்படும்.

மாதே ராசா னாளையிலே காசி லிங்கம், தரிவிச்சு, காசி விசுவனாத சுவாமி, யென்று ஆலயம் கட்டிவச்சு, பிரதிஷ்டை பண்ணி, பூசை முதலான உச்சவங்கள் நடப்பிவிச்சுக் கொண்டு வந்தார்கள்.

*10.* இப்படிக்கு, கோயமுத்தூற் ஸ்தனத்தார் யெளுதிவிச்ச கைபீது.

1. தானிகுசமல்லன்
2. குப்பய்யன்
3. குருக்கள் றாமய்யன்
4. சமரய்யன்
5. குட்டி ஆயன்
6. முத்துக்கோணி ஆண்டி

---

10. இந்த அறுவரும் கையொப்பம் இட்டுள்ளனர்.



# ௬. வூத்துக்குளி பாளையகாற் காலிங்கறாய கவுண்டர் பேறுக்கு யெளுதப்பட்ட கடுதாசுக்கு நக்கல்

(டி. 3045)

டிம்மி பேப்றிலே எழுதியது.

1. ஸ்ரீமத் சகலகுண சம்பன்னறான சகல தற்ம்ம பிறீதிபாலக றான, பரதுசன சிந்தாமணியனான, அகஷ்தலட்சுமி பிறசன்னறான வெகுசன பரிபாலகறான, னித்தியான்னதான வினோதரான, மகாமேருவுக்கு சரிசமான தீரரான, ராசராசஸ்ரீ ஊத்துகுளி காலிங்க றாயக் கவுண்டற் அவர்களுக்கு ராசமான்னிய ராசஸ்ரீ பாலக்காட்டு கோட்டை மேசற் செமீசு ரமலீசாயபு அவற்கள் மெத்த மெத்த சலாம்!

2. வெம்பாயில் பவுசுதாற் மகாராசஸ்ரீ றாசமானிய றாசஸ்ரீ சகல பவுசுக்கெல்லாம் பெரிய சென்னல் அவற்கள், சித்தியோட்டு சாயபு அவர்கள், ராசஸ்ரீ செண்டறல் அட்டலீ சாயபு அவற்கள், மலையாளத்துக்கெல்லாம் கம்சல் சாயபு துரையவற்களும், யிவற் களெல்லாம் ஒருமனதாக யோசனை செயிது, நமக்கு அப்பணை தந்தாற்கள்.

---

1. ஊற்றுக்குளி - பெரியார் மாவட்டத்தில் ஒரு ஊராட்சி ஒன்றியமாக (Panchayat Union) இருக்கிறது;
பிரீதி - அன்பு; மேசர் - மேஜர் (Major);
கமண்டர் - கமாண்டர் (Commander);
செமீசு - ஜேம்ஸ் (James)

2. பவுசு - படை; சென்னல் - ஜெனரல் (General)
அப்பணை - உத்தரவு; சாயவு - சாகேப் (Saheb);
கும்பினி - கம்பெனி (Company);
இராசியாக - நட்பாக;

3. வுங்களுக்கு சொல்ல சொல்லி, வும்முடய காரியத்துலே மெத்தமெத்த சந்தோஷமாயி, தங்கள் மனசுலே யென்ன காரியம் வேண்டியிருந்தாலும், வெகுமானப்பட்ட யிங்கிலீசு கும்பிணி சருக்காரோடே றாசியாக யிறுக்க வேணும்; சொல்லியிறுந்த பிறகாரத்துக்கு அதே மேரைக்கி நமக்கு அப்பணை யாச்சுது. அது காரியத்துக்கு இப்போ சருக்காறு காரியத்துலே தாங்கள் குமுக்கு செயிது நடக்க வேண்டிய காரியத்துக்கு யிப்பச் சம்மதமான படியனாலே, தாங்கள் அறியவேண்டி தங்களுக்கு தாகீதியாக யெளுதியிறுக்குரோம்.

4. பின்னையும் நமக்கு அப்பணையானது, தங்களுக்கும், தங்கள் வகையிலே தங்களை சேற்ந்த கவுண்டமாரும், தங்களுக்கு செனேகிதமாக யிறுக்குர கவுண்டமார் ஆறாற் தங்களை சேந்து யிறுக்குறாற்களோ அவர்களும் தங்களுமாக, கும்பிணி சருக்காறத்துக்கு சேந்த பிறகாரம் குமுக்கு செயிவீர்களோ, அந்த பிறகாரம் பிரயாசப்பட்டு நடந்துகொள்ள வேணுமோ, அந்தப்படி நடக்க வேண்டியது.

5. அந்தப்படி நடந்துகொண்டால், தங்குட குமுக்கு வேண்டி, தங்களுக்கும் தங்கள் குஞ்சு குளந்தையள் தங்கள் சிற்மையும் மொதலும் தங்களை சேந்த கவுண்டமாரையும், யிதுக்கெல்லாம் தங்களுக்கு வேண்டி, யிங்கிலீசு கும்பிணி சறுக்காற் வுங்களை வச்சு ரெட்சிக்குராபோலே, நம்முட வசம் வும்மட சீமையும் தங்களையும் கும்பிணி சருக்காற் வுள்ளவரைக்கும் ரெட்சிக்குராபோலே செயிது தருகுரோம்!

6. தங்கள் கய்யிலே யெந்த பிரகாரம் ஆகுமோ பாலக்காட்டுச் சேரியி லிறுக்குர செனத்தோடே கூடி, தாங்களும் தங்களை சேந்த சனங்களும் நமக்குத் துசுமனாக இருக்குரவனை அலாக்கு செய்யவேணுமோ, அப்படி செய்யவும்; அல்லாதே போனால் திண்டுக்கல்லுலே பவுசு களத்தோடே கூட நின்று தாங்கள் செயிவிக்குரதானால் செய்யவும்; யில்லாதே போனால் பளனியிலே

---

4. செனேகிதம் - சிநேகிதம்; ஆறாற் – யார் யார்?;

5. இரட்சித்தல் - காப்பாற்றுதல்

6. துசுமன் – எதிரி; பளனி - பழனி;

யிறுக்குர பவுசோடே கூடா நிண்ணு செய்யரதானால் செய்யவும்; அல்லாதேபோனால், தாங்களும் தங்களை சேந்த சனங்களுமாக அவனை யெந்தப்படி பேசாரு செய்யவேணுமோ அந்தப்படி செய்யவும்.

7. மஹாறாசஸ்ரீ சென்னல் சிற்றியோட்டு சாயபு அவற்களும், றாசஸ்ரீ செண்டறல் அட்டலீ சாயபு அவற்களும் கம்சல் சாயபு அவற்களும் யிவற்கள் முன்னதாக, தங்களை யெந்தப்படி பெரியவ ராக்கி வக்கவேணுமோ அந்தப்படியாக்கி நடப்பிச்சி குடுக்குரோம!

தங்கள் மனசும், நம்ம மனசும் ஒண்ணாக இருக்குர படியனாலே, தங்கள் காரியக்காரற் ஒருத்தற், நம்மண்டையிலே யென்னேரம் பிரியாமல் காத்துயிறுக்குராபோலே செய்யவும்.

8. சருக்காறு காரியம் யெந்த வேளை, யெந்தப்படி வருமோ?; ஆனபடியனாலே, தாங்கள் மனுஷரை பிரியாமல் யிருக்கச் செய்ய வேண்டியது. தாங்கள் யிவிடத்துக்கு யெந்தவேளை வந்தால் தங்களை காணுரது மெத்த சந்தோஷம்.

1799-ஆம் வருடம் மாற்ச்சி மாதம் 1-ஆம் நாள்.

இதின் கீள் சயின் மொகருடனே தஷ்தாவேசாயி மேல் யெளுதப்பட்ட மதல்புகளுக்கு யிங்கிலீசுனாலே யெளுதி யிறுக்கப் பட்டு யிருக்குது.

---

6. பேசாரு - துன்பம்;

8. சயின் - செயின் (Chain); மொகர் – முத்திரை (Seal);

# 7. கரூர்ப் பசுபதீசுவரர் தேவஸ்தான வரலாறு

டி. 3050

*1.* தாறாபுரம் துக்குடி கருவூறு தாலுகா கசுபா, மசகூற் தேவஸ்தானங்கள் - பதாவதிகள்.

பூற்வத்தி சங்கதி பசுபதீசுவர சுவாமி தேவஸ்தானம் வரலாறு ஆதிமுதல் நாளது வரைக்கும்.

ஆதி காலத்துலே, செம்பூ தீவில் திறாவிட தேசத்தில், கொங்குமண்டலத்தில், தெட்சண கைலாச மென்னப்படானின்ற வஞ்சுளாரண்ணியம் சூள்ந்த கெற்ப்பபுறிட்சேத்திரமான ஆதி கறுவூறில், ஸ்ரீபசுபதிசுபற சுவாமியாற் ஸ்தலபுராண வறலாறு.

2. பூற்வத்தில், மகா கைலாசத்துலே பறாபற வஸ்துவான பறபசெவற்றிடத்தில், நயிகுசாரிண்ணிய வாசிகளான சவுனகாதி றிஷீசுறாள் முதலான பேரும் சேவிச்சி னிர்க்க, பரமேசுபரன், நந்திகேசுபறனுக்கு அனுக்கிறகம் செயிதபடி, நந்திகேசுபறனும் சனத்துக்குமாறுக்கு அறுளிய வாக்கிய பிரகாரம், சனத்துமாற் வேதவியாசறுக்கு ஒத, வேத வியாசற், சூத முனிக்கு ஒரைசெயித புராணத்து தகமை சாற்ந்த ஒரையான, கழவூரு பெறுமை, பல உயற் பிறம்ம கைவற்த்த புராணத்தில், சிவட்சேத்திர கண்டத்தில்,

---

1. கரூர் - கரூர் மாவட்டத்தின் தலைநகர்; பழைய திருச்சி மாவட்டத்தில் தாலுகா தலைநகராக இருந்தது.
   மசகூர் - கரூர்த் தாலுகாவில் உள்ள ஊர்;
   செம்பூ தீவி - நாவலந்தீவு;
   வஞ்சுளாரணியம் - அசோகமரக்காடு
2. பரமசெவற் - பரமசிவன்; பிறம்மகைவற்த்த - பிரம்ம வைவர்த்த புராணம்;

உபறிபாகத்தில், நூத்தி யெட்டாம் அத்தியாயத்துக்கு மேல் வறுகுர அத்தியாயத்துனுடைய கதையைப் பொதிய மாமலையில் வாசறான அகஷ்தியற் தமுளுநாலே யிறுவது அங்கமாகி சொன்ன மகுத்துவத்தை, நயிமசாரிண்ணியத்துக்கு வந்து, சூதபுறாணிகரை கண்டு, ஸ்தோத்திர வந்தனம் செயிது, சற்வலோக நாயகறான ஆதி பசுபதீசுவற சுவாமியினுடைய புண்ணிய புறாணத்தின் மகிமையை யெங்களுக்கு விஸ்தாரமாகி அறியப்படுத்த வேணுமென்று கேளுக்கும் யிடத்தில்,

3. பூற்வத்தில், மகா கைலாசத்தில் ஹரிபிற்ம்மாதி முதலான தேவதையளும், சனக சனந்தனி சனாதன சனத்குமார சஞ்சுபோத முதலான றிஷீசுவறாளும் யெட்ச, கிமன்னற, கெறுட, காந்தற்வ, அப்புச்சறஸ்ரீகள் முதலான பேறும் சூள்ந்து நிற்க்க, நவறத்தின கசிதமான சுறன்ன சிம்மாசனத்தில் உமாசகிதறாயி, யிறுக்குர சமயத்தில், சமஸ்தமான றிஷீசுவறாளும் சுவாமிய்யை தியான ஷ்தோத்திர வந்தனங்கள் செயிது, கைகூப்பிக்கொண்டு னிற்க்குர சமயத்தில் சனத்குமாற நமஷ்காரம் பண்ணி யெளுந்திறிந்து நிற்க்கும்போது, பராபரமூர்த்தி நந்திகேசுபரனை னோக்கி வஞ்சுளாரண்ணிய மகாத்துமையும், ஆம்பிறாவதி மகிமையும் கெற்ப்பபுறினுடைய விபவமும், ஸ்ரீஷ்டிப்புனுடைய கதையும், காமதேனுவுனுடைய சறித்திரமும், சனத்துகுமாரனுக்கு சொல்ல சொன்னதே நந்திகேசுவறர்தான்.

4. சனத்துகுமாறுக்கு சொல்லுகுரபோது கேள்வியானதெ நீங்கள் யெங்களுக்கு யிந்த கதை மகிமைய்யை விஸ்தாரமாகி சொல்ல வேணுமென்று கேட்ட சவுனகாதியளை பாத்து, சூத புராணிகற் சொல்லுகுரது யென்னவென்றால், "நீங்கள் கேளுக்குற சரிதமும் மகாபாதகங்களும் தீறுமென்றும் சறுவாபீஷ்டம் தறுகுமென்றும், மோட்ச சாம்பிறாச்சிய பதவி தறுகுமென்றும், மகாட்சேத்திரத்தினுடைய கதையை னீங்கள் சொல்லச் சொன்னது சந்தோஷமாச்சுது; நல்லது! தெரிஞ்சமாத்திரம் சொல்லுகுரோம்!

---

3. யெட்ச - யக்ஷ; கிமன்னற - கின்னர; அப்புச்சர – அப்சர; சுறன்ன – சுவர்ண - தங்கத்தாலான; ஸ்ரீஷ்டிப்பு – சிருஷ்டிப்பு;

5. ஆம்பிறாவதி உற்ப்பத்தியான வராககீறி சறித்திரமும், வராககிறி யெவற்க யென்னில் சேற தேசமான கொங்குநாட்டில் பேரூற், அவினாசி, பவானிகூடல், திறுச்சன்கோடு, கொடுமுடி, திருமுறுகன்பூண்டி, வெஞ்சமாகக்கூடலும் யிப்படி ஷ்தலங்களுக்கும் தென்பால் ஆனைமலைக்கும் தெற்க்கு வறாககிறி யென்று யிறுக்குது பேறானது; அந்த வறாககிறியில் வறாகமிகிரரெங்குர காசுபகோத்திரறான யோகீசுபற சுவாமி சன்னிதானத்தில் வன்னிமரத்தடியில், வெகுகாலம் தவசு பண்ணினத்துநாலே யோகீசுவற சுவாமி பிறிதிட்சமாகி, வராகிமி கிறறுக்கு வரம் குடுத்து, யிந்த வராக கிறியானது முன் வல்மீதம்ராம வாசம் பண்ணினதுநாலே, யோகியாப்ப்பியாச்சத்தோடே யிறுந்தபடியநாலே முன் வல்மீகம் பறாபரன் னொறுகாரணாற்த்தமாக வன்னிமரத்தடியில் வந்து, தவசு கோறியிரத்துநாலேயும் யோகம் செய்தது நாலும் யோகீஸ்வற் கிறி யென்றும் பேற்.

6. பிற்க்காலம், வாறாகமாமுனி யென்ங்குர றிஷீஷ்வரது பறுபதத்திலே வந்து தவசுகோறி, அஷ்ட்டாவக யோகத்தையும் அனுஷ்டிச்சு யோகவிந்தி யடந்ததுநாலே மோட்ச சாயுச்சிய பதம் பெறுவதற்க்காக, அனேக முனீசுறாளும் சித்த புறுஷாளும் யிந்த பறுபதத்திலே வாசமாகி யிறுப்பாற்கள், அப்படிப் பட்ட வறாக கிறி யென்றும், யிந்த வறாககிறியில் பறாபறி யென்ங்குர பாகீறதி பரமேசுவறன் வுத்தாரபடிக்கு வறாககிறியில் ஆம்பிற விறுட்சத்தின் மூலத்தில் லுற்ப்பவிச்சு, கெற்ப்பபுறிய்யை வந்தணை புரியும் காமதேனுவும் னீயும் கெற்ப்ப புறிப்சேத்திரத்தே வந்து சாறுங்களென்று ஸ்ரீகைலாச மூற்த்தி திறுவிளம் பத்தினபடிக்கு ஆம்பிறவிறுட்சத்தில் முலத்தில் வுற்ப்பவித்து அனேகமாகட்சேத்திரங்களையும் சகலமான தேவதையன் சிவட்சேந்திரங்களையும் ரட்சிக்கும் பொறுட்டாகி வறும்போது,

7. கவுசிகன், பாறத்துவாசன், காசிப்பின், தூற்வாசன், குறுமுனி. அகஸ்தியன், ததீசி, அத்திரி, வசிஷ்ட்டற், கெவுதமன், கபிலன், அத்தியற், நாரதற், பறாசற், காலவற், வியாசற் முதலான றிஷீசுறாளும், தேவற்களும் ஆம்பிறாவதி உபய பாற்ஷ்த்தில்

---

5. திறுச்சன்கோடு - திருச்செங்கோடு
6. யடந்ததுநாலே - அடைந்தனாலே; பதம் - பதவி;
திறுவிளம் - திருவுளம்;
7. காசிப்பின்-கஷ்யபன்; தூற்வாசன்-துர்வாசர்; உபய-இரண்டு;

பாங்காக, வேத ஆகம பிறகாரம் அற்ச்சனை செயித லிங்கம் அனேகமாக சொல்லிவறுகுரது. பறுபதத்தின் அதின்கிளை சந்திபகவானுக்கும் குறுசாபம் தீற்க்கத்தக்கதான அனுக்கிறஹம் செயித மூற்த்தியானபடியநாலே, சோமனாதரென்றும் பேஹாசத்து அதுக்குக் கீள்பால், தறுணேசுவற் யென்று லிங்கம் யிறுக்குது. அதன் கீள்புறம் வாகீசனென்றும் யிறுக்குது.

8. அதுக்குக் கீள்பால் அகஸ்தியற் கைலாசத்துலே யிறுந்து தென்பூமி சமன்செய்ய வேண்டி சந்தணு சலத்துக்கு வறுகுரபோது ஆம்பிறாவதி மேல்பாகத்தில் மணல் குவித்து லிங்கம் ணிற்ம்மாணித்து, அற்ச்சனை செயிதபடியனாலே, அந்த சுவாமிக்கு அகஸ்தீஸ்வறரென்னும் பேறாச்சுது. அதுக்கும் கீன்பால், வேத்திறாரண்ணியத்தில் கற்னசேசனென்று ஒரு லிங்கத்தை யமையவற் பூசை செயிது பேற்பெத்த லிங்கம்; அதுக்கு கீள்பால், கொங்கணேசுவறனென்று ஒறு லிங்கம்; அதுக்கு கீள் காளீசனென்று ஒரு லிங்கமென்றும், அதுக்கு கீள்பால் தாறுகேசுறனென்றும், மூற்த்தி; அதற்க்கு கீழ்பால் வீரேசுறனென்றும் பேற்; அதுக்கு கீழ்பால் விசாபீசுவறனெனும் ஒறு மூற்த்தி; அதுக்கு கீழ்பால் தாலவனத்தில் காட்சிநாதரென்று ஒறுமூற்த்தி; அதுக்கு கீழ்பால் குலேசுறரென்றும் ஒறுமூற்த்தி; யிப்படி யனேகமாகி அறுக்கப்படனின்ற ஆதிமாபுரத்தில் வஞ்சுளாரண்ணியம் கெற்ப்பபுரி க்ஷேத்திரத்தில் பச்சலிங்கம் அயிரதால்(?) ஆதிநாயகாரன்றும் வன்மீகத்தில் யெளுந்தறுளி யிறுக்கப்பட்ட மூற்த்தி ஒன்று; அதுக்கு கீழ்பால் கோடிலிங்கமென்று ஒரு மூற்த்தி; அதுக்கும் கீள்பால் கைலாசலிங்கமென்று ஒறு மூற்த்தி; அதுக்கு தென்பால் கறியமாலீசுவறரென்றும் ஒறு மூற்த்தி; அதுக்கு மேல்புறம் ஆம்பிறாவதியில் உத்திரதிக்குலே வஞ்சுளாரண்ணியத்தில் வஞ்சுளேசுவறனென்று ஒரு மூற்த்தி; ஆக பச்சமூற்த்தியும், அதுக்கு பூற்வதிக்கில், பிப்பிலாரண்ணியத்தில் பள்ளிகொண்டு யிறுக்கப்படானென்ற அபயபிறதானரென்று பெறுமாள் விஷ்ட்டுணு மூற்த்தி ஒன்று; உத்திராபூற்வ திக்கில் மணிமுத்தா நதியும், ஆம்பிறாவதியும், காவேறியும் யிந்த மூணு நதியும் கூடினபடியனாலே திருமகூடல் யென்று பேற்.

---

8. திருமகூடல் - திருமுக்கூடல்; பூர்வதிக்கு - கிழக்குத்திசை; உத்தராபூர்வம் - வடகிழக்கு

*9.* மணிமுத்தீசுவறரென்றும் ஒறுமூற்த்தி; இப்படி ஆவணி மாதத்தில் மகாட்சேத்திரத்திலும் அமாவாசையும் பவற்னாமாவா-சையும் அற்தோதயம் மகோதயம் சங்கறாத்தி முதலான பறுவ தினங்களில் ஸ்நான தற்ப்பணம் செயிதபேறும், யிந்த புராணத்தை சொன்னபேறும், கேள்க்கப்பட்ட பேறும், துதியும் பண்ணின பேறும், யிவற்களுக்கு பலம்; சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதவி அடவாற்கனென்றும், ஆம்பிறாவதி மருத்துவத்தில் சொல்லு வறுடுது·

*10.* ஆம்பிறாவதியில் உற்பவிச்சபடியனாலே ஆம்பிறாவதி யென்றும், சகலமான பேற்களுக்கும் யிஷ்ட்டகாம்மியாற்த்த பொறுளை கிறுபைசெயித படியனாலே பொருணயிநதி யென்றும் பேறாச்சுது, ஆம்பிறாவதி யிந்த நதி நூபமான படியனாலே ஆம்பிறாவதி யென்றும் பேற் வறப்பட்டது.

*11.* அலங்காரவதி வரலாறு :-

நயிமிசாண்ரணிய றிஷிகளுக்கு வியநசாரிஷியறான சூதமாமுனி சவுனகாதிறிஷிகஇ முக்னோக்கி, கைலாசபதியான கிற்ப்பத்தனை ஒரு காமதேனு கியானத்தை உன்னிவளிவந்தனை புறிந்து சராசரங்களை யெல்லாம் உண்டாக்கி தேவலோகத்துக்கு விடை பெற்று வந்த சறிதம் சொன்னோம். முன் யீமவாள் பறுபதத்திலே உற்ப்பவிக்கப்டானின்ற அலங்காரவதி யென்றும் பராபரை. பூசை புறிந்து வஞ்சுளாரண்ணியம் சேத்திரத்தை சேந்தும், மகிமை சொல்லுகுரோ மென்றும், சவுனகாதி றிஷீகளுக்கு சூதமாமுனி சொல்லுகிறார்.

அது யென்னவென்றால், அலங்காரவதி யென்றும் பறா பரைக்கு முன் சறாசரங்கள் யெல்லாம் காமதேனுவுநாலே உண்டானது சறியே! இப்போ யெனக்கு பவக்கடலை

---

9. பவற்னாமா-பௌர்ணமி; சங்கறாத்தி-சங்கராந்தி; சாலோகம்-சைவமுறையில், கடவுளோடு வாழ்தல்; சாமீபம்-கடவுளின் சமீபத்தில் வாழ்தல்; சாரூபம்-கடவுளின் உருவத்தைப் போன்று வாழ்தல்; சாயுச்சியம்-கடவுளோடு ஐக்கியமாதல்;

10. ஆம்பிராவதி-அமராவதி ஆறு-ஆனைமலையில் உற்பத்தியாகி தாராபுரம் கரூர்வழியாக ஓடி, காவிரியில் சேர்கிறது.

அகத்தி மனோரத பிறகாரம் சிவபூசை அற்ச்சனை செயிதவற்க்கு பொருந்தியட்சேத்திரம் யெங்கே யென்று விளங்கும் போது, பூலோகத்துலே தட்சண கைலாச மென்ங்குர வஞ்சுளாரண்ணியட்சேத்திரம் வருவாமென்று அனுக்கிரகம் செயிதபடிக்கு பறாபறி யென்றும், அலங்காரவதி சிற்பறனெ விடை கொண்டு, சறசுபதியும் மகாலட்சுமியும் தேவரம்பைகளும் சூள்ந்துவர தக்கநாக பெறுமை பொறுந்திய வஞ்சுளாரண்ணியம் வந்துசேந்து சறுவாலங்கார சோபிதமாகி கெந்த கஸ்தூறி பறிமள முநலான அபிஷேகத் திறிவியங்களும், காஞ்சி, மல்லிகை ஷெண்பக புஷ்பம், விலுவமும் யதளி மலற் முநலான புஷ்ப்ப சாதிகளுடனே வேதாகம பிறகாரம் பச்சசுத்தி செயிது, ஷோடசோபசாரத்துடனே சிவாற்ச்சனை செயிது, ஸ்தோத்திரம் செயிது, நமஸ்காரம் செயித ஒடனே, பறமேசுவறனான பசுபதிநாதற் கிற்பைகூர்ந்து அக்கியானத்தை னீக்கி, ஞானசிந்தமாஇ, சிவானுபோக சம்பறமத்துடனே அற்ச்சனை செயிது சந்தோஷசாச்சுது. னீயும் வாமபாகத்தில் பிரியாவிடையாய் யிறுமென்று அனுகிறஹம் செயிதாற். அனுக்கிறஹம் செயிதபடி பறாபறனை அணைந்து யிறுந்தாள். அந்த பிறகாரம் சறசுபதியும் லட்சுமியும் சுவாமி சிவாற்ச்சனை புறிந்த ஒடனே பறாபற திறுவளபடிக்கி, வஞ்சுளா ரண்ணியத்தில் தேவரம்பையளுடனே மகாலெட்மியும், சறசுபதியும் தவசு கோறி யிறுந்தார்களென்றும், சதுமுகரான பிறம்மாவும் பசுபதிநாதரைப் போற்றி, அற்ச்சனை செய்த மகிமைய்யை சொல்லுகுரோ மென்று சூதமாமுனி அருட்கை செய்தது.

12. ஆதிகாலத்துலே நயிமசாரிண்ணிய றிஷிகளுக்கு, ஆதமாமுனி பிறம்மா வுண்டாய சறிதை அறுளிசெயித விபறம் - பிறம்மா தேவறானவற் பகல்பொளிது ஒளிந்து னித்திரை சமாது கொண்ட போது, சிறுது காலம்

---

11. கெந்த - கந்த - நறுமணமுள்ள; அக்கியானம் - அஞ்ஞானம்; திறுவளப்படி - திருஉளப்படி; சதுமுகர் – நான்குமுகங்களைக் கொண்டவர்

12. பொளிது - பொழுது
கருவூர் – சேரர்களின் தலைநகரம் என்பர், சேரர்களின் தலைநகரம், கேரளாவில் உள்ள கொடுங்கோளூர் எனும் திருவஞ்சைக்களம் எனவும் கூறுப.கரூர், கருவூர் இரண்டும் ஒரூரே.

காலம் யிருந்துனின்றபடியநாலே சறாசறங்களும் யெறந்துபோது, கைலாசகிறிக்கி போகி, பராபரனுடைய திறுவிளப்படிக்கி சிறிது சுல்யாகங்கள் செயிது வஞ்சுளாரண்ணியம் சேத்திரமான ஆதி கருவூனில் தலைவறான ஆதிநாதனை சாந்தல் வேண்டி, அம்சவாகனாரூடராயி, சகலமான தேவர்களுக்கும் யேந்துபோத்தி வறுக வஞ்சுளாரண்ணியம் சேத்திரத்திரத்தில், யெல்லையில், அம்சவாகனத்தை விட்டு யெறங்கி, பச்சாட்சறம் தியானம் செயிது அஞ்சலி கூப்பினின்று, சுவாமிய்யை ஆனந்த தரிசனம் செயிது கொண்டு, ஆம்பிறாவதி நதி ஸ்நானம் செயிது விபூதி னுத்திராட்ச மாலிகாபறணநான உமய்யோற்பாகனாள பசுபதிநாதனை வந்தனை செயிது, தாந்து வணங்கி, யெழுந்து முன்னம் காமதேனு படைத்த சலாசரசொவடும் நவனித பறுபதமும் பாத்து, வெண்ணைவெட்துவசன அருகுடையோற்கு ஆதிமூற்தி யாகுமென்று மனம் தெளிந்து மகாவிஷ்ட்ணுவும், ரங்கநாதனும், முன் தன்னை உண்டாக்கினதும் யிப்படிப்பட்ட பசுபதி நாதனை தியானித்த தன்பலனே யாமென்று மனம் தெளிந்து,

*13.* ஆதிநாதனை பூசைபண்ணி தியானித்து, அபிஷேக திறவியம் முதலானதெல்லாம் வேதாகம பிறகாரம் சிவாற்சனை செயிது, ஸ்தோத்திரம் அனேகவிதத்திலும் செயிதாலையில், சிவலிங்கத்தில் ஆதினாதன் பசுபதிலிங்கம் பிறத்திட்சமாஇ தரிசனம் குடுத்து, "னீ செயித பூசையும் ஒகந்து கொண்டோ மென்று நிறுவிளம் பற்றினாற்.

**14.** அப்போ, பிறம்மா அறிக்கை செயிதது யென்னமென் றால், "சிறியேன் நித்திரை கொண்டபோது, சராசரங்கள் யெல்லாம் அனைத்தும் யெறந்ததால் வறும்பாவத்துக் காளாகி னேன். யினிமேல் தேவரீர் கிறபைடற்ந்து சறாசறங்கள் ஸ்ரீஷ்டிக்கும்படியாகவும் முன்வறும் பாவமும் தொலையும்படியாகி கிற்பை செய்ய வேணுமென்று வணங்கின ஒடனே, பிறம்மாவை

1. செயிதாலையில்-செய்தகாலையில்; திரசனப்-தரிசனம்; ஒகந்து - உகந்து;

பாத்து, "னீ யாகம் செயிது, வாணியை விவாகம் பண்ணிக் கொண்டு, போனது முளுதும் ஸ்ரீஷ்டிச்சு வாளுவாகி" யென்று திறுவிளம் பத்தினது சிறமேல் கொண்டு, ஆம்பிறாவதி னதி உத்திர பாகத்தில், வஞ்சுளேசுவற் சன்னதிக்கு கிளக்கு, ஆதிநாதற் கோயிலுக்கும் மூன்று அம்பபடி தூர புண்ணிய தீற்த்தம், பிறம்ம தீற்த்தம், முண்டாக்கி, னிமலான ஆகமபிறகாரம் ஆவாகனம் பண்ணி, பிறம்ம தீற்த்தத்தில் ஸ்நானம் செயிது, மாதவம் செயிது, நவகீத கிறிக்கி உத்திர பாகத்தில், வேள்விகுண்டம் செயிவித்து. வேதாகம பிறகாரம் வேள்வி செய்து, அனேகம் றிஷீகளுக்கும் தேவதையளுக்கும் அவிற்ப்பாகம் அறுள்செயிது, பறாபறியும் போற்றி, ஆதிநாதரான ஆனிலைநாதன் பாத தாமரையை யெறங்கி தேவதையள் புஷ்ப்ப மாறி புளியதக்கதாக,

15, சறசுபதிய்யை கலியாணம் செயிது ஆதினாதனுக்கு யிந்திரஞாலாமன்ன தவறட்டின மயமான ரதம் ஸ்ரீஷ்டிச்சு மகாமேறுவுக்குச் சமானமாக ரதாரோகண தற்சனம் செயிது, சராசரங்கள் யெல்லாம் படைக்க வரமும் வாங்கிகொண்டு, ஆதி நாதற் விடைகொண்டு, தன் சத்தியலோகத்தை சார்ந்தா ரென்றும், வேதவியாசற் விதரிவனத்தில், தபசுபண்ணின சறிதையை சொல்லு குராற் சூதபுறாநிகர், நைமிசாரண்ணிய றிஷிகளுக்கு சொல்லுகுறாற்.

16. வேதவியாசற் சறிதை:-

ஆதிகாலத்துலே வேதவியாசற் "குத்தமகுத்திய ஸ்தல மெங்கே?" யென்று, ஆதிபசுபதி நாதனை சிவாற்ச்சனை செயிது பிறதட்சண நமஸ்காரம் செயிது, "சுவாமி யனுக்கிறஹம் பண்ண வேணுமென்று" கேளுக்கும் யிடத்தில், ஆதிநாதன் கிற்பை கூற்ந்து, வேதவியாசறை பாத்து, "நமக்கு அக்கினி பாகத்துலே வேதறி வனத்தில் விஷ்ட்டுணு அபயபிறதான ரங்கனாத சுவாமி முன் பாகத்தில் பிப்பிலமாலை தீற்த்தம்; அதனில் ஸ்நானம் பண்ணி, நித்திய கறும்மானுஷ்டானம் செயிது, காயத்திறி செப்பிச்சு, னம்மை சிவாற்ச்சனை வேதஆகம பிறகாரம் பூசை செய்தால் வுன்மனோகத பிறகாரம் சகலமான பாபங்களெல்லாம் பறம்ந் தோடி போயி, தேகம் பவித்திரமாகி சாயுட்சிய பதவி அடவாற்" றென்று, ஆதிநாதற் அனுக்கிறஹம் பண்ணினாற்.

---

14. மாறிபுளிய - மாரிபொழிய

17. அந்த நிறுவினைப்படிக்கி, வேத வியாசற் பிப்பிலமால் தீற்த்தத்தில் ஸ்நானம் செயிது, காயத்திறி செயிது, சாயுட்சிய பதவி அடைந்தாற் யென்று நயிமசாறிண்ணிய றிஷிகளுக்கு சூதமாமுனி சொன்னாற் யென்று பிறம்மோத்திர கண்டத்தில் சொல்லுவதன்றும் அறியவேண்டியது.

அஷ்ட்டதிக்கு பாலகற் சறிதை:-

ஆதிகாலத்தில், பிறம்மதேவற் மிகுதியும் னித்திரை செயிதது நாலே சறாசறங்கள் யெல்லாம் யெறந்தபடியநாலே, கைலாச பதவியான பராபற் வஸுது காமதேனுவை அளப்பிவிச்சு, கெற்ப் படிறிட் சேத்திரத்தில் சாற்ந்து ஆதிநாதரை சிவார்ச்சனை பண்ணிய திருவிளப்படிக்கு சராசறங்க ளெல்லாம்மான போது, அந்தக்காலத்தில் யிந்திரன் அக்கினி யெமன், நிறுதி, வறுணன், வாயவன், குபேறன், ஈசானன் யிவற்கள் யெட்டுப்பேறும், ''நாமும் ஆதிநாதரை பூசை பண்ணவேணு மென்று'' ஆம்பிறாவதி நதி யிலே ஸ்நானம் செயிது, சுவாமிய்யை தியானம் செயிது, அபிஷேக திரவியமும் முதலானதெல்லாம் ஆகம பிறகாரம் பூசை செயிது, பறாபற வஸ்துவும் பிறதிட்சமாகி, அஷ்ட்டதிக்கு பாலகரை பாத்து, ''வுங்களுக்கு வேண்டிய வரம் குடுக்கு மென்று'', ''நீங்கள் யெட்டு திக்குலும் யிறுந்து பூசை பண்ணுங்கோள்!'' யென்று, அனுக்கிறஹம் செயிதாற்.

18. அனுக்கிறஹப்படிக்கு, யெட்டு திக்கிலும் அவறவற் யிறுக்கும் ஸ்தலத்துலே போயிறுந்தாற்கள் யென்று, சூதமாமுனி நயிமசாரிண்ணிய றிஷிகளுக்கு சொன்னாற்.

கடவுள் அற்ச்சனை:-

ஆதிகாலத்தில், பிறம்மா மிகுந்த நித்திரை செயிததுநாலே, சறாசறங்கள் யெல்லாம் அனைத்தும் யிறந்ததுநாலே, கைலாச பதியான பறாபறவஸ்து, காமதேனுவை அளப்பிச்சு, ''ஆம்பிறாவதி நதீ உத்திரபாகத்தில், வஞ்சுளாரண்ணியத்தில் வல்மீகத்தில், னீ அங்கே சென்று நம்மை பூசை பண்'ணென்று, உத்திரவு செயித படிக்கு, காமதேனு வந்து, அதே மேரைக்கு சுவாமிய்யை, பூசை,

---

18. அதே மேரைக்கு - அந்தப்படியே

ஆகமபிறகாரம் சிவாற்ச்சனை செயிது, பறாபற வஸ்துவு அனுக்கிற ஹமான படிக்கி, சறாசறங்களையும் ஸ்ரீஷ்டிச்சு அவகளுக்கு ஆகாரம் நவனீதறலையும் உண்டுபண்ணி குடுத்து, காமதேனுவு னுடைய சுறங்கலோகத்துக்கு சாற்ந்தாற் யென்று சமஸ்தமான தேவறிஷிகள் சகதமானபேறும், "நாமும் கெற்ப்பபுறிட் சேத்திரத் தில் ஆதிநாதரை பூசைபண்ண வேணுமென்று" வந்து ஆம்பிறாவதி நதிகள் தீற்த்தங்களிலே ஸ்நானம் பண்ணி, வீபூதி, றுத்திராட்சை யணிந்து ஆகமபிறகாரம் சுவாமிய்யை பூசை பண்ணி, பிறதிட்சமாகி, "னீங்கள் னம்மை பூசை செயிதது மிகவும் சந்தோஷமாச்சுது; னீங்கள் யெந்தந்த யெடத்தில் யிறுங்கள் யென்று திறுவிளம் பத்திநாற்" யென்று நயிமசாறிண்ணிய வாசிகளுக்கு சூதமாமுனி சொன்னாற்:-

### 19. முசுகுந்தன் கதை:-

ஆதிகாலத்தில், மகா கைலாசத்துலே பறாபற வஸ்துவான பறமேசுவறன், பாற்பதி சமேதறும் றீங்கார வனத்திலே, ஒரு வில்லுவ மரத்தடியில், வீத்து யிறுக்குற சமயத்தில் முசு வென்னப் பட்ட கொறங்கானது, ஸ்ரீபுறுஷன் ரெண்டு பேறும் அந்த மரத்தின் பேறிலே ஒண்ணுக்கொன்று வெளையாடி, விலங்கத்தை பறித்து, அஞானகுற்தமாகி விலுவத்தை கீளை பறிச்சு போடுகுற போது, அந்த வில்வும், சுவாமி அம்மன் ரண்டுபேற் சிரசுலே விளுந்த படியநாலே, அம்மன் பயந்து, சுவாமியை னோக்கி, "யிது யென்ன?" வென்று கேளுக்கும் யிடத்தில், அந்த முசு அக்கியானத்துநாலே அற்ச்சனை பண்ணினதை அதுக்கு நல்ல கெதி உண்டாச்சுது யென்று திறுவிளம்பத்தவும், அதுக்கு கியானம் வந்து, கீளை யெறங்கி வந்து, உபய பறத்திலேயும் சறணம் செயிது, "யெனக்கு யென்ன கெதி?" யென்று கேட்ட விடத்தில், சுவாமி கிற்பை கூற்ந்து, தட்சண பாகத்தில், கெற்ப்பபுறிட் சேத்திரத்தில், சூரிய வம்ஷத்திலே ஊற்ப்பவித்து, சக்கிறவற்த்தியாகி ராசியாதி பத்தியமாகி அன்பத்தாறு தேசமும் ஒரு கொடைக்குள் ஆண்டுக் கொண்டு, நம்மையும் அற்ச்சனைகள் செய்துகொண்டு, சகலமான பிராணனையும் ரட்சித்துகொண்டு, சுகமா யிறுப்பாயென்று திருவிளம் பத்திநாற் யென்று, நயிமசாரிண்ணிய ரிஷிகளுக்கு சூதமாமுனி சொன்னாற்.

---

19. கியானம் - ஞானம்

## 20. தீர்த்தச்சற்க்கம் :-

ஆதி காலத்தில், பிறம்மதேவனாலே உண்டுபண்ணின பிறம்ம தீற்தத்துநாலே பூசைபண்ணினதுநாலே, பிறம்ம தீற்த்த மென்றும் பேறாச்சுது. நவனீத கிறிக்கி, கிழக்கே பூற்வ திக்கிலே, காமதேனுவுனாலே உண்டு பண்ணின தீற்த்தமான படியநாலே, தேனுதீற்த்த மென்றும் பேறாச்சுது.

பசுபதீசுவற சுவாமிக்கு, பூற்வத் திக்குலே, ஆம்பிறாவதிக்கு மேற்க்கு, சுப்பிறமண்ணியராலே உண்டுபண்ணின தீற்த்தமான படியனாலே கந்த தீற்த்தமென்று பேறாச்சுது.

அபயபிறதான ரங்கனாதசுவாமீ கோயிலுக்கு ஙளக்கு, ஆம்பிறாவதிக்கு மேற்க்கு அசுவஸ்தச்சாயலிலே யிறுக்குரபடியநாலே, அந்த தீற்த்தத்துக்கு பிப்பில தீற்த்தமென்றும் பேற் உண்டாச்சுது. பசுபதீசுவர சுவாமி சன்னியதானத்துக்கு ஈசான்னிய பாகத்துலே தாட்டகையினாலே உண்டானதுநாலே தாட்டகதீற்த்த மென்றும் பேறாச்சுது.

ஆம்பிற விறுட்சத்தின் மூலத்துலே உற்ப்பவிச்ச படியநாலே அதுக்கு ஆம்பிறாவதீதீற்த்த மென்றும் நாமதேயம் வறலாச்சுது. யிப்படி ஆறு தீற்த்தம் விசேஷ தீற்த்தமென்று சகலமான றிஷிகளும் தேவதையளும் மனுஷாளும் முதலானபேறும் ஸ்நானம் செயிது, பூசை பண்ணி, அனேகம் யெக்கியங்களை அனுபவிச்சு, சாயுச்சிய பதவி அடஞ்சாற் யென்று, தீற்த்த மகுத்துவத்தில் சொல்லி வறுகுரது.

## 21. ஸ்தலமகிமை :-

ஆதி காலத்தில், கைலாசம், மந்தாசலம், மதுரை, காசி, கானசி, பிறயாகை, நைமிசாரண்ணியம், சேது, யிப்படி ஸ்தலங்கள் சூழ்ந்து யிறுக்கப்படாநின்ற வஞ்சுளாரண்ணியம் யென்னப்பட்ட கெற்ப்பபுறி ஷேத்திரத்தில், ஒன்பதுநாள் வாசம் பண்ணி, சுவாமியெ தரிசனம் பண்ணின பேற்களுக்கு முன்னே யெட்டு ஸ்தலங்கள் போற்றிமை பண்ணின பலத்தை பாற்க்க, அதிகமான

21. வல்மிகம் – புற்று ;
சுவயம் – அதுவாகவே

பலத்தை பசுபதீசுவற் குடுப்பாற் யென்று, இது நிட்சயமென்று சொல்லி யிறுக்குரதுநாலேயும், இந்த லிங்கம் வல்மீகத்துலே யிறுந்து சுவயம் விறகுத்தமானபடியனாலேயும், இப் பிப்பிலாரண் ணியத்தில் ஆம்பறாவதி தீற்த்தத்தில் பச்சமதில் பதரிகாறீமத்தில் வியாச றிஷிகள் முதலான றிஷிகள் பூசை பண்ணும்படியாஇ சகலமான யெண்பத்துநாங்குனுராயிரம் சீவறாசிகள் உற்பவித்து, சீவறாசிகளுக்கு அபய பிறதானம் குடுத்து, சம்றட்சணை பண்ணின படியனாலே, அபய பிறதான ரங்கனாதற் சுயம் உற்பவமான படியநாலே, இந்த ஸ்தலத்தை .. புராமென்றும் சொல்லி வறப்படும்.

22. தீற்த்த விசேஷமும் நதியினுடைய பிறபாவமும் வஞ்சுளா ரண்ணியம், பிப்பிலாரண்ணியம் வனங்களுடைய யோக்கியமும் நவனீத பறுவதத்துட மகிமையும் பட்டணத்துட வயிபவமும் பிறம்ம தேவறாலே உண்டுபண்ணின விமானத்துட அளகும், யிந்த ஆரும் கூடினபடியநாலே, ஷண்மங்கலட் சேத்திர மென்னும் பேறாச்சுது.

இந்த ஸ்தலத்துக்கு பச்சகுரோசத்துக்கு உள்ப்பட்ட கிளை களெல்லாம் லிங்காகார மென்றும், பசுவின் குளம்படி செலம்ங் களெல்லாம் தேவதீற்த்த மென்றும், யிதுலே வாசம் பண்ணப் பட்ட சனங்கள் யெல்லாம் றிஷீசுறாள் யென்றும் யிதுலே யிறுக்குர விறுஷ்சங்கள் யெல்லாம், கல்பகவிறுஷ்சத்துக்கு சமானமென்றும். யிந்த ஸ்தலத்துலே வந்து யாதாமொறுத்தற் வந்து வெளையாடி னாலும் அனேகம் யாகம் பண்ணின பலன் யென்றும், அவாளவாள் கிறகங்களிலே மிற்ஷ்டான்னமாகி புசிக்குரது சுவாமிக்கு மகா நெயிவேத்தியம் பண்ணுகுரதுக்கு சமான மென்றும். யிந்த ஸ்தலத்துலே வித்திரை பண்ணினால், அஷ்சாங்க யோகம் செயிததுக்கு சமான மென்றும், ஒறுத்தறுக் கொறுத்தற் வாற்த்தை சொல்லிநாலும் வேத ஆகமங்கள் ஓதின பலன் உண்டு யென்றும், யிந்த ஸ்தலத்துலே பிச்சை எடுக்க வந்தாலும், வியாதிஸ்தராயி வந்தாலும், றாச ரெஷ்டுரங்கள்நாலே வந்தாலும், ட்செண மாத்திரம் வாசம் பண்ணின பேறுக்கு, புனற்சன்மம் யில்லை யென்றும், யிந்த ஸ்தலத்தில், ஒறு பிறாமணனுக்கு அன்னம் குடுத்தால், வேறே ஒறுதலங்களிலே போகி, கோடி பிறாமண

---

22. புனர்சன்மம் – புனர்சென்மம் – மறுபிறவி;

போசனம் பண்ணினபலன் உண்டாமென்று ஒரு பிறாமணனுக்கு அன்னம் குடுக்குறதுக்கு யில்லாவிட்டால், பிச்சையெடுத்து ஒரு வுபாதானமாத்திரம் அன்னம் குடுத்தாலும், அவாளுக்கு சொற்க்க பிறப்புத்தி உண்டாகுமென்றும், அனுவிஷட்டி காலங்களுக்கும் னூற்பேற் பிறாமணாளை அளைச்சு, பதினாறாநாள் சூறிய உதயம் முதல்; பதினஞ்சு நாளிகை வரைக்கும் றுத்திர செபம் முதலான சபம்ங்கள் செயிவித்து, சுவாமிக்கு மகாஅபிஷேகம், நெயிவேத்தியம் செயிது, பிறாமண போசனம் செயிவித்து, தட்சண தாம்பூலம் குடுத்தால், கும்பதோறண வறுஷம் வறுஷிக்கும்.

23. யிந்த ஸ்தலத்தில் நிறுப்பணி நந்தவானங்கள், தண்ணிப் பந்தல், மடம்ங்கள், சத்திரங்கள், தேவஸ்தானங்களும் முதலான தானங்கள் செயித பேறுக்கு, யிகத்துலே சாம்பிறாச்சியாதி யோக பாக்கியங்களை அனுபவிச்சு, தேகா அவசான காலத்துலே சொற்க்காதி போகங்கள் அனுபவிச்சு, சாயுச்சியத்தை அடைவாற்.

றாச்சியத்துக்கு அனிஷ்டம் வறுகுரகாலத்து, சுவாமி ஒறு சோதனைகாண்பிவிப்பாற்; அது யெப்படியென்னில், மகாலிங்கத்தின் பேறிலே கறயான் மொய்த்துக் கொண்டு யிறுக்கும்.

பங்குனி வுத்திர நஷ்சத்திரத்தில், சுவாமி ரதோச்சவ தறிசினம் பண்ணின பேறுக்கு அனேக அசுவமேத யாகம் பண்ணின பலன் உண்டு யென்றும், அனேக தவசு பண்ணின பலனும் வறும், புனற்சன்மை யில்லை யென்றும், இந்த புறாணத்தை கேட்டபேற், படிச்சபேற், யிதை பூசை பண்ணின பலத்தை அடைவாற் யென்று ஸ்தல மகிமை சொல்லி வறப்படுகுது.

24. பிற்க்காலம், கெற்ப்பவுறிட் சேத்திரத்துக்கு பிரதி நாமதேயமான கறுவூரில் வாசஸ்தனா யிறுக்கப்பட்ட சிவபிறாம்ண சாதியில் [மூலத்தில் பெயர் விடப்பட்டுள்ளது] யெனப்பட்டவன், அவனுடைய நேமத்துனாலே சித்த புறுஷநாயி, தேச சம்ச்சாரம் பண்ணிக் கொண்டு, பிறதி னித்தியம் பசுபதீசுபறனை பூசை முதலான தறிசனம் பண்ணிக்கொண்டு யிறுக்கும் யிடத்தில், மளை

23. நந்தவானம் - நந்தவனம்;

24. மளை - மழை;

யில்லாமல் போனால், மனை அனைப்பி விடுகுரதும், யிப்படி அனேக காரணங்கள், காயசித்தி வாதசித்தியாகி யிறுந்துகொண்டு, சிவட் சேத்திரங்கள், விஷ்ட்டு சேத்திரங்கள், சம்ச்சாரம் பண்ணி கொண்டு வறுகையில், ஸ்ரீரங்கம் சேத்திரத்துக்கு வந்து ரங்கணாதற் தரிசனத்துக்கு போனயிடத்தில், அந்த ஸ்தலத்தாற் கோவிலுக்கு வுள்ளை வர ஒட்டாமல்ச் செயிதாற்கள்.

25. அப்படி யிறுக்கச்சே, ஒறு தாசி கண்டு, ''யிவற் மகா பெறியவறயி இறுக்குறாற்கள்'' யென்று, ''வீட்டுக்கு வாறுமெ''ன்று அளைச்சுக்கொண்டு போஇ, அவறுக்கு அனேக உபசாரம் செயிதாள். அப்படி யிறுக்க, அந்த சமயத்தில், யிந்த சித்த புறுஷ ரானவன், மனதுலே தியானித்து, ஸ்ரீரங்கனாத சுவாமிய்யை செலவுக்கு யில்லை யென்று கேட்டாற்!

அப்போ சிவாமி தம்முடய களுத்திலே யிறுக்கப்பட்ட நவறத்தின கசிதமான ஆபரணம் குடுத்துவிட்டார். அந்த ஆரத்தை தாசிக்கு குடுத்துபோட்டு, தஞ்சாவூறுக்கு பிறப்பட்டு போனாற். போனயிடத்தில், அவடத்துலே பிறகதீசுவறறுக்கு அஷ்ட்ட பந்தன மறுந்து செய்துவறுகயில், அந்த மறுந்து கெட்டு போச்சுது! யினிமேல் யென்னசெயிஒ மென்று சகலமான பேறும் கூடி யோசிச்சுக்கொண்டு யிறுக்கும் சமயத்தில். யிவற் போயி பாத்து, அப்போ, யிவற் வாயிலே போட்டுக்கொண்டு யிறுந்த தம்பலத்தை, அந்த மறுந்துலே உமைந்தாற்! அது, சுவற்ண பந்தன மாச்சுது! அதை சோளறாசா முதல் சகல சனங் களும் பாத்து, சந்தோஷப்பட்டுக் கொண்டாற்கள்.

26. அப்படி யிறுக்கப்பட்ட ஸ்ரீரங்கட் சேத்திரத்தில், பாகவதாள் காலமே யெளுந்திரிச்சு, ஸ்நானம் பண்ணி, பெறுமாள் சன்னதி வாசல் தொறந்து, பெறுமாளை பாற்கும் யிடத்தில், சுவாமி, களுத்துலே ஆபரணமில்லாத படியினாலே, யிவாள் யெல்லோறும் கூடி, விசாரிக்கும் யிடத்தில், அந்த சமயத்தில், ஷ்டி தாசியானவள், யிந்த ஆரத்தை களுத்துலே போட்டுக்கொண்டு கோவிலுக்கு வந்தாள். அதை சகலமான பேறும் பாத்து, ''ஒனக்கு யிந்த

25. ஆரம் – மாலை; தம்பலம் - வெற்றிலைபாக்கு;
உமைந்தாற் – உமிழ்ந்தார்;

ஆபரணம் வத்தது யேது?'' யென்று கேள்க்கும் யிடத்தில், 'யெனக்கு றாத்திரி ஒறு பெரியவற் குடுத்தாற்!'' யென்று சொன்னாள். ஆனால் அவரை கொண்டுவந்து ஒப்புவிக்கசொல்லி, ஆள்போட்டு யிறுந்தாற்கள். அந்த றாத்திரியிலவற் தாசி வீட்டுக்கு வந்தாற்; வந்த ஓடனே, யிவள் யிவரை கூட்டிக்கொண்டு போஇ. பாகவதாள் யிடத்தில் விட்டாள்! அவரை பாத்து, ''ஓமக்கு யிந்த ஆரம் யாறு குடுத்தாற்? யென்று கேள்க்குமிடத்தில், அவற் சொன்னது, ''யெனக்கு ஸ்ரீரங்கனாதற் குடுத்தாற்'' யென்று சொன்னாற். 'அது பொயி'' யென்று அவரை உபத்திரப்படுத்த நெனத்தாற்கள்.

அந்த சமயத்தில், ரங்கனாதற் கெறுட வாகனாறூடறாயி யெளுந்திறிந்து பாகவதாளுக்கு முன்பாக, ஆகாச மாற்கத்துலே னின்று நிறுவளம் பத்தினது யென்ன வென்றால், ''அவறுக்கு நாம் குடுத்தோம்! நீங்கள் அவற் வளி போகவேண்டா மென்று'' சொல்லி, சிறுதுகாலம் பசுபதீசுவறசுவாமியை பூசை பண்ணிக்கொண்டு, பொருநாள் யிறுந்து, சுவாமி பாதார விந்தத்தில் அயிக்கியமாயி போனாற்!

27. மேல் யெளுதப்பட்ட வரலாற், அஷ்ட்டாதசா புறாணத்துலே சேறப்பட்ட பிறம கைவற்த்த புறாணத்தில் யிறுக்கப்பட்ட ஆதறவுநாலே யெளுதப்பட்டது.

கணக்கு ஓமாந்தூரு ருசு.

---

26. பொயி – பொய்; கெறுடவாகனாறூடர் - கருடவாகனாருடர்- கருட வாகனத்தில் அமர்ந்தபடி; வளி - வழி; பொருநரள் – வெகுநாள்; அஷ்ட்டாதசா – அஷ்டாதச – பதினெட்டு; பாதார விந்தம் - பாதகமலம்.

27. பிரம்ம வைவர்த்த புராணத்தை எழுதியவர், தௌபாயன முனி. சுலோக வடிவில், வடமொழியில் இந்நூல் அச்சிடப் பட்டுள்ளது.



# 8. புலியூறு கிறாமத்துப் பூற்வத்து சங்கதிகள்

(டி. 3052)

1. பூற்வத்தில், ஆதிபுறி யென்னப்படாநின்ற கெற்ப்பாபுறிட் சேத்திரத்தில், சகல சறாசரங்களு முண்டாகிற போது, வியாக்கிற பாதறானவற், சித்தம்பலத்தை னாடி அனவறத நடன தெறிசின காட்சி காணும்படி, ஆதி கருவூறுக்கு பூற்வ பாகத்தில், ஆம்பி றாவதி தீர வாசம் பில்வாறண்ணிய சேத்திரத்தில், வியாக்கிரபாத ரானவற் அனேகமான தபசு கோரி, தியானிக்கும் அளவில், ஆனிலை நாதரென்னப்படானின்ற பறாபற நாதாந்த மூற்த்தி, பிறத்திட்ச தரிசினம் குடுத்து, ''சித்தம்பல சேத்திரத்திலே அனவறத நடன காஷ்சி தறுகுரோமென்று'' ரகுச்சிய நடன காட்சி தந்த ஸ்தல மென்றும் பேறாச்சுது!

2. பிற்க்காலம், மகாலட்சுமி பூசை பண்ணினபடியநாலேயும், அமுற்தம் வேண்டி கறுடன் அற்ச்சனை செயிதது நாலும், சிறஞ்சீவி யாஇ யிறுக்க வேண்டி, அனுமார் பூசித்தபடியநாலே, யிந்த மூற்த்திக்கு வியாக்குற புறிநாத ரென்றும், கருணாகடாட்சி அம்ம நென்றும், வியாக்கிற வறதறாச பெறுமாள் யென்றும், பெறும்தேவி நாச்சியா ரென்றும், காளியுடனே ரெகுட்சிய நடனம் செய்தபடிய நாலே காளியம்மனென்றும், கெருடன், அமுற்த கலசம் வேண்டின படியநாலே அமுற்த புஷ்கறுணி தீற்த்த மென்றும், வியாக்கிறடி மென்னப்படானின்ற ஸ்தலத்துக்கு. தமுளுக்கு புலியூறு யென்றும் பேற் விளங்க லாச்சுது.

3. இந்த ஸ்தல மகுத்துவம் கறுவூறு புறாணத்திலும் சொல்லி வைக்கப்பட்டது.

---

1. புலியூர் - கரூர் மாவட்டத்தில், தனி நகரப் பஞ்சாயத்தாக உளது;
   கறுவூருக்குப் பூற்வ பாகத்தில் - கரூருக்குக் கிழக்கே;
   காஷ்சி – காட்சி; ரகுச்சிய – இரகசிய
2. ரெகுட்சிய – இரகசிய



# 9. திருமுக்கூடல் கிராமத்துப் பூற்வத்து சங்கதிகள்

(டி. 3053)

## 1. பாட்டு

வஞ்சு ளாடவிக் குத்தர குணக்காக
வரும்பி ரிந்து மதிபோல
விஞ்சு மாமணி முத்தாறு காவிரி
மேவு மேவுத லாலே
வெஞ்ச லுற்றி றும்கூடல் வென்றி
சேர்க்கு மத்தலனிடை யிமையோர்
அஞ்சான் மால்போற்றும் லிங்க முண்டதனை
அருண்மணி ஈசானன் றறைவார்!

## 2. வசனம்

வஞ்சுளாரண்ணிய மென்னப்படானின்ற ஆதி கறுவூறுக்கு வடகிளக்கில், ஆம்பிறாவதி னதி மத்தியெங்குர சந்திரற் போல, மேன்மையொருகூர் விஞ்சுமா மணிமுத்தாறு காவேறியும் யிந்த மூணு நதியும் சங்கமுக மாகினபடியநாலே யிந்த ஸ்தலத்துக்கு திறுமுக்கூட லென்றும் பேற் வெளங்கலாச்சுது.

---

1. குணக்கு – கிழக்கு; மதி - திங்கள்; அறைவார்-மொழிவார்; திருமுக்கூடல் – கரூர் மாவட்டத்தில், தோட்டக்குறிச்சிக்குக் கிழக்கே உள்ள ஊர்; நன்னியூரைஅடுத்துளது. கரூருக்கு வடதிசையில் அமைந்துளது. ஆம்பிராவதி அல்லது அமராவதி, காவிரி, மணிமுத்தாறு மூன்றும் கூடும் இடமாதலால் திருமுக்கூடல் என்று பெயர் வந்தது. வெஞ்சமாக்கூடல் எனும் இதே மாவட்டத்து ஊர் வேறு, இது வேறு; கருவூர், கரூர் இரண்டும் ஒன்றே.

2. சங்கமுகம் – சங்கமம் – சேர்தல்; அறுமணி – அருமண்; தரங்கம் – அலை; கொளித்து – கொழித்து; மறுங்கே – மருங்கே - பக்கத்தே.

யிப்படி சொல்லப்படானென்ற சங்கமுக ஸ்தலம் மென்றும், இமையா நாட்டத்தை யுடத்தா யிருக்கின்ற தேவதையள் முதலான பேற்கள், பூசை பண்ணிநார்; மணிமுத்தா னதிக்கரையில், சங்கமத்தில் தேவற்களுக்கு அருள் புறிந்தபடியநாலே அறுமணி ஈசனென்றும் பேற் விளங்கலாச்சுது.

மூன்று நதியினுட தரங்க மென்னப்பட்ட அலை கொளித்து வறுகுர திரைமணி போன்ற மூவகை னதி மறுங்கே, முந்தறுளின படியநாலே, மணிமுத்தீசுபறரென்றும் பேறாச்சுது.

3. யிந்த ஸ்தலத்தை விரிஞ்சினனென்றும், பிறம்மதேவனு, மால் முதலோற் புண்ணிய ஸ்தலமென்றும், பூசித்தா ரென்றும் வேதம் சொல்லுதென்றும், இந்த நதியினுடைய சங்கமுக ஸ்நானம் செயிது, துதி தொளும் யிந்த சரித்தையை கேட்டபேறும், வேத, ஆகம, புராணம் பாறாயணம் பண்ணினோருக்கும் சொர்க்க மென்றும் சொல்லப்பட்ட தேவலோக பதவி யுண்டென்று, மணிமுத்தீசுபறன் சன்னதியில், தியானம் வந்தனம் செயிததோற் ஞானத் தலைவராகி, பறகெதி சேறுவாற்கள் யென்றும் ஆவணி மாசத்தில், அமாவாசை மகா நட்சத்திரத்தில், தீற்த்த ஸ்நானம் செயிதால், நூரு பகீறதி ஸ்நானம் யென்றும், யிந்த ஸ்நானம் செயிது, கெற்ப்பபுறியில் ஆனிலை னாதனை தெரிசித்தால், சாயுச்சிய பதவியென்றும் சொல்லிவறுகுது.

4. பிற்க்காலம், காவேறி வந்த போது, அகஸ்தியற் வந்து பூசை பண்ணினபடியிநாலே, அகஸ்தீசுவற ரெண்டும் பேற் வறப்பட்டுது.

யிந்த ஸ்தலத்துக்கு பச்சம பாகத்தில் சந்திரன் வந்து பூசை பண்ணினபடியநாலே சோமேசுவறரென்றும், வரதறாச பெறுமாள் யென்றும், சோமயநல்லூற் யென்றும் பேற் விளங்கப்பட்டது.

யிந்த ஸ்தல மருத்துவம், கறாரு புராணத்தில், மூணாம் சொற்க்கத்தில், சொல்லிவறுகுது.

---

3. சரித்தை – சரிதை; பாறாயணம் - பாராயணம்-மனப்பாடம்.
4. மகுத்துவம் - மகத்துவம்; சொற்க்கம் – சருக்கம்; கருவூர்ப் புராணத்தில் மூன்றாம் சருக்கம், ஆம்பிராவதி நதிச் சருக்கம்; இதில் திருமுக்கூடல் பற்றி உரைக்கப்பட்டுள்ளது எனச் சுவடி குறிப்பது சரியானதே.

# 10. புன்னம் கிறாம பூற்வத்து சங்கதிகள்

(டி- 3054)

1. ஆதி காலத்துலே, சம்மார தாண்டவத்தில், உகந்தமாக வேண்டும்படி, சகல லோகங்களும் யெறிச்சு, வெங்காலத்தில், சறாசற மனைத்தும் முடைக்கும்படியாஇ. ஆதியாஇ யிறுக்கப்பட்ட கெற்ப்பபுறி மிஞ்சியிறுந்த படியநாலே, யிந்த வஞ்சுளாரண்ணியட் சேத்திரத்தில் சேந்தநாடு, வெங்காலத்தில் மிஞ்சி இறுந்ததுனாலே, யிந்த நாட்டுக்கு வெங்கால நாடு யென்று பேற் வறப்பட்டது.

யிந்த வஞ்சுளாரண்ணியத்தில், இறுக்கப்பட்ட பச்சம பாகத்தில், ரெண்டரை குரோசன் தூரத்தில் யிறுக்கப்பட்ட புன்னைவனட் சேத்திரத்து ஸ்தல மகிமை - கவி பாட்டு :

''..... மிலஞ்சி, மாதளை, நறந்த...
சுரபுன்னை, செருந்தி, ...செண்பகம், பாதரி,
பலாசு, குருந்து, சந்தணங், குங்குமமங்...''

2. யிப்படி, பலபல விதமாஇ சொல்லப்பட்ட புன்னவனட் சேத்திரத்தில், வருண பகவானானவற், ஆதிமாபுரத்தில், பச்சம பாகத்தில், ஆனிலைனாதனா யிறுக்கப்படானின்ற பறாபற வஸ்துவை, தம்முடைய இஷ்ட்ட, காம்மியம், சாலோக, சாமீப, சாறூப, சாயுச்சியம் பதவியும் வேண்டி, புன்னவைனட் சேத்திரத்தில் வந்து, சுவாமி, மனோ, வாக்கு, காயங்கராலும், வளிபாடு முடித்து, தியானிக்கும்போது, பறாபற வஸ்துவானவற், பிறதிட்ச தரிசனம், காருண காட்சி தெரிசினம்ங் கொடுத்தபடியநாலே, சகலமான தேவதைகளும், புஷ்ப்பமாறி பொளிந்த படியநாலே, யிந்த

---

1. புன்னம் – கரூர் மாவட்டத்தில், கரூருக்கு மேற்கே அமைந்துள்ள ஊர்; புன்னைவனம் எனவும் இது அறியப்படும்.

உகந்தமாக - யுகாந்தமாக – யுக+அந்தமாக; அந்தம் - இறுதி; குரோசன் – குரோசம்

மூற்த்திக்கு புஷ்ப்பவனநாத சுவாமி யென்றும் புங்கம்வல்லி அம்ம னென்றும் பேற் வறப்பட்டுது.

புன்னைவனஷேத்திரமான படியநாலே, யிந்த வூறுக்கு புன்னை நகறமென்று பேற் வறலாச்சுது.

### 3. கவி

அதிர்திரை நிறன் கிறுள
வாரணியங்களிர் சிறந்த
இதுதெ மொருவனங் காருன்டு
மெனவடையி னான மேலங்கிணின்
மதுர மொளூராகிய கணிவாஇ
வடி ஆடை நாயகி பாகன்
பதும மலர் முனிவன்
பணிச்சி வருத்திடா காணா

யிந்தப்படி வறுணபகவான் பூசை பண்ணின ஸ்தளமென்றும், ஆதி கறுவூரு புறாணத்திலும் சொல்லிவறப்பட்டது.

---

3. இப்பாடல் மிகவும் பிழையாகச் சுவடியில் உளது, இதன் சரியான வடிவம் :

அதிர்திரை நீருல கினுள
வாரணியங் களிற்சி றந்த
விதுவு மொருவனங் காண்டு
எனவடையு மேல்வை யினின்
மதுர மொழுகிய கனிவாய்
வடிவுடை நாயகி பாகன்
பதும மலர்ப்பத முனிவர்
பழிச்சி வழுத்திடல் காணா

(கருவூர்ப்புராணம் 295)

# 11. பஞ்சமாதேவி கிறாமத்துப் பூறுவத்து சங்கதி

(டி. 3055)

1. செய்யதுட் டஞ்சிரைவெள் ளோதிமத்தின் வெறிநிடையிற்
றிகழ வெயிதித்
துய்யமா முனிவரரும் விமயவரும் நனிதவரும்
சூழ்ந்து போற்ற
வய்யமீ தினிந்துவழர் வஞ்சுளா ரணியத்தின்
எல்லை காணா
அய்யன்வான் பதியிதென ஊர்விடுத் தரகரா
வைன்றஞ் சலிற்றான் செய்கை.

2. யென்றது, ஆதிகாலத்தில் காமதேனுவாலே சறாசரங்கள் யெல்லாம் உண்டானபோது, பிறம்மா யானவற் கைலாசப்பதி திருவளபடிக்கு, பூலோகத்துலே வஞ்சுளாரண்ணியம் சேத்திரத்தில் பிறம்மாயாகம் நிறவேற்ற வேண்டி, சறசுபதியும் பாணிக்கிறஹணம் பண்ணவேண்டியும் பசுபதி நாதரை அற்ச்சனை செயிது, முன்போல

---

1. இப்பாடல், கருவூர்ப்புராணத்தில், பிரமச்சருக்கத்தில், மூன்றாவது பாடலாக உளது:-
செய்யசூட் டஞ்சிறைவெள் ளோதிமத்தின் வெரிநிடையிற்
றிகழ வெய்தித்
துய்யமா முனிவரரு மிமையவரு நனிதவருஞ்
சூழ்ந்து போற்ற
வய்யமீ திழிந்துவளர் வஞ்சுனா ரணியத்தின்
எல்லை காணா
வையன்வாழ் பதியிதென வூர்விடுத் தரகரவென்
றஞ்ச லித்தான்!

2. பஞ்சமாதேவி - கரூர் மாவட்டத்து ஊர்;
பாணிக்கிரகணம் - திருமணம்; அம்சம் - அன்னப்பறவை.

ச்றாசரங்கள் எல்லாம் ஸ்ரீஷ்டிக்கும் பொறுட்டாக அம்சவாகனா ரூடறாயி, சகலமான தேவதையளும் சூள்ந்து வறும்போது, வஞ்சுளாரண்ணியத்து யெல்லை கண்டு, அம்சவாகனத்தை விட்டு யெரங்கி, பசுபதி நாதரை நோக்கி பச்சாட்சற மந்திரத்துநாலே மனோதியானம் செயிதபோது,

*3.* யென்றது, இந்தப்படி பச்சாட்சறத்தை தியானம் பண்ணி, அஞ்சலி கூப்பி பணியும்போது, சுவாமி பிறதிட்சமாஇ, திரிசனம் குடுத்து, மகா விஷ்ட்டுணுவும் தெரிசின காட்சி தந்தபடியனாலே, பறமேசுபறரென்றும், மதுரவானி அம்மனென்றும், வேணுகோபால ரென்றும் யிந்த மூற்த்திக்கு பேற் விளங்கலாச்சுது.

*4.* பஞ்சாநநத்தார் பரமபரனும் மாதவறான விஷ்ட்டுவும் பிறதிட்சமாஇ, திறிசனம் குடுத்த யிடமான படியநாலே, பஞ்சமாதேவி யென்றும் பேற் விளங்க லாச்சுது.

இந்த ஸ்தள மகுத்துவம், ஆதி கருவூரு புறாணத்திலும் சொல்லி வரப்பட்டது.

---

3. பச்சாட்சறம் - பஞ்சாட்சரம்

4. மாதவறான – மாதவர் + ஆன = மாதவரான; திறிசனம்–தரிசனம்; பஞ்சானனத்தார்-பஞ்ச + ஆனனத்தார்: ஆனனம் - முகம்; பஞ்சானனத்தார் – சிவன்.



## 12. நெறுஹூற் பூற்ஒத்திர சங்கதியன்

(டி. 3056)

1. பூற்வத்தில், யிந்த யிடம் காடும் செடியும் தெண்ட காறணியமாஇ யிறுந்தது. அந்த அறுண்ணியத்துலே, ஒரு றாட்சதன் வெகு நாளாஇ யிந்த யிடத்தில் யிறுந்துகொண்டு, அனேக தேவதைகளை யிறுடுக்கம் பண்ணிக்கொண்டு, யிறுந்தபடி யனாலே, முப்பத்தி முக்கோடி தேவற்களும் கைலாசத்துக்கு போயி பறமீசுபறன் அண்டையில் முரையிட்டார்கள்.

2. அதின் பிறகு, சுவாமி, விக்கினேசுபறனை அனுப்பிவிச்சு, அந்த றாட்சதனை சம்மாரம் பண்ணிபோட்டு வறச்சொல்லி, அனுப்பி விச்சாற். விக்கிநேசுபறன் போஇ அந்த றாட்சதனிடத்தில் யெதிறாட மாட்டாமல், அந்த யிடத்தில் போஇ யெளப்பாஇ, ஒரு பக்கத்தில் யிறுந்துகொண்டார்.

3. அதுக்கு மேல், பறமீசுபறன், ''வீனாயகன் யிதுவறாக்கும் வறவில்லை'' யென்று, சுப்பிறமண்ணியரை அனுப்பிவிச்சு போஇ, அந்த றாட்சதனை சம்மாரம் பண்ணி போட்டு வறச்சொல்லி அனுப்பிவிச்சாற். அவற் போஇ, அந்த றாட்சதனை சம்மாரம் பண்ணிப் போட்டு, அந்த யெடம்ங்கள் யெல்லாம் பாத்து, ''யிது சவுக்கியமாஇ இறுக்குரது'' யென்று அவடத்துலேயே இறுந்து கொண்டாற் !

---

1. நெருர் - கருர் மாவட்டத்து ஊர்; கருருக்கு வடகிழக்கே அமைந்துள்ளது.
   தண்ட காரணியம் - மரம் செடி அடர்ந்த காடு
   இறுடுக்கம் - துன்பம்
2. விக்கினேசுபரன் - கணபதி; எதிராட - போராட
3. இதுவறாக்கும் - இதுவரைக்கும்: சம்மாரம் - அழித்தல்

4. அதின்பிறகு, பறமீசுபறன், ''யிவாள் ரெண்டுபேறும் வர வில்லை'' யென்று மகாவிஷ்ட்டுவரை தியானிச்சு சொல்லுகுற போது, கோவிஷ்ட்டுவரையும், பறதரையும் லட்ச்சுமணரையும் அனுப்பிவிச்சு, அந்த றாட்சதனை சம்மாரம் பண்ணிப்போட்டு, அந்த வனங்கள் யெல்லாம் அளிச்சு போட்டு, சுப்பிறமணியரையும் வினாயகனையும் கூடா கூட்டிக்கொண்டு வறச்சொல்லி அனுப்பிவிச்சாற், பறதனும் லட்சுமணனும் வந்து தெண்ட காறுணியம் பாத்து, யிது அழிக்குறதுக்கு அவாளாலேயும் ஆக மாட்டாமல் லெட்சுமணறை மகாவிஷ்ட்டுணு அண்டையில் போஇ, அந்த றாட்சதனை சுப்றமண்ணியற் சம்மாறம் பண்ணி போட்டாற்!

5. அந்த வனங்கள் அழிக்குரதுக்கு யெங்கள்நாலே நிறுவாகம் யில்லை'' யென்று சொன்னயிடத்தில், மகாவிஷ்ட்டுவானற் பறமீசுவற் அண்டையிலே சொன்னாற். அதின்பிறகு, சுவாமியும் மகா விஷ்ட்டுணுவும் திறுக்கூட்டத்துடனே செனங்களை யெல்லாம் கூட்டிக்கொண்டு, யிந்த தெட்சணகாசி தேசம் பாற்க்க வேணு மென்று அனேக திருக்கூட்டத்துடனே வந்து எறங்கினாற்கள் .

சுவாமியும் மகாவிஷ்ட்டுணுவும் தெண்டகாறுண்ணியத்தைப் பாத்து, யிந்த திறுணநெங்குற ராச்சதன் படுத்துக்கிடக்கிடறதையும் பாத்து, மகாசந்தோஷமாகி, ''யிந்த ஸ்தலம் தெட்சண காசீ ஸ்தலம்'' யென்று யிந்த வனங்களை அளிக்க வேணுமென்று அக்கினி கண்முளித்து, வனங்களை யெல்லாம் தேடிப்பாற்க்கும் யிடத்தில், அந்த யிடத்தில் சுயம்புவாஇ உற்பாகமாஇ யிறுந்தாற்,

6. அப்போ, அக்கினி பகவான், சுவாமி யண்டையில் வந்து ''வனங்கள் எல்லாம் தெகிச்சேன்! அதுலெ ஒரு சுயம்பு லிங்கம் உற்பவமாஇ யிறுந்தாற்; அதுக்கு நான் பிறதிஷ்ட்டை பண்ணி, பூசை பண்ணினேன்'' யென்று சொல்லிக் கொண்டாற்.

---

4. அளிச்சு - அழித்து

5. கண்முளித்து – கண்விழித்து; திறுக்கூட்டம் - திருக்கூட்டம்; உற்பாகமாஇ – உண்டாகி

6. தெகிச்சேன் - தகித்தேன் – எரித்தேன்; புசை - பூசை

அப்போ, பறமேசுவறறுக்கு சந்தோஷம் வந்து, அந்த யிடத்திலே ஊறும் உண்டுபண்ணி, சுப்பிறம்மணியரையும் விக்கினீசுபறனையும் யிந்த ஸ்தலத்துலே வாசம் பண்ணச் சொல்லி ஆக்கியாபிச்ச படியனாலேயும், அக்கினி பகவான் புசை பண்ணின படியனாலே **அக்கினீசுபற்** யென்றும், **நெறுவூ** ரென்றும் பேற் உண்டு பண்ணிநாற்கள்.

7. அப்போ, மகாவிஷ்ட்டுணு வானவற், பறதரையும் லட்சுமணரையும் அழப்பி விச்சு, யிந்த ஸ்தலம் தெட்சிணகாசிட் சேத்திரமானபடியநாலே, நீங்கள் ரெண்பேறும் யிவடத்துலே வாசம்பண்ணிக் கொண்டு யிருக்கசொல்லி, ஆக்கியாபிச்சாற்கள். அதுக்குமேல் சுவாமியும் மகாவிட்டுணுவும் திறுக்கூட்டத்துடனே யெளுந்திறுளிநாற்கள்.

அதின்பிற்க்காலம், கலியுகம் 4800க்கு மேல், **சதாசிவ பிறம்ம சுவாமியாற் சோளதேசத்துலே யிறுந்து** ஒரு சிறுபிள்ளையாஇ பொதியமாமலைக்கு போஇ, அனேக காலம் தவசு பண்ணி போட்டு, அவடத்துலே யிறுந்து **கொல்லிமலைக்கு** போய், அவடத்துலே அனேககாலம் தவசுபண்ணிபோட்டு, அதுவிட்டு றாச்சியம் காசிதேச பறியந்திரம் முதல் றாம்மேசுவறம் வரைக்கும் சிவாலயங்கள் யெல்லாம் பூபிறதட்சணமாயும் அபுதூதராயும் மவுனத்துடனே சீவன்முத்திரையும் தரிச்சிகொண்டு, யிப்படிக்கு சஞ்சாரம் பண்ணிக் கொண்டு, **கருவூறுக்கு** வந்து, பிறம்ம தீற்த்தக் கரையிலும் யிறுந்து, சிறிது காலம் யிறுந்து, அதுவிட்டு, **தாந்தோணி** மலையில் ஒறுகுகையில் தவசு பண்ணிக்கொண்டு, யிப்படி யிறுக்கும் யிடத்தில்,

---

7. யெளுந்திறுளி - எழுந்தருளி;
கொல்லிமலை - சேலம் மாவட்டத்து மலை; நாமக்கல், ஆத்தூர் தாலுகாக்களில் பரவியுள்ள மலைத் தொடர்; வல்வில் ஓரி, கொல்லிமலையை ஆண்டான். இம்மலைத் தொடர் 17 மைல் நீளமானது.
கலி 4800 = கி.பி. 1699

8. அங்கங்கே சீற்மையிலே காவேறி தீரமுதல்க்கொண்டு சைஞ பறுபத்தில் முதல்கொண்டு யிறுகுற பெறியவற்கள், தெயிவ பிறாமணாள் தெறிசன நிமித்தியமாக தேடிக்கொண்டு வந்த யிடத்தில், அவற் யிறுந்த யிடத்தில் யிறுக்காமல் யிவடத்தில் யிறுக்குரதும் மாயமாஇ முக்காதவளி அப்பால் போஇ யிறுக்குறாற் யென்றும் அங்கருனாட்டகமான படியினாலே திறுச்சறாபள்ளியிலே யிறுந்தும், மதுரையிலே யிறுந்தும் தொண்டமானும் யிப்படியாப் பட்ட காறியஸ்தாள் தெயிவ பிறாமணாளும் அவற்கள் தெரிசன நிமித்தியமாக தேடிக் கொண்டு வந்த யிடத்தில், முகவனூறுலே அவற்களுக்கு தெரிசினம் கிடைத்தது. அவாள்ளவாள் பகுத்தி செகுத்திக்கு தக்பினா போலே வெள்ளி பூவு, தங்க பூவு பூசை பண்ணிநாற்கள். அவடத்துலே சிறுதுகாலம் தவசு பண்ணிக் கொண்டு யிறுந்தாற்.

9. அப்பறம், கொல்லிமலை மாற்க்கமாயி போஇ அவடத்துலே யிறுந்து தொண்டமான் சீற்மையில் பிறப்பட்டு, அகஸ்தியர் பறுபதத்துக்குப் போஇ, அவடத்தில் சிறுது காலம் தவசு பண்ணிக்கொண்டு, மறுபடி மதுரைக்கு போயி, அவடத்துலே யிறுந்து தொண்டமான் சீற்மைக்கு வந்தாற். அப்போ, தொண்டமான் ரொம்பவும் பூசை பண்ணி நான். அவடத்துலே யிறுந்து நெறுவூருக்கு வந்து, வெகு காலம் வாசம்பண்ணிக் கொண்டு யிறுந்தாற்கள். யிப்படி யிறுக்கும் யிடத்தில், திறும்பியும் பொதியமாமலைக்கு போயி, அது விட்டு வறுகுரபோது, அப்போ சிறுதுபேற் பெரியமனுஷாளும் பதாதிகளையும் கூட்டிக்கொண்டு யிவற்கள் தெரிசினம் ஆப்புடவில்லை யென்று விசனப்பட்டுக் யிறுந்த யிடத்தில், அப்ப றாச்சியத்தில் யெங்கே கண்டால் அங்கே துப்புதுறவு விசாறிக்கச் சொல்லியும் தாகீது பண்ணி நாற்கள்.

---

8. தீரம் – கரைச் செகுத்தி – சக்தி

9. ஆப்புடவில்லை – அகப்பட வில்லை;
விசனம் - வருத்தம்

*10.* அப்படி யிறுக்கும் வேளையில், அவறிச்சையாஇ பிறப் பட்டு, நடு வளியிலே வந்தயிடத்தில், அப்போ உள்ளங்காலுலே ஒறு வசியேறினபடியனாலே, முள்ளமுள்ழ நடந்துவந்தாற்கள். அப்படி வறச்சே, வளியிலே மாட்டுக் கார பசகள், மாடு மேச்சுக் கொண்டு, யிறுக்குறவன் ஒறு வினோதங் கண்டு, சிறுக்கிக்கொண்டு யிவற்கிட்ட வந்து, செக்காந்தமாயி பேசி, சண்டை பண்ணி, யிவற் கைய்யை பிடித்து யிளுத்துக் கொண்டு போறபோது, யிந்த **தாங்தோணி** மலை குகைக்குப்போயி, ஒளிந்து கொண்டாற்கள்.

*11.* அவாள் அந்த குகை முளுதும் தேடிக்கொண்டு வந்த யிட்த்தில், அந்த குகைக்குள்ளாக போஇ யெந்தயிடத்தில் பாறப் போமென்றால் யிவாள் கண்ணுக்கு ஒரு பெரிய கிற்ஷ்ட்ண சற்பமும், ஒறு கீறிப்பிள்ளையும் வெளையாடிக்கொண்டு யிறுந்ததாம், யிதை கண்டு யிந்த பசகள் பயப்பட்டுக்கொண்டு, அவாள் **கறுவூரு** பட்டணத்துலே வந்து சொல்லிக்கொண்டார்கள், யிது **மதுரை** முதல்கொண்டு உபைய காவேறிதீறம் வரைக்கும் யிது விபறம் தெரியப்பட்டு, அந்தந்த துரைகள், அந்தந்த சீமையில் யிறுக்கப்பட்ட தெயிவபிறாம்மணாளையும் கூட்டிக்கொண்டு, **தாங்தோணி** மலையில் வந்தாற்கள். அப்போ, மலைசுத்தி காடாயி இறுக்கும். அந்தக்காடு வந்து சேந்து, அவடத்திலே யெல்லாறுக்கும் திறிசனம் கிடைத்தது.

*12.* அவரைக் கைப்பிடியாஇ கூட்டிக் கொண்டு யெங்கள் ஊருக்கு யெடுத்துக்கொண்டு போஇ, காலுலே யிறுக்குர புண்ணை தாவளை பண்ணுகுரோமெ"ன்று கேட்டுக்கொண்டு யிறுக்கும் யிடத்தில், அவற்கள் கீளை யெளுதிக் காண்பிவிச்சது யென்னவென்றால், "யென்னை யெங்கையும் நீங்கள் அளச்சு போகத் தேவையில்லை! நான் **முகவனூறு** முதல்க்கொண்டு, **அயிலூறு**, **திறுமகூடலூற்** **நெறவூற்** பறியத்திரம் காசீட் சேத்திரமான படியநாலே யிதுக்குள்ளாக நாம் யிறுக்குரோம்" யென்று யெளுதி காண்பிவிச்சாற்கள்.

---

10. இச்சை - விருப்பம்; வசி – முள்;
முள்ளமுள்ழ - மெல்ல;
11. கிருஷ்ண சர்ப்பம் – கருநாகப்பாம்பு; கீறி - கீரி
12. தாவளை பண்ணுகுரோம் - குணமாக்குகிறோம்;
நிறுமகூடல் - திருமுக்கூடல்; நெறவூற் - நெரூர்

*13.* அப்போ, இந்த நாலு அஞ்சு கிறாமத்தாறும், எங்கள் வூறுக்கு வறவேணுமெ''ன்று கேட்டுக்கொண்ட யிடத்தில், அப்போ, ''நெறுவூறுலே யிறுக்குரோமெ''ன்றும், ''யெனக்கு நிறியாண காலம் அங்கே'' யென்றும் யெளுதி காண்பிவிச்சாற், மேல்படி நெறுவூறாற் நமக்கு தெறிசினம் கெடத்ததுதென்று தெயிவ பிறாமணாள் யெல்லாம் பல்லாக்கு மேலே வச்சுக்கொண்டு, அளச்சுகொண்டு வந்தாற்கள் வந்து ஷெ வூறில் மடம் கட்டி விச்சு, தினசறுதி பூசை பண்ணிகொண்டு வந்தாற்கள்.

*14.* அப்படி யிறுக்கும் வேளையில், யிந்த ரிணத்தை தாவளை பண்ணுகுரோமென்று, வயித்தியாளை தரிவிச்சாற்கள். அதுக்கு அவற்யெளுதிக் காண்பிச்சது, ''னீங்கள் ஒறுத்தறும் பாற்க்க தேவையில்லை! யிந்த தேகம் சென்மாத்திரத்து சம்மந்தத்துநாலே யிது அனுபவிக்க வேண்டி யிறுக்குது! ஆனதால், யிது பாற்க்க தேவையில்லை! யென்று யெளுதி காண்பிவிச்சாற்.

*15.* அவடத்தில், சிறிதுநாள் வாசம் பண்ணிக்கொண்டு யிறுந்தயிடத்தில், பெறிய வாளாயிறுக்கந்பட்டவற்கள், அவற்கள் யிடத்தில் சதாகாலமும் யிருப்பாற்கள்; யிப்படி யிறுக்கும் யிடத்தில், அந்தந்த ராச்சியத்தில் யிறுந்து தெரிசனத்துக்கு வந்து கொண்டு யிறுப்பாற்கள்.

யிதுலே ரெம்பவும் சுவாமிகளுக்கு முக்கியமா ராமலிங்க சாஸ்திறியாற் யிறுப்பாற்கள் யிப்படி யிறுக்கும் யிடத்தில், அவனுக்கு அனுக்றெஹம் பண்ணினது பாரதம், பாகுவதம், அஷ்டா திசை புறாணங்களும்; யிந்த காசி முதல்கொண்டு யிறுக்குர ஸ்தலங்கள் அந்த மருத்துவமெல்லாம் அவற்கள் சொல்ல சகலமான பேறும் கேள்விப்பட்டு, ஆச்சிரியப்பட்டுகொண்டு யிறுந்தாற்கள்.

---

13. நிறியாண – நிர்வாண; தினசறுதி - தினசரி

14. ரிணத்தை – இரணத்தை; சென்மாத்திரத்து-சென்மாந்திரத்து

15. கோதாபுரி - கோதாவரி

*16.* யிப்படி யிறுக்கும் யிடத்தில் வடக்கே கோதாபுரி திரத்துலே யிறுந்து ஒறுராசா, யிவற் திறிசினை நிமித்தியமாக வந்தான், வந்து சுவாமியாற் யிறுக்குற யிடத்துக்கு வந்து சாஷ்டாங்கமாக விளுந்து தெண்டம் பண்ணினான். அவடத்தில் யிறுக்கும் பிறாமணாள் யெளுந்திரிக்க சொன்னாற்கள். அப்படிக்கும் றாசா யெளுந்திரிக்கவில்லை! அப்போ, சுவாமியாற் கை காண்பிவிச்சு யெளுந்திரிக்க சொன்னாற்கள். அப்போ யெளுந்திரிச்சு றாசா கைகட்டிக் கொண்டு சுவாமி பேறில் சிறுது சாயித்தியங்கள் சொன்னான். அதுக்குமேல் கை காண்பிவிச்சு அவன் அந்தட்சனம் மேலே போட்டுக்கொண்டு யிறுந்ததை. யெல்லாம் வாங்கிபோட்டு ஸ்நானம் பண்ணிகொண்டு யிவற்கள் முன்னுப்பாக வந்து யிறுந்துகொண்டு, அனேக சாயித்தியம் சொல்லிக்கொண்டு யிறுந்தான்.

*17.* யிப்படி யிறுக்கும் பட்சத்தில் அவனுக்கு நிறியாண காலம் வந்துது. அனேக பிறாமணாளோடே கூடா அவற் பிறப்பட்டு, சமாதிக்கு யிடம் காண்பிவிச்சு, அந்த சமாதுலே போயி யிறுந்தாற்கள். அனேகபேறும் பாத்துக்கொண்டு யிறுக்குறப் போது, ஒறு ஆச்சிறயம் கண்டுதாம், அதுயென்ன மென்றால், திவியமான குமுகுமாயமான பரிமளம் உண்டாச்சாம், ப்ட்டீர் யெங்குற சத்தம் யெல்லாமறுக்கும் கேட்டுதாம்; யிது யேன் யென்று பாற்குறபோது, பறமசோதி சுறுபமாயி பிறப்பட்டு போச்சாம்! அதுக்கு சமாதி பண்ணி போட்டு, அவறவற்கள் ஊறுக்கு போயி சேற்தாற்கள்.

யிப்படி யிறுக்கயில், உபய காவேறி தீரத்தில் யிறுக்கப்பட்ட பிறாமண்ணாள் சகலமான பேறும் கோவில் கட்டுகுற நிமித்தியம்

---

16. தெண்டம்பண்ணினான் – காலில் விழுந்து வணங்கினான்;
சாயித்தியங்கள் - சாகித்தியங்கள் – கவிகள்;
முன்னுப்பாக - முன்பாக;

17. ஆச்சிறயம் - ஆச்சரியம்; நிறுபம் – நிருபம் - கடிதம்;
பொகுநாளாயி - வெகுநாளாய்;

சிறுது ஒத்தாசை பண்ணினாற்கள். அப்போ அந்த கிறாமத்தாற் யிது விபறம் சீரங்கப்பட்டணத்துக்கு யெளுதி அனுப்பிவிச்சாற்கள் அவடத்துலே யிறுந்து சிறுது பூமிவிட்டு பூசை பண்ணிவிக்க. சொல்லி நிறுபம் வந்தபடியநாலே, அந்தப்படி பூசை நடந்து கொண்டு வந்தது.

யிது தவிர, தொண்டமானுக்கு சொற்ப்பனமாயி, அவன் சிறுது பூமி விலைக்கு வாங்கி விட்டு, பூசை நடப்பிவிச்சு கொண்டு வந்தான். அந்தப்படி பொகுநாளாயி நடந்து கொண்டு வந்தது.



# 13. வேட்டமங்கலத்துப் பூற்வத்துச் சங்கதிகள்

(டி. 3057)

1. ஆதிகாலத்துலே, வாயுபகவானுக்கும் ஆதிசேஷனுக்கும் தற்க்கம் வந்தபோது, மகாமேறுவுலே ஆயிறத்தெட்டுக் கொடுமுடியிலே ஒரு முடியானது, செண்டமாறுத மென்னப்பட்ட வாயு பகவான், ஒரு முடிய்யை செதறும்படியாக அத்தபோது, செம்பூ தீவில் திறாவிட தேசத்தில் கொங்கு மண்டலத்தில் செதரி விளுந்து பத்துயோசனை யொசறமும், மூன்று யோசனை அகலமுமாஇ விளுந்து யிருக்குர திருப்பாண்டிக்கொடுமுடி யென்னப்பட்ட பறுபதத்தில், மலை கொளுந்தாயிறுக்கப்பட்ட மகுட்டிசுபற் வன்னிவனட் சேத்திரத்திற்குப் பூற்வ திக்கில் ரெண்டு குரோசம் தூரத்தில் பாதாளத்தில் மரைந்து யிறுக்கப்படானின்ற பறுபதத்தில் பிற்க்காலம் அகஸ்தியற் கமண்டலத்தில் பாகீறத்திய்யை பொதிய பறுபதத்துக்கு கொண்டு வறுகுரபோது,

2. அந்த பகீறத்தியானது பூமியின்மீதில் கவிளுந்து வருகுர காலத்தில், ஆதிகருவூறு யென்னப்பட்ட வஞ்சுளாரண்ணியம் சேத்திரத்தில் சராசரங்களும் உண்டாக்கினபோது, மோனமென்னப்படானின்ற சிவிக்கியானத்துக்கு விளியான அம்புலனெயடக்கி, மூச்சவித்து யிறுக்கும் னிசுவாசு யோகத்தில் யிறுக்கப்படானின்ற முனீசுபறாள் ஞானமென்றும், ஞானவாளியக திறமை ஓடத்தாயிக்கப்பட்டவற், னாலுவேத முடிவான வேதாந்த பொறுளின் விசாரணையினாலே, ஆறாயிந்து, மனது தெளிந்து, முதிந்த பெறியோற்களான முதிக்குரைவாளரான பெறியோற்கள், மாதவத்தோற் குறிதோயிந்து ஈனமான வல்வினை அகலும்படி மூலகெற்ப

---

1. வேட்டைமங்கலம் – கரூர் மாவட்டத்தில், குப்பம் கிராமத்திற்கு வடக்கே உளது; காசிப்பாளைத்திற்குக் கிழக்கேயும், கரூருக்கு வடமேற்கேயும் இவ்வூர் அமைகிறது.
யோசனை - 13 கல் தொலைவு

மென்னப்பட்ட கிளங்கை யறிந்து, இனிதோடும் கூடிதவசு பண்ணி பேற் பெறத்தக்கதாக அருள்செயிதபடி, மூலகெற்ப்ப மந்திரம் னிற்ன்னயம் உள்க்கொண்டு, தபோ மகிமைய்யை குறித்து போன படியநாலே, குறுச்சி யென்றும், சிறுதுட்சேத்திரத்துக்கு பேற் வறுகுரது.

ஆகயால், யிந்த நாட்டுக்கு **கொங்கு நாடு** யென்றும் பேற் வறப்பட்டது.

**3.** இப்படி சொல்லப்பட்ட கிழங்கு நாட்டுக்கு, காவேறியும் காச்சிமா னதியும் சக்கமாகும்போது, அகஸ்தியற் மகுடலிங்க ஈசனை கமண்டலத்தில் யிறுக்கின்ற பகீறதிய்யை வரவளைச்சு கொண்டாரென்ன வருகுரபோது அகஸ்தியருடய தபோ மகிமை யினாலே பாதாளத்துலே யெறங்கும்போது கற்த்தனை கண்டு பிடித்து, தெறிசினம் செயிது, திருவள படிக்கி, பூற்வதிக்கில், பிறம்மா வேள்வி செயித கொன்றவனட் சேத்திரத்தில் அற்ப்புத லிங்க ரூப தறிசனம் தறுகுரோமென்றபடி அகஸ்திய றிஷிக்கும் யிஷ்ட்ட காம்மிய சாயுச்சியம் தந்தறுளின போது, சகலமான தேவதைகளும் புஷ்ப்பமாறி வறுறிந்த படியநாலே, **புஷ்பவன நாத** ரென்றும் பிறம்மா வேள்வி செயிதபடியநாலே வேதனாயகி அம்ம னென்றும் பேறாச்சுது.

**4.** யிப்படிப்பட்ட ஸ்தலம் சிறுது காலத்துக்கு முன்னே அரூப மடைந்து, ஸ்தலம் யிறந்து போகாமல்ச் **சேறறாசன்** வேட்டைக்கு வறும்போது, யிந்த ஸ்தலத்தைக் கண்டு, சீறனோத்தாரணம் பண்ணிவிச்சு வேட்டையாடின யிடத்தில் வூறு உண்டுபண்ணின படியநாலே **வேட்டமங்கலம்** மென்று நாமதேயம் உண்டாச்சுது.

இந்த ஸ்தல மகுத்துவம் கொடுமுடி புறாணத்திலும் கறுவூற் புறாணத்திலும் சொல்லிவறப்பட்ட்து.

---

2. சிவிக்கியானம் – சிவஞானம்; விளி - வழி; னிசுவாசு - நிர்சுவாச - சுவாசமற்ற; பொறுளின் - பொருளின்; ஆறாயிந்து - ஆராய்ந்து: முதித்த – முதிர்ந்த; ஞானவாளிய – ஞானவாரியாக னிற்ன்னயம் - நிர்ணயம்; குறுச்சி – குறிச்சி
3. சக்கமாகும் – சங்கமமாகும் தபோ - தவம்; கொன்றவன - கொன்றைவன.
4. சேற - சேர; வூறு - ஊர்



# 14. வாங்கல் கிராமத்துப் பூறவத்துச் சங்கதி கைபீது

(டி. 3058)

1. ஆதிகாலத்தில் ஏகவஸ்துவான மூற்த்தி ஆதிகருவூற் யென்னப்படானின்ற வஞ்சுளாரண்ணிய க்ஷேத்திரத்தில் சகலமான தேவர்களும் உற்ப்பவித்தபோது, பறாபற வஸ்துவான பரமேசுவரன் சகலமான தேவற்களுக்கும் அமுந்த மாகாரஞ் செயிதபடி, றிஷீசுறாள் முதலான தபோதனற்களுக்கும் நவனீத பறுபதத் தினாலும், அந்த பறுபதத்துக்கு உத்திரதிக்குவில் தவயோகிசுவரா ளுக்கு ஆற்றும் பூசைக்கு உங்களுக்கு சுந்தமூல கற்ப்ப மிறுக்குது யென்று அனுக்கிறகித்தபடிக்கு மோனமாஇ, புலனடக்கி, மூச்சவித்திரிக்கும் ஞானவாழ்ப்படை நிரவினாற், நால்மரை முடிவு போன கேள்வியர் முதுக்குரையுடையவற் குறிதோய யீனவல்வினைக் கிளங்கந்தினிது, வீற்றிறிந்தார்.

2. எது யென்னமென்றால், மோனமென்னப்படானின்ற சிவஞானத்துக்கு வழியான அய்ம்புலனையுமடக்கி, முற்சவித்து, ணிசுவாசியாஇ, யோகத்தில் யிறுக்கப்படானின்ற முனீசுவற்கள் ஞானமென்னும் ஞானவாளின் திரூலை ஓடத்தாய், யிறுக்கப் பட்டவற் நால்மரை முடிவாகிய வேதாந்த பொருள் விசாரணிய நாலே ஆராய்ந்து, மனது தெளிந்து முதிந்த பெரியோற்களான முதுக்குரைவாள ரென்றும், பெறிய்யோற்கள் மாதவத்தோற் குறிதோய்ந்து, யீனமான வல்வினைய்யை அகலும்படி மூலகெற்ப்ப மென்னப்பட்ட கிளங்கையறிந்து, யினிதோடும் கூடி, தவசுயோங்க

---

1. வாங்கல் – கரூர் மாவட்டத்தில், நெரூருக்கு வடமேற்கே, குப்பாச்சி பாளையத்தை அடுத்து உள்ள ஊர்.
ஞானவாழ் - ஞானவாள்; திரல் - திறல்; மரை – மறை; கிளங்கந்தினிது – கிழங்கரிந்தினிது

2. முற்சவித்து - மூற்சவித்து – மூச்சடக்கி; திரூலை–திறலை; ஓடத்தாய் – உடைத்தாய்; முதிந்த – முதிர்ந்த;

நிக்ஷேயளை செயிது, பேற்பெறதக்கதாக அனுக்கிறகித்தபடி, மூலகிற்ப்பமந்திர் நிற்ன்னயம் உபதேசம் உள்க்சொண்டு, தபோமகிமைய்யை குறித்து, போனதுநாலே குறிச்சியென்றும், சிறுது க்ஷேத்திரங்களுக்கு பேற் வெளங்கபடானின்றது. யிந்த நாட்டுக்கு **கிழங்குநாடு** யென்றும் பேற் விளங்கப்பட்டது.

3. பிற்க்காலத்தில், ஒரு காரணத்து நிமித்தியமாக பிரம்மா வானவற் துயின்றபோது, சராசரங்கன் யெலா மிறிந்து, ஆதிகெற்ப புறியிலே தாபரசெங்கம மிறகபட்சி முதலானதெல்லாம் உண்டான போது கைலாசபதியானவற், பிறம்மாவை யிந்தட்சேத்திரத்தில் வெளியாயி யாகம் செய்ய அனுகிறஹம் பண்ணுகையிலே யாகம் செயிது தேவதாளுக்கு அவிற்ப்பாகம் தந்தபடி ஆற்றி அவித்ப்பாகம் வரம் வாக்கு வரமியம்பி உற்றமர்நனி உதவி, உலகீன்ற உற்றமிய்யை போற்றி, யிளம்பி, புனிதன் ஆனிலைனாதன், கூற்றினுயிற் குடித்தவற் குறைகறந்தாமரை இறைஞ்சி, யாகம் செயிது, சக்லமான தேவற்களுக்கு அவிற்ப்பாகம் குடுத்து, ஓலகீன்ற பராபறியான ஆதிபராசத்திய்யை பணியும் றிஷீசுவரா ளுக்கு, அவரவற்களுக்கு வரம்மருளி செயிது வாங்குகையால் **வாங்குகல்**லென்றும், வாங்கலம்ம ளென்றும் பேற் வழங்கித்துது.

4. அந்தட் சேத்திரத்துக்கு, அவ்வேளையில் பாசமறுத்த பசுபதியான ஆனிலைனாதற் பிறதிட்சமாஇ, தெரிசனம் குடுத்தபடி யால், இந்தட்சேத்திரத்தினுடைய மகிமையறிந்து, மகாஷேத்திர மென்று துவாதசாதித்தராகிய பனிரெண்டு சூரியறும் பூசித்ததுநாலே இறவீசுவறரென்றும், இம்மையவல்லி அம்மனென்றும் பேற் விளங்கித்தது.

---

2. நிக்ஷேயளை - நிஷ்டைகளை; மத்திர்–மத்தியில்;

3. இறிந்து – இறந்து; தாபரசெங்கம - ஸ்தாவரஜங்கம; பட்சி - பறவை; உற்றமர் - உத்தமர்; யிளம்பி – விளம்பி; குறைகளுத்தாமரை - குரைகழல்தாமரை; ஒலகீன்ற - உலகீன்ற; பராபறி - பராபரி;

4. மகிமையரிந்து – மகிமையறிந்து; துவாதிசாதித்தர் = துவாதச + ஆதித்தர்; துவாதச-பன்னிரண்டு; சங்கனிபறமநிதி -சங்கநிதி, பதுமநிதி;

தேவேந்திரனாவர் சங்கனிபறமந்தி, நவமணியள் முதலான வஸ்துக்களை வேண்டி, தேவேந்திரன் சிந்தித்தபடி கடாஷ்சித்த க்ஷேத்திரமானபடியால் னன்னிதிபரமென்றும், சிந்தாமணிசுவாமி யாற்றென்றும், அமுறத்தவல்லி அம்மனென்றும் பேற் விளங்கப் பட்டது.

5. அவிற்ப்பாடு குடுக்குரபோது, விஷ்ட்டுணுவானவற் யிஷ்ட்டகாம்மியங்களை, வறபிறசாதங்களை குடுத்தபடியால், மகாவறதறாசரென்றும் பேற் விளங்கித்தது.

இப்படி பிறம்மகைத்தவ புறாண சித்தமாஇ சொல்லப்பட்டது; ஆதி கருவூற் ஸ்தல புராணத்திலும் இந்த மகுத்துவம் சொல்லி வறப்பட்டது.

---

5. வறபிறசாதம் - வரப்பிரசாதம்; புறாண - புராண;



# 15. பவித்திரம் கிறாமத்துப் பூற்வத்து சங்கதி கைபீது

(டி. 3059)

*1.* ஆதிகாலத்துலே பறாபற பறமேசுவற் யெங்குற கற்த்தி வியமானவற், யுகபிறளைய மனுபிறசாயமான யுகாந்த காலத்துலே, ஒலக முழுதும் தீ கனல் கொளுத்தி, வேகும்படியாஇ அண்ட பண்ட தண்ட தாபரங்களி யாவையுந் தெகச்சி, பின்பு, சகல புலன் சீவ தாபங்கள் முதலானதும் உண்டாக்கி, சிறுட்டித்தி சம்மாரதிரோபாவ அனுக்கிறக முதலான பஞ்ச சிறுகிகள் நடக்கும் படியாய், நிற்மலரானவர் மாயை யென்னப்பட்ட சத்தி மயக்கி னாலே கெற்ப்பத்தியுண்டாகும்படி;

*2.* செம்பூதீவில், திராவிட தேசத்தில், கொங்கு மண்டலத்தில், வஞ்சுளாரண்ணியம் சேத்திரமான ஆதி கருவூறில் உற்ப்பத்தி யுண்டாகவேண்டி, வெங்காலத்தில் கரு நிலைக்கும்படி, திருவள கடாட்சப்படி பசு, பதி, பாசமான முப்பொருளாளர் பசுவென்னப் பட்ட மாயையினுட கெற்பத்தி லுற்ப்பவிக்குப்படி, வெங்காலத் தில் மிஞ்சியிறுந்த கெடித்திரமான யிடமானபடியனாலே, யிந்த நாட்டுக்கு வெங்காலனாடென்றும் பேற்விளங்கப்பட்டது.

*3.* யிப்படி சொல்லப்பட்ட வெங்கால நாட்டில், ஆதி கருவூற் யென்னப்பட்ட கெடித்திரத்துக்கும் பச்சமபாகத்தில் யிறுக்கப்பட்ட சேத்திரத்தில்;

---

1. பவித்திரம் - கரூர் மாவட்டத்தில், கரூருக்கு மேற்கே கரு ருக்கும் பரமத்திக்கும் இடையே அமைந்துள்ள ஊர்.
   தாபரங்கள் – தாவரங்கள்; தெகச்சி – தகித்து: கிறுகி–கிரியை;

3. தமிள் – தமிழ்;

### வசனம்

கெற்பாபுறி மகா க்ஷேத்திரே, பட்சமே, யோசனாற்த்தயோ புரே புறுஷபுறி திற்ஷ்ட்டுணாலசயிலேட் சீரகிறி ஸ்திமிற்தா.

### தமிள் - கவி

கருவையம் பதிக்கு மேல்திசை தன்னில்
கணிதமூன் றோசனை அதனில்
திருவையும் மணந்த மாப்புர மதனில்
தேவர்கோள் கெவுதம சாப
உருவையும் மறைத்து நேத்திரம் பெற்ற
உள்ளம் **பவித்திர** மதனில்
குருவையும் தனதுபேர் சிவனை
குறிப்புடன் பூசனை புரிந்தான்!

4. யிப்படி யோசனை தூரத்துக்குள்பட்ட பகுசரண **வில்வ** வனட் சேத்திரத்தில், முன் யிந்திரனுக்கு கெவுதமர் ரிஷி **சபித்த** சாபம் நிபற்த்தியாகும்படியாஇ தேவேந்திரன் வந்து **தன்னுட** தேகத்தில் யிறுக்கப்பட்ட ஆயிற யோனி யானதுனாலே, **தேகம்** சுத்தியில்லாமல் அபவித்திரனாயி யிறுக்குற தேகம் சுத்திகொண்டு, பவித்திரனாகும்படி, யிந்த வில்வவனட் சேத்திரத்தில் ஈசுபறனை தியானித்து பாசமறித்து, தீவினை தீறும்படியாஇ, சிவபூசை பண்ணினபடியநாலே, பறமீசுவறன் பிறதிட்ச தரிசனம் குடுத்த போது, திறுக்கடை கண்ணுக்கு தீங்கில்லை யென்றும், வாக்கிய படி அபவித்திரமின்றி, பவித்திரனானபடியநாலே, யிந்தட் சேத்திரத்துக்கு **பவித்திர**மென்று பேற் வரப்பட்டது.

தேவேந்திரன் பூசை பண்ணின படியநாலே, **தேவேந்திர** லிங்கமென்றும், தேனாற்குளலி யம்மனென்றும் **பேற்விளங்கி** வறலாச்சுது.

---

4. நிபற்த்தி – நிவர்த்தி; ஆயிற – ஆயிர, பாசமறித்து - பாச மறுத்து; தேனாற்குளவி – தேனார்குழலி;
5. செயம் - வெற்றி;

**5.** சுப்பிறம்மணியற் சூரசம்மாரம் நிமித்தியமாக யெளுந்தறுளி வீரமகேந்திரபுறிக்கு படையெடுத்து வருகுறபோது, இந்தட் சேத்திரத்தில் வந்து குன்றுதோறும் விளயாடுகிற குமரக்கடவுள்க்கு பாலையான பராபறியும் சிவனும் குளந்த வேலாயுத சுவாமிய்யை இந்த குண்ணுலே வந்து யெடுத்து, தெண்டாயுதத்துனாலும், சூரனை செயம் கொண்டு, ஆண்மை பெற்று, வாயென்று அனுக்கிறஹும் செயிதபடியநாலே, யிந்த மலைக்கு பாலமலை யென்றும், ஆண்மை பெற்று வறுவாயென்றுது நாலே ஆணாற் அம்மநென்றும் பேற் விளங்கலாச்சுது,

இந்தப்படி, பிறம்ம கைத்தவ புறாணத்தில் வரலாறு யிறுக்கப்பட்ட கருவூறத் தலபுராணத்திலும் வெளங்கி வரப் பட்டது.



# 16. குப்பம் கிறாமத்து பூற்வத்து சங்கதி கைபீது

(டி. 3060)

1. ஆதிகாலத்திலே, சம்மார தாண்டவத்தில் உகாந்தமாக வேன்றும்படி சகலலோகங்களும் யெறிச்சு, வேகுகாலத்தில் சராசனம் அண்ணைத்தும் உண்டாகும்படியாஇ யிறுக்கப்பட்ட கெற்ப்பபுறி மிஞ்சியிறுந்த படியநாலே, யிந்த வஞ்சுலாரண்ணியம் சேத்திரத்தில் சேந்த நாட்டை வெங்காலத்திலும் மிஞ்சியிறுந்தபடி யநாலே யிந்த நாட்டுக்கு வெங்காலநாடு யென்றும் பேற்வறப் பட்டது.

2. யிந்த வஞ்சுளாறண்ணியத்தில் யிறுக்கப்பட்ட பச்சம பாகத்தில் அகஸ்தியற் வந்து, புன்னவனட் சேத்திரத்தில் வகுணன் பூசை பண்ணின ஸ்தலம் யென்று இயமம், ஞயமம், ஆசனம், பிறாணாயாமம் பிறிதிஆகார, தாரணம், தியான, சமாதி யென்னப் பட்ட. அஷ்டாங்க யோகங்களையும் அனுஷ்டிச்சு, ஆதி னாதனாய் யிறுக்கப்பட்ட பறமே னாடி, ரேசகம், பூறகம், கும்பக மென்னப்

---

1. குப்பம் – கரூர் மாவட்டத்தில் வேட்டைமங்கலத்திற்கும் முன்னூருக்கும் இடையே உள்ள ஊர்; கரூருக்கு வடமேற்குத் திசையில் அமைந்துள்ளது.

சம்மார-அழிவு; உகாந்தம்-யுகாந்தம்–யுக முடிவு; தாண்டவம்–நடனம்

வெங்காலநாடு- வேங்காலத்திலும் (வேகும் காலத்திலும்) மிஞ்சியிருந்ததால், 'வேங்காலநாடு' என்று வரலேமுறை; ஆனால் முன்னோர் வெங்காலநாடு என்று எழுதியுள்ளதால், இங்கும் வெங்காலநாடு என்றே பதிப்பிக்கப்பட்டுள்ளது. மேலும் இஃது ஆயத்தக்கது.

படானின்ற பிறாணாயாம, தியானத்தோடும் தியானிக்கும்போது, சுவாமி பிறதிட்ச தறிசனமும் காட்சியாகும்படியாக கிற்பை கூற்ந்த படியநாலே, கும்பமுனிவரை யிறுக்கப்பட்ட அகஸ்தியற் பூசை பண்ணின படியநாலேயும், கும்பமுனி காவேறி கொண்டுவறும் போது பூசை பண்ணினதுநாலே குப்பம் யென்றும், குப்பிசுவற சுவாமி யென்றும், குங்குமவல்லி யம்மானன்றும் லெட்சுமீனாறாயண பெறுமாள் யென்றும் பேற் விளங்கப்பட்டது.

3 இந்த ஸ்தல மகுத்துவம் கருவூற் புறாணத்திலும் சொல்லிவரப்பட்டது.

---

2. அட்டாங்கயோகம்-இயமம் (பசியடக்கல்), நியமம் (மத ஆச்சாரம் கடைப்பிடித்தல்), ஆசனம் (இருக்கை) பிராணா யாமம் (மூச்சுவழி)' பிரத்தியாகாரம் (புலனடக்கம்), தாரணை (ஓர் உறுப்பில் சிந்தையை நிறுத்துவது), தியானம் (அமைதி வழிபாடு), சமாதி (நிட்டை) ஆகிய எட்டு யோகங்கள், கிற்பை-கிருபை;



# 17. புகஃளுறு கிறாமத்துப் பூற்வத்து வரலாறு

(டி. 3061)

1. ஆதிகாலத்தில் ஆயிறத்தெட்டு மாத்து பெறுமான மகா மேறு மணிமுடியொன்று பத்து யோசனை னீளம், மூன்று யோசனை அகலத்தை யுடத்தாயி, ஒறு கொடுமுடியானது, ஒரு காறணாற்த்த நிமித்தியமாஇ, செம்பூ தீவில், திராவிட தேசத்தில் ஒரு முடியானது அத்துவிளுந்து, பாதாளத்துலே அளிந்தி யிறுக்கப் பட்டபடியனாலே, அந்த பறுபதத்தில்,

பிற்காலம், அகஸ்திய மாமுனி கயிலாசத்துலே யிறுந்து, கெங்கா பவானிய்யை கிட்டத்துலே பூறிச்சுகொண்டு ஈசுவறன் அனுகிறஹ படிக்கு சந்தனாலே மென்னப்பட்ட பொதிய மலைக்கு வறுகுர போது இந்தத் தலமாகிய பூமியன் கமறின் கவிள்ந்து உள்புகுவது கண்டு யிது வடிவுடைய மங்கை மணவாளற் செயித கிற்பை யென்று வன்னீநிள ஈசரானவற் மகுடலிங்க மென்றும் பேறாச்சுது.

2. அந்த சதுறுயுகம் பூசை கொண்டறுளிய தேவற் யெளுந் தருளி யிறுக்குர வன்னிவன க்ஷேத்திரத்துக்கு கிளதிசையில் யோசனை தூரத்தில், காவேறிக்கும் தெட்சணபாகத்தில் தவள நிறத்தை யொடத்தாய் யிறுக்கப்பட்ட பறுபதம் ஒன்றுளதென்ன, அதனை நால்வேதங்களும் பன்னமாதவமால் அயனவானவற் முதலாகிய பேறும் அதலத்தை வாவிகண்டு பூசித்த போதும்

---

1. புகளூர் – கரூர் மாவட்டத்தில், வெங்கரைக்கும் திருமுக் கூடலுக்கும் இடையே, கரூருக்கு வடமேற்குத் திசையில் உள்ள ஊர்.

   மாத்து - மாற்று; அளிந்தி – அழுந்தி; பறுபத்தில் - பருபதத்தில் – மலையில்;

2. கிளதிசை – கிழதிசை – கிழக்கு; அதலத்தை – அத்தலத்து; வாவி – குளம்;

அக்காலத்தில் வான் யென்னப்பட்ட மளைமருத்ததிநாலே, மெத்த மனத்துயறோடும் கூடி னித்தியாற்ச்சனை செயிவது யெப்படி யென்று சிந்தினை செய்ய ஈசுபறற் கடாக்ஷம் கூடியது நாலே அருளின கடலை அளைத்து மளை பொளியும்படி கிற்பை செயிதபடி, அதிச்சையத்துடன் பூசை செயிது தீதகட்டியதுனாலே, சகலமான தேவற்களும் மகிள்ந்து புகள் பெற்றபடியனாலே, புகளூற் யென்றும் மேகயாலீசுபற் யென்றும் பேற் விளங்கப்பட்டது.

*3*. வெண்மை பொறுந்திய குன்றில், குகன் வந்து குன்று தோறாடலாஇ, யிந்த பறுபத்தில் தம்முடைய தெண்டாயுதத்து நாலே தீற்த்தம் யுண்டுபண்ணி, ஈசுபறனை பூசை செயிதபடிய னாலே, பாலசுப்பிறமண்ணிய ரென்றும் பேற் விளங்கிவரலாச்சுது.

இந்த ஸ்தல மகுத்துவம் கொடுமுடி ஸ்தலபுராணத்திலும் யிந்த மகுத்துவம் சொல்லி வறுகுது.

---

2. மளை – மழை; மருத்ததிநாலே – மறுத்ததால்;
சிந்தினை – சிந்தனை; அளைத்து - அழைத்து;
பொளியும்படி – பொழியும்படி: தீதகட்டிய – தீதகற்றிய

3. பொறுந்திய - பொருந்திய; குகன் - முருகன்;



# 18. தான்தோணி கிறாமத்தில் வெங்கிட்டரமண சுவாமி தேவஸ்தானம் வரலாற், ஆதிமுதல் நாளது வரைக்கும்

(டி. 3051)

1. மதுரையாற் நாளையில் யிந்த மலை அறுண்ணியமாஇ, வனாந்தரமாஇ யிறுந்ததில், ஒரு காரணாற்தமாஇ யிந்த அறுண்ணியத்துலே, சதாசிவபிறமம் வந்து யிறுந்தாற். அவனுக்கு காதுலே ரணமாஇ யிறுந்தது; அந்த உபத்திகத்துடனே வெகுநாள் குறகியிலே வாசம் பண்ணிக்கொண்டு யிறுந்தாற். அப்படி யிறுக்கயில் ஒறுநாள் வேளையில் மனுஷாள் கண்டு லட்சுமணய் யன்ங்காற் யென்னப்பட்டவறுடனே வந்து சொன்னாற்கள். அவற்போஇ பாற்க்கும் யிடத்தில், அவடத்தில் அவதூதனாயி இறுந்தாற். அப்போ, "அவற் காதுலேயிறுக்கப்பட்ட ரணத்தை சொஸ்தம் பண்ணுகுரோ மென்று சேட்டுக்கொண்டவிடத்தில்,

2 அவற்கள் சொன்னது, யிந்த அறுண்ணியத்தில் சபுத்தறிகள் வாசம் செயிது கொண்டு யிறுந்தபடியநாலே அவாள் தறிசனாற்த்த மாஇ நாம் வந்த யிடத்தில் பூற்வ கற்மமானது சாரமாஇ காலுலே ரணம் வந்து யிறுக்குது; யிண்ணைக்கு மூணுநாள் மத்தியானத்துக்கு நமக்கு நிறியாண காலமானபடியநாலே நெறுவூறு தட்சணவாகினி காசிக்கு சமானமாஇ யிறுக்குர ஸ்தளமானபடியநாலே அவடத்துக்கு நாம் போரோம்; யிவடத்துலே மகா ரிஷிகள் சித்தபுருஷாள் வாசம்

---

1. தான்தோன்றி - தான்தோணி எனவும் அழைக்கப்படுகிறது; இவ்வூர் கரூர் மாவட்டத்தில், கருருக்குத் தென்கிழக்கே, கருரை அடுத்து அமைந்துள்ளது.
   அறுண்ணிய - ஆரண்ணிய; காரணாற்தம் - காரணார்த்தம்- காரணத்திற்காக; குறகி - குகை;
2. நிறியாண - நிர்வாண; நெறுவூறு - நெரூர்; சபுத்தறிகள் - சப்த ரிஷிகள்

பண்ணின யிடமானபடியனாலே, சிறுது நாளையில் யிவடத்துலே ஒறு காரணமுண்டாகி மகா ஸ்தலமாகி வெளங்கும் யென்று சொல்லி உத்திறவு செயிதுபோட்டு நெறுவூறுக்கு போஇ விட்டார்கள்.

3. சிறுது நாளைக்கு பிற்பாடு லட்சுமணய்யங்காற் சொற்ப்பனத்தில் திறுபதியிலிருந்து வெங்கிட்டாசலபதி சுவாமி, "நாம் யிந்த கிறியிலே வாசம் பண்ணுகுரதுக்காக உற்பவிச்சு யிறுக்குறோம்" மென்று சொன்னாற்.

அந்தட்சணமே போஇ, அந்த கிறியில் பாற்க்கும் யிடத்தில் குறகையிலே மூற்த்திகரமாஇ உற்பவிச்சு யிறுந்தாற். அதை கண்டு தோயன் யிடத்துலே போஇ அறிக்கை செதாற்; அப்போ அந்த சமுஸ்தானாதிபதிகளானவற், "ஒனக்கு சொற்ப்பனமானது நமக்கு சொற்ப்பனமானால், அதே மேரைக்கு சுவாமிக்கு மானிய சானியம் விட்டு நடப்பிவிக்குரோமெ"ன்று சொன்னாற்கள்.

4. அந்தப்படியே அவற்களுக்கு சொற்பனமாச்சுது. அதின் பிறக்கு அது மகா ஸ்தலமென்று மானியம் சிறுது பூமிகள் விட்டு பூசை நடக்கும் படியாஇ கட்டுபண்ணிநாற்கள்.

அந்தப்படியே அவற்களுக்கும் சொற்ப்பனமாச்சுது. அதுமுதல் சுவாமிக்கு பூசை நடந்துகொண்டு வறுகுறது.

யிந்தப்படி யெங்கள் வம்ச பறைம்பரையிலும் கேள்விப்பட்டது.

---

3. திறுபதி - திருப்பதி; செதாற் - செய்தார்;
4. பிறக்கு - பிறகு;



# 19. தாறாபுரம் தாலுகா கசுபா தாறபுரம்வுடைய கைபீதுகள்

(டி. 3063)

## 1. தாறாபுரம் கைபீது

பூறுவத்தில் தெறதா யுகத்தில் ஸநக ஸநத்தன ஸனதுகுமாற் அர்ச்சனை பண்ணிகையால், வில்வவனமும் விறாட்ட நகரமும் விஸ்வேஸ்வறகு மானவற், தெறதா யுகத்தில் வைசிம்பாயனறிஷி அற்ச்சனை பண்ணிகையால் லாடபுரமும் வைதீசுவாமி தைய்யல் நாயகி அம்மனும்மானவற்,

துவாபுர யுகத்தில் சகலமுனிகளும் பூசை பண்ணுகையால் ஸ்தூதவனமும் சுந்தரேஸ்வறரும் மீனாட்சிஅம்மனுமானவற் பஞ்சபாண்டவாள் அற்ச்சனை பண்ணினதுநாலே பஞ்சவனமும் வஞ்சுபுறியும் வஞ்சுனீஸ்வறரும் மறகதவல்லி அம்மனுமானவற்,

கலியுகத்தில் அகஸ்தியற் பறாசறாதிகளும் ஸப்த றிஷிகளும் அர்ச்சிகையால் பதறீவதமும் தாறாபுரமும் அகஸ்தியரும் அகிலாண்டிவல்லி அம்மனுமானவற் யிப்படி சதுற்யுகம் சுண்டருளிய சுவாமியானுக்கு பொன்னூதிமலை தட்சணதிக்கு உத்திரவாஹினி ஆம்பிறாவதி பச்சம சிவஷ்சேத்திரமென்று விளங்கி வறப்பட்டது.

யிந்தப்படி யெங்கள் வம்ச பறம்பரையிலும் கேள்விப்பட்டது

---

1. தெறதாயுகத்தில்-திரேதா யுகத்தில்; துவாபுர-துவாபர; இந்தச் சுவடியில் தொடர்கள், தொடர்பற்றுக் காணப்படுகின்றன.



# 20. தாராபுரம் கசுபாவில் கலியாணறாம சுவாமி தேவஸ்தான ஸ்தானீக றாமய்யன்ங்காற் யெளுதிவிச்ச கைபீது

(டி. 3064)

*1.* பூற்வத்தில் கிற்ஷ்ட்ணறாசு ஒடயற் நாளையில், கெம்ப்பு தேவருடைய குளந்த நகறத்தில் வந்து யிறங்கிநாற்; அவடத்துலே யிந்த கலியாணறாமசுவாமி சீதா லட்சுமணன் அனுமாற்... கோலமாஇ பூமி பதனத்துலே யிறுந்துது.

2. அப்படி யிறுக்க கெம்பு தேவனுடைய சமஸ்தானத்தில், கூடாறத்து அடியிலே இறுக்குறேன் என்று சொப்பனமானதுனாலே யும்... தாறாபுரத்துலே பிறதிஷ்டைபண்ணியென்று வுத்திரவு ஆனதுநாலே, வெடிஞ்சு அவடத்திலே வெட்டி பாற்க்கு மளவில், அவடத்துலே சுவாமி யிறுந்தாற்.

அப்போ, சுவாமிய்யை யெடுத்து தாறாபுரத்துலே பிறிதிஷ்டை பண்ணினாற்கள்.

இந்தப்படி, யெங்கள் வம்ச பறம்பரையிலும் கேள்விப் பட்டது.

---

1. ஒடயற் - கிருஷ்ணராசு உடையார்;
   நாளையில் - ஆட்சிக்காலத்தில்;
2. வெடிஞ்சு - விடிந்து;



# 21. மேகரை தலையனாடு பெறிய மறாதூறு நட்டாதீசுவறன் தேவஸ்தானம் குறுக்கள் கிறிவாசய்யன் யெளுதிவிச்ச கைபீது விபறம்

(டி. 3065)

1. பூற்வத்தில், யுகாந்திரகங்ளிலே லாடபுரம் விறாடபுரம் கொங்கு வஞ்சிபுரம் யென்றும் விறாட்ட றாசா றாச்சியபாறம் பண்ணப்பட்ட ஆஸ்தானத்துக்கு கலியுகத்தில் . . . தாறாபுரம் யென்று பேற் பிறசுத்திப்பட்ட கிற்ப்ப புறிஷ சேத்திரத்திற் சேற்ந்த ஷெண்பா சித்தாறு யெண்ணப்பட்ட நதி தீறத்தில், கலியுகம் 532க்கு மேல் **மாவண்பாண்டிய றாசா** யென்ங்குற றாசா றாச்சிய பாறிபாலம் செயிது வருகுற நாளையில், யிவிடத்தில் மதுரை பட்டணத்துக்கு பிறிதியின்பமாயி ஒரு மதுறாபுறி பட்டணம் வுண்டுபண்ணி, றாசாவும் யிவடத்தில் வந்து யிறுக்கும்படி யிறுக்குர நாளையில், அந்த பட்டணத்துக்கு தட்சிண பாற்சத்துலே, **கொண்டாங்கி மாமலை** யென்று ஒரு பறுபதம், அந்த பறுபதத்தில் உத்துபத்தியா வறப்பட்ட நதி பன்ச்ச நதி; யிந்த பன்ச்ச நதிக்குப்பேற் கன்னலிபுத்து, வெங்கலபுத்து சறத்துலாரு, சிலம்ப மானதி யிந்த நாலு நதியும் சேற்ந்தது செண்பகமாநதி. ஆகையால், பறுபதத்தில் வறப்பட்ட படியநாலே, பன்ச்சநதி யென்று பேறாஇ படகோட்டநதியானதி யிந்தப் பட்டணத்துக்கு சமீபத்துலே வறுக, யிப்படி யிறுக்கையில்,

---

1. பெரியமருதூர் - கரூர் மாவட்டத்தில், உள்ள ஒரு நகரப் பஞ்சாயத்து; தாராபுரம் பகுதியில் சின்னமருதூர் என ஓர் ஊர் உளது.
பாறிபாலம்-பரிபாலனம்; பாற்சம்-பாரிசம்-பக்கம்; பறுபதம்; பர்வதம்-மலை; பன்ச்ச-பஞ்ச;

2. **சட்டமுனி** யென்று ஒரு முனிசுபறன், பருபதங்கள் தோறும் சஞ்சாரம் பண்ணிக்கொண்டு இந்த திசையிலும் சஞ்சீவி பறுபத மெணப்பட்ட மலையும் கொண்டாங்கி மலையும் பின்னும் அனேகவிதம் யிறுக்குது. யிதுகளிலே அனேகமாஇ நல்ல வஸ்துகள் உண்டு யென்று வருகுறபோது யிந்த பட்டணத்துக்கு வந்தாற். யிவடத்தில் அவற் மனசுக்கு ஒறு காறணம் உண்டாகும் போல் தோற்றி, அவடத்தில் அன்றைதினம் அவடத்தில் நின்று, தம்முடையத் தியானமும் முடித்துகொண்டு யிறுக்கயில், அவற் சிறிது அதிகமாஇ தோணப்பட்ட தேகமாகையால், நிஷ்டையில் தோற்றினது, இந்த **ஷெண்பக நதியில்**, நடு ஆற்றுக்குள் ஒரு லிங்கம் தோற்ற, அப்படிக்கு தெறிந்தவுடனே இந்த சுவாமியைக் கண்டு, ''பூசைபண்ணாமல் போகக்கூடாது'' யென்று நிஷ்டை விட்டு ஆறு மத்திக்குப் போஇ பாற்க்குமளவில், அவடத்தில், லிங்கரூபமாஇ சுவாமி யிறுந்தாற்.

3. அவரை கண்ட ஒடனே, சுவாமி னீற், ''சாட்சா சோதீசுபற ரானால் இப்பவும் யெனக்கு காளகண்ட திருநேத்திரமான பறாபரர், சதுற்புஜத்துடனே அருமைக்கு அருளிசெய்தால், அருமை பாதபூசை செய்துகொண்டு, வேண்டிய வறபிறசாதமும் கேட்டுக் கொண்டு வருகுரேன்'' யென்று சொன்னஒடனே, சுவாமியும் **சட்டமுனி**யாற் கேட்டுகொண்ட மனோபீஷ்டப் பிறகாறம் பிறதிட்சமாகி அறுளினது,

4. யென்னவென்றால், யிவடங்களிலே பொகு தூறத்தில் உள்ள சீவசத்துகள் சிவபக்த்தாள் தற்ம்ம பறிபாலனம் செயிகுற பேற் சருவத்திறாள் றிஷி முனி முதலாகிய நீதிபற் றாசாக்களுக்கு முகுத்தி மோஷ்சம்ங் குடுக்கிற பிலனும் யிந்த பருபதம் நதி விசேஷத்துநாலும் இவடத்தில் நாம் பொகு நாளைக்கு வாசம் பண்ணலாமென்று கையிலாசகிறி பறுபதத்தில் யிறுந்து இவடத்துக்கு வந்து, யிர்த ஆரு மத்தியில் லிங்காகாறமாஇ இருக்குறோம்; னீயும் பகுத்திபிறயநாகயால் ஒனக்கு தெறியப்படுத்துறோம்;

---

3. காளகண்ட–கறுப்புக்கண்டம்; அருமை–அடிமை; அறுள்ளது–அருளினது;

4. லிங்காகாரமாய் = லிங்க + ஆகாரமாய்; இலிங்கவடிவில்; பகுத்தி–பக்தி; பிறயநாகயால்-பிரியனாகையால்;

நம்மை நீயும் பூசைபண்ணி பின்னும் இந்தபட்டணத்து றாசா வுக்கு தெறியப்படுத்தி, நம்முடய வறலாற்யெலலாம் சொல்வி பண்ணிவிச்சால், நான் வேண்டிய வறபிறசாதமும் குடுத்து, ஒன்னை றட்சிப்போமென்றும், நமக்கு நாமதேயம் மந்தியநதீசுபறற்; நம்முட தேவியாகிய பாற்பதிக்கு பேற் சவுந்தறவல்லி'' யென்றும் அருளிசெயிது யெதா பிரகாரம் லிங்காகாரமாயிநாற்.

5. பிறகு சட்டமுனியாறு அறுளிபாட்டு பிறகாரம் பூசையும் பண்ணி, றாசாவுக்கு தெரியபடுத்தி, றாஜாமுதலாகிய ஜெனங் களுக்கு வேண்டிய முகுத்தி, மோஷ்சம்களும் குடுக்க, தானும் வேண்டிய வறபிறசாதமும் வாங்கிக்கொண்டு பருபத சன்ச்சாரத் துக்குச் சட்டமுனி போனாற்.

அதின்பிறகு, றாசாவாகுறவற், விக்கினேசுபறன் முதலாகிய அம்மன், தெட்சணாமூற்த்தி, சண்டீசுபறன், பயிறவற் மற்று முண்டான தேவதையளும் உண்டுபண்ணி, பிற்திஷ்டையும் பண்ணி விச்சாற்கள்.

அந்தநாள் முதல், யெங்கள் வம்ச பறம்பரையும் கேள்விப் பட்டது.

யிதுக்கு தகவலாயி இறுக்கப்பட்ட சாசனங்கள் முதலான ஆதறவுகள் காலாந்திரங்களிலே றாச கீயங்களிலே கைசோற்ந்து போஇ விட்டது.



# 22. தூறம்பாண்டி கிறாமம் குலமாணிக்கீசுவற் சுவாமி ஸ்தானீகன் குப்பய்யன் யெளுதிவிச்ச கைபீது

(டி. 3066)

*1.* ஆதிகாலத்துலே, சேற, சோள, மூன்று றாசாக்கள் நாளையில் **குலோத்துங்க சோள** றாசா வென்ங்குறவற், கொங் கேளு சிவாலயம் சேவிக்க வந்தபோது, ஷெண்பக வனமும் ஆம்பிறாவதியும் மஹாட் சேத்திரமாஇ யிருக்குது யென்று, அன்ன தினம் யிவடத்தில் நின்று, சிவபூசை முதலானதும் முடித்துக் கொண்டு யிவடத்தில் சிவபிறதிஷ்ஷையும் செயிவிச்சு, நம்ம குலத்துக்கு சுவாமியென்று குலமாணிக்க ஈசுபறரென்று **குங்கும வல்லி**அம்மனென்றும் நாமதேயம் வுண்டுபண்ணி, கோவிலும் கட்டிவிச்சு **தூரநகற்** யென்று பட்டணமும் உண்டுபண்ணி, சிறிது பூமிகளும் குடுத்து, சுவாமி பிறிதிஷ்ஷை பண்ணிவிச்சாற்கள்.

2. அந்த நாள்முதல், யெங்கள் வம்ச பறம்பரையிலும் யெங்கள் பெறியவாள் சொல்ல கேள்விப்பட்டது.

---

1. தூரம்பாடி-இவ்வூர், கோவை மாவட்டத்தில், தாராபுரத்துக்கு வடகிழக்கே, கன்னிவாடிக்கும் மாம்பாடிக்கும் இடையே உளது; உத்தமபாளையத்துக்குத் தெற்கே உள்ளது. தூரம்பாண்டி என இதுவே அழைக்கப்படுகிறது போலும்.

கொங்கேளு - கொங்கேழு = கொங்கு + ஏழு;

அன்ன-அன்றைய; தூரநகற்-தூரநகர்;

# 23. முன்நூற் கிறாமத்துச் சோளீஸ்வற சுவாமி தேவஸ்தானம் குறுக்கள் சாமய்யன் யெளுதிவிச்ச கைபீது

(டி. 3067)

1. யென்னவென்றால், பூற்வத்தில், சேற சோள பாண்டிய முவ்வறாசாக்கள் றாச்சியபாறம் பண்ணும் நாளையில், குலோத் துங்க சோள றாசா, கொங்கேளு சிவாலயமும் சுவாமி தெறிசினத் துக்கு வந்தபோது, கேதசீவனமும் செலம்பமா னதியும் உண்டாகி யிறுந்தபடியநாலே, "யிது மஹா நல்ல ஸ்தலமாஇ, வசுதியா யிறுக்குறது" யென்று யோசித்து அவடத்தில் சிவிபிறதிஷ்டை செயிவித்து சோளேசுவறரென்றும் சவுந்தறநாயகி அம்மனென்றும் நாமதேயம் வைத்து, அவடத்தில் ஊரும் கட்டிவைத்து, திறுமூலனூறு யென்று நாமதேயம் உண்டு பண்ணி, சிறுது குளமும் பூமியும் விட்டு, பிறதிஷ்டை பண்ணிவிச்சாற்கள்.

2. யிந்தப்படி யெங்கள் வம்ச பாரம்பரையிலும், யெங்கள் பெறியோற்கள் சொல்ல கேள்விப்பட்டது.

---

1. முன்னூர் – கரூர் மாவட்டத்தில், குப்பம், பரமத்தி ஆகிய இரு ஊர்களுக்கு இடையே இவ்வூர் உள்ளது. முன்னூர் என்பதே, சுவடிப் பிழையாக முன்றூர் என எழுதப்பட்டுளது போலும்.

குறுக்கள் – குருக்கள்; சோள – சோழ; வசுதி – வசதி; 'அவடத்தில்' என்ற சொல் சுவடியில் இருமுறை வந்துள்ளது;



# 24. மாம்பாடி கிறாமத்து மாந்தீசுவற சுவாமி தேவஸ்தானம் குறுக்கள் றாமய்யன் யெளுதிவிச்ச கைபீது

(டி. 3069)

*1.* ஆதிகாலத்துலே மனுமாந்தாதியள் தொறதனத்தில், யிவடத்தில் மந்தநகர மென்றும் ஆம்பிறாவதியிம் பில்லுவவனமுமா யிறுந்தபடியநாலே, யிவடத்தில் சிவ பிறிதிஷ்டை செயிவிச்சு மாந்தீசுவறற் யென்றும், மறகதவல்லி அம்மனென்றும் திருநாமம் வைக்க பிறிதிஷ்டை பண்ணிதாற்கள்.

யிந்தப்படி யெங்கள் பாறம்பரையிலும் கேள்விப்பட்டது.

---

1. மாம்பாடி - கோவை மாவட்டத்தில், தாராபுரத்துக்கு வடகிழக்கே, கன்னிவாடி, தூரம்பாடி ஆகிய ஊர்களை அடுத்து அமைந்துள்ளது.
மனுமாந்தாதியள் – மனு, மாந்தாதா ஆகியோர்;
தொறதனத்தில் - துரைத்தனத்தில்;



# 25. மேல்முகம் குன்றடம் கிறாமத்துக் கொங்கு விடங்கீசுபற சுவாமி தேவஸ்தானம் குறுக்கள் முத்துசாமய்யன் யெளுதிவிச்ச கைபீது

(டி. 3068)

1. யென்னவென்றால், ஆதிகாலத்தில் துவாபற யுகுத்தில் சூரியன் யாகம் பண்ணிநாற். அந்த யாகயத்தில் மாமாங்க கெங்கை பிறந்தது. அந்த கெங்கையில் ஸ்தானம் பண்ணி அவடத்தில் சுவாமிய்யை பூசை பண்ணிண படியநாலே அந்த யுகத்துக்கு அமிற்த கட்டேசுவற சுவாமி யென்றும் சவுந்தறவல்லி அம்மனும்மானவற்.

2. அதின் பிறகு, சிறுதுகாலம் கோயல் அரூபமடைந்து போனபடியநாலே அக்காலத்தில், கலியுகத்தில் விக்குறம சோளன் திருமுருகன்பூண்டிக்கி யாத்திரை வறுகுறபோது, குன்றடத்தில் வந்து யிறங்கிநாற். அப்போது ஒரு சங்கம பொதைக்குள்ளே யிறுந்து சுவாமி, ''அடா விக்கிறம சோள''நென்று மூன்று சத்தம் போட்டு, அந்த சத்தம் காத்துலே விக்கிறம சோள கேட்டு, ''யிந்தச் சத்தம் கூப்பிட்டது யாறு?'' யென்று கேள்க்க, அப்போது, சுவாமி, ''யிந்த சங்கம பொதைக்குள்ளே கூப்பிடுகுறாபோலே யிறுக்குது'' யென்று சொன்னாற்.

---

1. மேல்முகம் - கரூர் மாவட்டத்தில், பரமத்திக்குத் தென்மேற்கே உள்ளது; போத்தனூருக்கு வடமேற்கே அமைந்துளது. கீழ்முகம் என்றொரு ஊரும் இதே வட்டாரத்தில் இருக்கிறது. குண்டடம் - கோவை மாவட்டத்தில், தாராபுரத்துக்கு வடக்கே, சூரியநல்லூர், சிறுகிணர் ஆகிய ஊர்களை அடுத்து உளது. இதுவே சுவடியில் குன்றடம் எனக் குறிக்கப்படுவதாகலாம்.

2. கோயல் - கோயில்; அரூபமடைந்து - சிதைந்து; சங்கம பொதை - அசையும் புதர்;

3. அப்போது, பொதையை வெட்டி சோதிக்குறபோது, சிவலிங்கம் யிறுந்துது! அந்த லிங்கத்தை பாத்து, அவடத்துலே கோவிலும் கட்டிவிச்சு, கூப்பிட்ட படியநாலே, கொங்கு விடங்கேசுவற் சுவாமி யென்றும், வடிவுள்ள மங்கை அம்மன் யென்றும் பேற்வைச்சு, சுவாமி பிறதிஷ்டை பண்ணிநாற்கள்.

அந்தநாள் முதல், யிந்தபடி யெங்கள் வம்ச பாறம்பரையிலும் கேள்விப்பட்டது.

---

3. கூப்பிட்ட – கும்பிட்ட



# 26. கோயமுத்தூரு சில்லா, தணாய்க்கன் கோட்டை தாலுகாவுக்குச் சேந்த, கஞ்சம் பள்ளி முட்டா, மசகூறு மகாசெனங்கள் எழுதிக்குடுத்த கையிபீயத்து

(டி. 3072)

## தேனீசுவர சுவாமியினுடைய ஷ்தள வறலாற்

*1.* அவனாசீ பச்ச ட்சேத்திரத்துக்குச் சேந்த **கஞ்சபுறீ** யென்குர னாமதேயம் யெப்படி வந்துது. யென்றால்,

பூற்வத்தில், பிறம்மாவுக்கு அனுறதா பலாக தோஷ பறீஆற யெத்து நிமித்தியமாயி பிறம்மதேவற் ஆனவற், இந்த கஞ்சபுறிட் சேத்திரத்துக்கு வந்து, சவுந்திரி மகாநதீயில் ஷ்தான கறுமாநிஷ்டானங்கள் சையிது ஸ்ரீ தேணீசுவற் சுவாமி பிறபாவத்துனாலே அனுறத்தாபலாக பிறிஆறமாயி பறிசுத்தத்தை அடஞ்சு, கஞ்சபுறி யென்குர பேற் வரப்பட்டது.

2. இந்த கஞ்சபுறி சேத்திரத்துக்கு மேற்கு மூணு யோசனை தூரத்தில் நீலகிறி பறுவதத்திலே யிறுந்து உன்பவமாயி, இந்த கஞ்சபுறி வரைக்கும் குபத்த கர்மணீயாயி வந்து, இந்த ஸ்தளத்தில் பிறசனைமாயி, அவடத்திலே இருந்து பிறவாக கர்மணீயமாயி சகல பாபங்களையும் பறியாறம் பண்ணுகுறதாயி, சகல புஷ்ப

---

1: முட்டா – மிட்டா; கஞ்சபுரி – கஞ்சம்பள்ளி; நாமதேயம் = நாம+தேயம்; நாமம் - பெயர்; தேயம் - ஒரு வடமொழி ஒட்டு; பறீஆற – பரிஹார; யெத்து - நீக்க; கறுமாநிஷ்டானங்கள் = கர்மானுஷ்டானங்கள் = கர்ம + அனுஷ்டானங்கள்; சையிது - செய்து;

2. உன்பவமாயி – உற்பவமாயி - உற்பத்தியாகி;

விற்டச பலவிஷங்களோடே சங்கீற்தெயாயி, உபயதீறகத்திலேயும் நிறைந்து அநேக ... சமஷ்த றிஷியள் பிறாமனாள் வேதபோஷ நங்களோடேயும் மோட்சபறதமாயி அவனாசி தெட்சின காஞ்சி யென்குர கெடித்தலத்துமேல் பிறபறிச்சு, கொடிமுடி சேத்திரத்தில் காஞ்சிமகா னதியளோடே கூடி, காவேறி சங்கமாயி பிறவேசிச்சு கூடி போகுறாள்.

3. தேண்ணீசுவற் யென்குரனாமதேயம் வந்த விபறம்.

பூருவத்திலே, தேவேந்திறன் பிறம்மத்திய விமோசனாற்த்த மாயி இந்த புஷ்கறட் சேத்திறமாகிய அவனாசீ ஷ்தளத்துக்கு வறும் போது, காமதேனு, கல்ப்ப விறுட்சம் சித்தாமணீ ... அயிறாவதம் முதலாகிய முப்பத்தி முக்கோடி தேவாதியளோடேகூடி, அவனாசிட் சேத்திரத்துக்கு வந்தபோது, காமதேனுவும் யகப்பட்ட சுறபியும் தன்னுட பறிபாறத்துடனே கூடிக்கொண்டு இந்த புஷ்கறம் சேத்தி ரத்துக்கு பச்சம பாகத்துக்கு ரெண்டு யோசனை தூரத்தில், கஞ்சபுறி யில் சவுந்திற மகாநதி வுத்திற பாகத்தில், அந்த காமதேனுவும் வந்து யிருந்தபோது, அந்த ஷ்தளத்தில் விசிறமிச்சிப் படுத்து யிறுந்த போது, அந்த ... றபினுடைய ஷ்தணங்களிலே யிருந்து தன்னப்போலே சீற பெறிகீனபடியினாலே, அந்த காமதேனு யாகப் பட்ட தன்னிலேதாநே ஆச்சரீயப்பட்டு, அந்தட் சீறம் பிறவிச்ச தாவல் பாற்குரபோது, அந்த ஷ்தளத்தில் மகாலிங்க றூபமாயி; கயிலாசபதியாகிய ஸ்ரீபறமேசுவறன் பிறத்திட்சமானபடியினாலே, இந்த காமதேனுவும் பிறதட்சணம் பண்ணி, அறிவுகீயபாந்திய ளுயிவேத்திய தீபாறாதனை புறசறமாயி, சோடசோபச்சாரத் தோடே கூடி, பூஞ்சை செயிது, சகல தேவத்தியளும், முனியளும், றிஷியளும் ராமலிங்கத்தே சேவிச்சு, சந்துஷ்டாளாகி-

---

2. விற்ட்ச – விருட்ச; சங்கீற்தெயாயி – கலந்து; சங்கமாயி – சங்கமமாயி - சேர்ந்து;

3. சித்தாமணீ–சிந்தாமணி; விசிறமிச்சு - விசிரமிச்சு - ஓய்வாக; ஷ்நணங்களிலே - தனங்களிலே – முலைகளிலே; தன்னப் போலே - அதுவாகவே, யெறிகீன - பெருகின; சீறம் - பால்; றூபமாயி - உருவமாக ஆகி; தேனுனா - தேனுவால்;

## சுலோகம்

தேனுனாநிற்மீதம் ஏன தேனன்வீஸ்வரயித்தி
சூதஹா யிதி ந்யாயேநா!

4. காமதேனுனாலே நிற்மித்தமான லிங்கமானபடியினாலே தேன்நீசுவற் யென்று நாமதேயம் வந்துது, இந்த மகாலிங்கத்தை யாதம் ஒறுத்தற் தெறுசனம் பண்ணுகுறாகளோ உபச்சாரங்களோட கூடி, பூசை அவறவற்களுக்கு யிககதீ, போக பாக்கியங் களும், பறகதி மோட்ச சாம்பறாச்சியத்தையும் குடுக்கப்பட்ட படிக்கி, சகல தேவதியளுக்கும் நந்திகேசுவற் சனகாதி முனீசுவறாளுக்கும், சபுத்த றிஷிகளுக்கும் சொன்ன கதையளுடைய பிறபாவத்தை விஷ்தாறமப சொல்லவேணும் யென்று, ஆதிசேஷனை . . . யென்றால் சாட்சாத் மகாவிஷ்ணுவை சொல்லவேணும் இந்த கதையை யாதாம் ஒருத்தற் கேள்க்குறார்களோ, வாசிக்கிறார்களோ, அவற்களுக்கு சவசாயிந்தத்தை அடெய்வார்கள்.

5. இந்த பிறகாரம், சனகாதி தேவத்தியள் இந்தஸ் தள பிறபாவத்தையும், நதி பிறபாவத்தையும் இந்த லிங்க பிறபாவத்தை கேட்டு, மனசுக்கு திருப்தி போறாமல் மறுபடி நந்திகேசுபறரை "இதை விஷ்தாறுமாயி சொல்லவேணும்" யென்று யென்று நந்திகேசுவறரைக் கேட்டவிடத்தில், நந்திகேசுபரரும் றிஷீசுபறாளைப் பாத்து, "வாறுமையா சனகாதி தேவத்தியளே! நீங்கள் பிறச்ச பண்ணி கேட்டது ரொம்பவும்! சந்தோஷமாச்சுது! இந்தஷ்தன பிறபாவத்தின் ஒரு கதை உண்டு! சொல்லுகிறோம்; கேளுமையா றிஷிசுவறாளே!"

---

நிர்மீதம்–நிர்மாணிக்கப்பட்டது; ந்யாயேனா–நியாயத்தால்;

4. தெறுசனம்-தரிசனம்; சனகாதி-சனகர் முதலான; சனக+ஆதி சபுத்த-சப்த-ஏழு; இப்பகுதியின் கடைசியில் ஒரு சிறு வட மொழிச் சுலோகம் உளது; அதில், பவிஷ்ய புராணத்தின், சிவச்சேத்திர கண்டத்தில் நந்திகேசுவரன் சனத்குமாரருக்குச் சொன்னது இது என்று வரையப்பட்டுள்ளது.

6. "பூற்வத்திலே, .... ஒரு பிறாமணன் பிற்கு வமுசத் .... வேத சாஷ்தற, ஷடங்குகள் ... சஷ்தறங்களிலே "தன்னை தவிற ஒருத்தரும் யில்லை" யென்குரதாக, அநேக ஆக்காரத்துடன், சகல செனங்களையும் அதிகாரங்கள் பண்ணிக்கொண்டு, ஒருத்தற்காயிலும் ஒரு அட்சரம் வித்தியாதானம் பண்ணாமல் தோஷத்தினாலேயும் அநேகமாகப் பட்ட தானங்களை வாங்கினதுநாலேயும் பிறாமண அபமான பண்ணினனாலேயும், அவனுடைய ஆயுசுட்சீனமாயி, பசி, தாகங் களுனாலே பீடிக்கப்பட்டுக்கொண்டு, மகாமார்க்கமாகிய வன பிறதேசத்தில், ஒரு விறட்சத்தின் பேறில் வாசம் பண்ணிக்கொண்டு, யிறுக்கும்போது, அந்த சாமயத்தில் அவனாசீட் சேத்திரத்துக்கு யாத்திரை போகும் ... மார்க்கத்தில் சிஷ்ய ... கூடிக்கொண்டு ... றும்போது, ... யைன்குர ஒரு பிறாமணன், இந்த பிறாம்மணன் யிறுக்குர விறட்டத்தின் கீழே வந்து, சறம பறி ஆறம் பண்ணிக்கொள்ளுவோம் யென்று நின்னாற்கள்.

7. அந்த பிறாம்மணர்களை இந்த பிறம்ம ரெட்சு ஆனது பாத்து, "இவாளைதான் பசிபறியாரம் பண்ணிக்கொள்ளுகுர நிமித்தியமாயி, 'யிவாளை பட்சிக்க வேனும்,' யென்று சொல்லி அந்த விறட்சத்திலே இருந்து விகார றூபத்துடனே, அட்டஆசம் பண்ணிக்கொண்டு வறுகுர பிறம்ம றெட்சசை பாத்து, இந்த பிறாமணாள் பயந்து ஓடிப்போனது. இந்த பிறம்ம றெட்சசு பின் தொடர்ந்து வறுகயில், இந்த பிறாமணாள் யெல்லாறும் வேத வேதாங்கபராங்கதனா யிருக்கப்பட்ட **இந்திறசற்ம்மா** யென்குர பிறாமணன் பாத்து

பெறும றாட்சசுனுடய வுபத்திறம் பறியாரம் ஆகும்படிக்கி ஒரு புண்ணியக் கதையை தங்களுக்கு சொல்லவேணும் யென்று

---

6. அட்சரம்-எழுத்து; வித்யாதானம்-கற்றுக்கொடுத்தல்; விறட்சத்தின்-விருட்சத்தின்-மரத்தின்; சீனமாயி-அழிந்து; சறம பறிஆறம்-சிரமபரிஹாரம்-அயர்வைப் போக்கிக் கொண்டு;

7. ரெட்சு-இராட்சசன்; பட்சிக்க-உண்ண; பிராம்மணாத்தமனை = பிராம்மண + உத்தமனை;

இந்த இந்திற சற்ம்மா யென்குர பிறாமனோத்தமநெ கேள்க்கும் போது, அவற் இந்த பிறாமணாளுக்கு பயம் நிவாரணம் ஆகும் படிக்கீ பிறம்ம றாட்சசனுடைய வுபந்திறவம் பறியாரம் யாகும்படிக்கீ கஞ்சபுறீட் சேத்திற மகாத்தும கத்தையை இந்த பிறாமனாளுக்கு, ஆதிமுதலாயி பிறம்ம சாபம் விமோச்சணமான விறமும், சவுந்திற மகாநதி பிறபாவத்தையும் காமதேனுநாலே பூசை செய்யப்பட்ட தேன்னிவிசுவறசுவர் சுவாமியருடைய பிறபாவத்தையும் விஷ்தாரமாக சொல்லிக்கொண்டு வறும்போது, பின்னாலே இந்த பிறம்மறாட்சச னானவன், இந்த கதையை தன் காதுலே கேளுக்குரதும், னமத்தும் இந்த கத்தையின் பேறிலே விசுவாசம் போர்ந்து பின்னாலேயே வறும்போது, இந்த பிறாமண சமுகமும் இந்த கஞ்சிபுறி சேத்திரத் தில் இந்த நதி சறுவ தீற்த்தத்துக்கு வந்து சேறும். அந்த சறசிலே வந்து தங்கள் பிறாணனை தயிரிட்சுக்கொள்ளுகுர நிமித்தியமாயி, ஶ்ரீ தேனிவிசுறா யென்று மொரையிட்டு, அந்த சறசிலே யெறங்கீ ஷ்தானம் பண்ணி அச்சுற பூத்தாளாயி நிக்கும்போது, இந்த பிறம்மறாட்சசனானவன், இவாள் சமியத்துக்கு வந்து நிக்கும்போது, இந்த தீற்த்த பிந்து, இந்த பிறாமணாளுடைய கேச விசற்செனங்கள் னாலே அந்த பிறம்ம றாட்சசன் மேலே விளுந்தமாத்திறத்தில், அந்த சென்மம் பறியாரமாயி, திவிய சறிலத்துடநே கூடினவனாயி இருக்குரவனை பாத்தால் யெப்படி யிறுந்துது யென்றால் சற்ப்பத் துக்கு போரை விட்டால் யெப்படி யிருக்குமோ, அந்த பிறகாரத் துக்குஆயிவிட்டான்.

8. அந்த சமயத்தில், அத்தறிட்ச மார்க்கத்திலே யிறுந்து, திவிய விமானமும் வந்து, இந்த புறுஷநெ யெடுத்து, அந்த விமானத்தின் பேறிலே வச்சுக்கொண்டு, தேவத்தா ஶ்ரீயள்னாலே ஒப்பச்சாரம் செய்யப்படுகுர திவிய புறுஷனாந யிந்த பிறாமனாள் வந்து ஆச்சிறியப்பட்டு, ''நீற் யார்மையா? இன்னேற வரைக்கும் யெங்களை யெல்லாம் பட்சிக்கும்படிக்கி விகார றூபமாயி பின் தொடந்து வந்த காறணம் யென்னா? இப்போ நிமிஷ மாத்திறத்தில்

7. கத்தை – கதை; மைத்தும் - மற்றும்; மொரையிட்டு - முறையிட்டு; இவால் – இவாள்; இவர்கள்; சமியத்துக்கு – சமீபத்துக்கு

திவிய சறீறத்தெயும் அடைஞ்சு விமானாறுடறாயி, திவிய ஸ்ரீ பறிவாறத்தனாயி யிறுக்குர காறணம் யென்னவென்று இந்த பிறாமணனாலே கேள்க்கப்பட்ட திவிய புறுஷன் சொல்லுகுர விபறம்

9. "தன்னுடைய பூறுவஜென்ம .... அக்கீற்த்தங்கள் னாலே தான் றாட்சசனாயி, பொகு காலமாயி வனத்திலே துக்கப் பட்டுக் கொண்டு இருந்தேன். இப்படி யிறுக்கும்போது ஒங்க ளுடைய தெறிசனத்துனுடைய மயிமெ னாலேயும், இந்த தீற்த்த பிறபாவத்தினாலேயும் தனக்கு இந்த திவிய சறீறம் வந்து, தானும் இந்த விமானத்தின் பேறிலே யிருந்துக்கொண்டு, சொர்க்க லோகத்துக்கு போறேன்" யென்று இந்த பிறாமணனுடைய சன்னிதானத்திலே யிருந்து திவிய லோகத்துப் போயிவிட்டான்!

10. இந்த ஆச்சறியத்தை கண்டு பிறாமணன் ரொம்பவும் சந்தோஷத்தோட கூடி, யிந்த மகாலிங்கமாகிய ஸ்ரீ தேன்னீசுவறரை சேவிச்சு ஆநேகமாகிய சத்துஷ் தங்கதங்கள் ஆசறம்ங்களுக்கு பொனார்கள்.

11. இந்தக் கதையை யாதம் ஒருத்தற் யெழிதினாற்களோ யாதற் ஒருத்தற் சொன்னாற்களோ, யாதற் ஒருத்தற் படிக்கி றார்களோ அவற்கள் யெல்லோரும் ... மாசத்தில் பவுற்ணவுமீ தினத்தில் நிற்ம்மதா நதியில் ஷ்தானம் பண்ணின பலத்தை அடைய்வார்கள் யென்றும், யிந்த லோகத்தில் சகல போக பாக்கி யங்களும் யனுபவிச்சு, அந்தியத்தில் சாவசாயிறியத்தெ அடைய் வார்கள்.

---

9. மயிமெ-மகிமை; ஆநேகமாகிய-அநேகமாகிய; சத்துஷ்டன் - சந்துஷ்டன்;

11. நிற்ம்மதா-நர்மதா;

*12.* இதி பவிஷ்யோத்திற புறானே, சிவட்சேத்திர கண்டே, உபறி பாகேண கஞ்சபுறி மகாத்துமே பிறம்மறாட்சசாய விமோச்சனமாத்திரைய ஸ்திறி மிசோத் தியாயஹா!

*13.* அதற்கு பிறகாலும் இந்த ஷ்தளத்துக்கு கெங்கு தேசாதிபதியான **சேறறாசா** யென்னப்பட்டவன் அநேகமான கய்காறிகள் பண்ணியிறுக்குறான்; அதற்குப் பிறகு தேவஷ்தானம் முதலானது ஜீறணமாயிப் போய்விட்டது.

*14.* அதற்குப் பிறகாலும், ஷெ **கொங்குதேசம், மதுரை** சமஷ்தானத்துக்கு சேந்து யிருந்து, அவாளும் ஷ்தளத்துக்கு ஜீறனோஷத்தாரம் பண்ணினாற்கள்.

*15.* அதற்குப் பிற்காலம், **மயிசூருக்கு** சீற்மைக்கு சேந்தமேல் **சாவடி** தேவஷ்தானத்துக்கு சேந்த சகல வைபவத்துடனே திறக் கால பூசெயும் நடந்து வந்துது.

*16.* இப்புறம் விக்கிறம வறுஷத்தில் இந்த கஞ்சம்பள்ளி கிறாமம் பாலகிஷ்ணதாசு யென்குர வற்த்தகருக்கு சுத்த கால கிரையமான படியினாலே, இந்த கிறாமத்தை சுக்கம்பொம்மு தேவஷ்தானம் சயிதமாயி தனக்கு சேத்திக்கொண்டு, சாவடி தேவஸ்தானத்துக்கு விங்கடம்ப்பண்ணி தானாக மாசகட்டலெயில் நடந்துவருகுர உச்சுவங்கள் சயிதம் சகல சம்பறவத்துடனே நடப்பவிச்சுக்கொண்டு வந்தான்.

---

12. இது வடமொழிச் சுலோகம்; பவிஷ்யோத்திர புராணத்தில், சிவச்சேத்திர கண்டத்தில், உபரிபாகத்தில், கஞ்சபுரி மகாஷ் மியம் கூறப்பட்டுள்ளதாக உளது.

13. கெங்கு-கொங்கு; கய்காறிகள்-கைங்கரியங்கள்;

14. ஜீறனோஷத்தாரம் - ஜீரணோத்தாரணம் = ஜீரண + உத்தாரணம்; பழுதுபார்த்துச் செப்பம் செய்தல்.

15. மயிசூரு - மைசூர்; திறக்கால--திரிகால - மூன்று வேளைகள்

16. உச்சுவங்கள்-உற்சவங்கள்

*17.* அதற்கு பிற்காலம், சித்திறபானு வருடத்தில் **பெறிய நபாபு அயிதற் னாயிக்கன்** னாளையில் கஞ்சம்பள்ளி றெங்கய்ய னவற்கள் சத்தியமங்கலத்து; சுபை பண்ணிக்கொண்டு யிறுக்கும் போது, சேலூரு முகர்ச்சிக்கி சேந்த அச்சம்பாளையத்து பெளிக்கி சேந்த வெங்கட்டிபாளையம் கிறாமம் 1, உட்டுவெளி பேறிசு 130 பணம் . . , . க்கு சுத்த கிரையம் கட்டிறாயன் 2000 . . . . னோட்டமாயி தோசேக்கானெ . . . காலம் செட்டி முகாந்திற மாயி கிறயசாசனம் பண்ணி, அசூருலே யிருந்து ஷ்தளத்துக்கு வந்து, கிறாமத்துக்கு நாலு யெல்லையும் சிலா பிறதிஷ்டை பண்ணி விச்சு இந்த கிறாமத்தில் ஆன ஆதாயகதி அறவாசீ சுவாமி பஷத்தறம் தீபாறாதனை முதலானது நடக்கும்படிக்கி, மைத்த அறவாசீ பிறம்மதாயம் பிறாமண செனம் 1க்கு தானம் சாசனம் பண்ணி கிரைய சாசனமும் தான சாசனமும் சயிற்ன்னீயோதக பூற்வகமாயி குடுத்தார்கள் இந்த பெறக்கீ கற வறுஷம் பறியந் திரம் நடந்து வந்தது.

*18.* அதற்கு பிற்காலம், வறதப்பன் யென்குரவன் **அயிதற்** னபாபோடே சுத்திறம் சொல்லி, கிறாமத்தெ செபுத்தி பண்ணி விச்சான்.

இப்புறம், சுபகிறத்து வறுஷம் ஆறண்யமாயி, **டிப்பு** அதிகாரத்தில் பூறுவம் நடந்துவறனத்து யிறுவது வள்ளக்காடும் மேளதாளம் மத்தறபுஷ்ப்பம் படித்தற தீபாறாதனை காளயுக்த்தி வறுஷ வரைக்கும் நடந்து வந்தது.

---

17. சிலா-கல்; பெறக்கீ-பிரகாரம்; கறவறுஷம் - கர வருடம்; பறியந்திறம் – பரியந்தம் - வரைக்கும்.

18. சுத்திறம் சொல்லி - சுத்திகரம் செய்யச் சொல்லி

# 27. திண்டுக்கல் நகரத்து வியாபார வரலாறு

(டி. 3005; ஆர். 8178)

1. **திண்டுக்கல்** நகரத்திலுள்ள **பட்டுநூல்காரர்** நாட்டாண்மை ரெங்கிசெட்டியார், நாட்டாண்மை கோமறுசெட்டி வியாபார வரலாறு,

| | |
|---|---|
| பட்டுநூல் காரர் வீடு | 15 |
| சேடர் வீடு | 20 |
| | 35 |

1 — அகலம் ஒன்று, அரை, ரெண்டு அரையே அரைக்கால், முக்காலே அரைக்கால் தலைப்பாகைகளுக்குள்ள நாலு வெழிகளில் அச்சு நிசவுண்டு.

2 — அகலம் க, ஒன்றரையே அரைக்கால்...... ராணி தும்படிகளுக்குள்ள அச்சுகளில்

3 — அகலம் — ரெண்டேகால், ரெண்டரை அச்சும் பெண்டுகள் கட்டுகிற சேலைகள் நெசவென் றெண்ணப்படுகிறது.

4 — அகலம் — ரெண்டேகால், ரெண்டு, மூணும் வேட்டி திறமென்று சொல்லப்படுகிறது.

5 — அகலம் — இரண்டரை, ரெண்டே முக்கால் அச்சும் **சோமன் நெசவு** என்று சொல்லப்படுகிறது.

6 — அகலம் — இரண்டு, இரண்டரைக்கால் மூணு வகை அச்சும் **கல்லா நெசவு** என்று சொல்லப்படுகிறது.

---

1. திண்டுக்கல் - திண்டுக்கல் மன்னர் திருமலை மாவட்டத்தின் தலைநகர்.

7ௗ— அகலம்—அரை, இரண்டு - யின் மூணு வகை அச்சும் .........சொல்லப்படுகிறது.

யிவ்வகை... வகை அச்சிலும் நெசவுகள் தினுசுவாரியா மேல் தரம் ஒசத்தி விலையிலும், கீழ்தரம் குறஞ்ச விலையிலும், அவா ளவாளுக்கு வேண்டியபடிக்கி நெசவு வேலைகள் நடப்புக்கள் உண்டென்று சொல்லப்படுகிறது.

அரக்கு சாயம் போடுகிறது
கம்பி சாயம் போடுகிறது.

மேலெழுதியவனுக்கே நெசவுகாறர்களில் செத்தியான வேலைப் பாடு, சாதாவேலை நெசவுகள் இருவகை என்று சொல்லப்படுகிறது.

1. தற்குறி பட்டுநூற்காரர் நாட்டாண்மைக்காரர் கங்கய்ய செட்டி ஒப்பிதம்.

2. தற்குறி சேடர் வகை நாட்டாண்மைகாரர் குமார செட்டி ஒப்பிதம்.

மேற்படி திண்டுக்கல் நகரத்திலுள்ள கோமட்டிகளில் குப்பிசெட்டி, முத்துசாமிசெட்டி, எழுதி வைத்த வரலாறு :-

கோமட்டிகள் வீடு = 30
அரிசி கலிபணம் 1க்கு படி ...விக்கிறது.
சோளம் கலிபணம் 1க்கு படி 15 கொள்ளுகிறது.

திண்டுக்கல் நகரத்தில் வியாபாரிகள் சாணார்பேட்டை வெங்கடாசலநாடான், சின்னசாமி நாடான் ......கடை முத்தரு ளாண்டிய பிள்ளை இவர்கள் எழுதி வைத்த வரலாறு:-

மேற்படி சீமைக்கி சேர்ந்த கன்னிவாடி சீமையில் கசுபாவில் திங்கட்கிழமை சந்தையிற்போய் கொள்ளுகிற சாமான்கள்:

1. மஞ்சள்
2. வெள்ளை வெங்காயம்
3. கடுகு
4. மஞ்சள்
5. கொத்தமல்லி
6. ......
7. மொளகு
8. சுக்கு
9. மொளகாயி
10. யிஞ்சி
11. கசாகசா
12. வசம்பு
13. ஓமம்
14. சீக்காயி
15. யிலுப்பக்கட்டி

மேல் எழுதிய வகைசேர்ந்தவை சந்தையில் விக்கிறதும், திண்டுக்கல்லுக்குள்ள . . . .

யிந்த திண்டுக்கல்லிலே, ஆலையுள்ள வெல்லம், நாட்டுச் சர்க்கரையும், செவத்த வெல்லமும் வாங்குகிறது.

சீனிச்சர்க்கரை திருச்சினாப்பள்ளியிலிருந்து வாங்கிக்கொள்ளு கிறது.

| | |
|---|---|
| சாதிக்கட்டி | அரிதாரம் |
| இலவங்கம் | திலிங்கம் |
| ஏலம் | அன்னத்தி |
| சாம்பிராணி | வால்மிளகு |
| கற்பூரம் | வெள்ளை பாச்சாணம் |
| பச்ச கற்பூரம் | கருப்பு பாச்சாணம் |
| குங்குமப்பூவு | அனாசபூவு |
| கோரோசணம் | லவங்கப்பட்டை |
| புனுகுசடம் | யிந்துப்பு |
| முந்திரி | வளையலுப்பு |
| திப்பிலி | சவுட்டுப்பு |
| தேசாவரம் | கெந்தபொடி உப்பு |
| சித்தறித்தை | மட்டிப்பால் |
| கோஷ்டம் | நெரியாசமாலை |
| அக்கறாகாரம் | வெட்டிவேர் |
| தாளிகபத்திரி | வெளாமிச்சம்வேர் |
| கருஞ்சீரகம் | செடாமஞ்சி |
| கெந்தகம் | முந்திரிபழம் |
| ரசம் | பேரீச்சம்பழம் |

திருச்சினாப்பள்ளியிலிருந்து வரப்படுகிறது.

| | |
|---|---|
| நிலவேம்பு | கோரைக்கிழங்கு |
| சேவியம் | ஆடாதோடை |
| சோளம் | மலைதாங்கிவேர் |
| சித்திரமூலம் | போட் பத்திரி |

| | |
|---|---|
| திப்பிலிமூலம் | தலை சுற்றி |
| விஷ்ணுகிரந்தம் | கண்டங்கத்திரி |
| பற்படாகம் | தூதுவளை |
| சீந்திற்கொடி | நீலிவேர் |

இவைகள் எல்லாம் **திண்டுக்கல் சீமையில்** உண்டாய், அவ்வவ் விடத்தில் வாங்கி வந்து, இவ்விடத்தில் விலையாகிறது.



# 28. முள்ளிப்பாடி கிராமம் ரங்கராஜர் வமிசாவளி

(ஆர். 8180)

1. சாலிவாகன செகம் வருஷம் 1601; கலியுகம் வருஷம் 4800க்கு மேற் செல்லாநின்ற விக்கிரம வருஷம் முதல் முள்ளிப் பாடி கிராமம் சுத்த கருவமான்னியமாக அனுபவித்துக் கொண்டு வரப்பட்டவர்கள் விவரம் எப்படி என்றால்:-

பூர்வம் வடக்கு ராச்சியத்தில் கும்மிடிப்பல்லம் என்கிற ஊரிலிருந்து ராயர் ஸமஸ்தானத்தில் வந்து சேர்ந்து, உத்தியோகம் பண்ணிக்கொண்டு இருந்ததில், தெற்கு ராச்சியத்துக்கு கர்நாடக சிம்மாசனம் நேமித்து மகாராஜ ஸ்ரீ விசுவநாத நாயக்கர் அவர்கள் வருகையில் அக்காலத்தில் எங்கள் பெரியோர்களும் குடிவந்து, கர்நாடக சமஸ்தானத்திலும் உத்தியோகிதம் பண்ணிக்கொண்டு யிருக்கையில், எங்களுக்கு, வீட்டுப்பேர் தம்மிடி பல்லவாரு என்றும் யிப்பவும் சொல்லப்படுகிறது; எங்களுக்கு என்றுள்ள பேர்.

2. நாங்கள் நியோகபிராம்மணராகையினாலேயும், உத்தி யோகம் பண்ணிவந்த படியினாலேயும் யிப்பவும் கோவென்று சொல்லப்படுகிறது.

---

1. முள்ளிப்பாடி - திண்டுக்கல் மன்னர் திருமலை மாவட்டத்து தாடிக்கொம்பு எனும் ஊரை அடுத்தது; சாலிவாகனசகம் 1601 = கி.பி. 1679;

2. கோ-அரசன்; நியோகப்பிராமணன்-பிராமணரில் வைதீக பிராமணர்; நியோகப்பிராமணர் என இருவகை உளர்; அரசாங்கம் தொடர்புடைய தொழில், ஆசிரியத் தொழில் போன்ற தொழில்களில் ஈடுபடுவோர் நியோகப்பிராமணர் எனப்படுவர்.

முன்னாள் முதல் எங்கள் வமிச பரம்பரையாக அமரநாயக்க மாக யிருந்ததினாலே எங்கள் பாரம்பரியமாயி யிருக்கப்பட்ட புருஷர்கள் மக்களில் யாதொருவருக்கு நேமிச்சி சொல்லுகிறோமோ ஆயவர் கிராமம், பூமி பரிபாலனம் பண்ணிக்கொண்டு வருகிறது. திரு காமேஸ்வர ராசகுமாரன் லிங்கராசா, முள்ளிப்பாடி என்கிற கிராமபூமியை கைக்கொண்டு, மேற்படி பூமிகள் எல்லாம் காடுமேடு சவைப்படுத்தி, குடிகளை யேத்திவைச்சி, ஊரென்று உண்டாக்கி, யிஷ்ட தெயிவமாகிய கோகிலாண்டம்பா திருகாமேசுவரசுவாமி சன்னதி கட்டிவைத்து சிவஸ்தலமும், கோபாலகிருஷ்ணன் சன்னதி விஷ்ணு தளமும் பிரதிஷ்டை பண்ணி, தம்முடைய பந்து ஜனங்களாகிய அறுவது வீட்டுக் காரருக்கும் தமக்கும் 61 வீடுகள் பிரம்பால் கட்டிவைத்துகுடுத்து, தாமும் தமக்கு வீடுவாசல் கட்டிக்கொண்டு, அன்னதானம் செய்து கொண்டு முள்ளிப்பாடி கிராமம் ஆண்டு அனுபவித்து கொண்டு வந்ததுக்கு, ஊருக்கு தென்கிழக்கு பெரிய குளமும், அதில் சேர்ந்த கல்மதகு 3, மண்மதகு 1, ஆகே மதகு நாலும் கட்டிவைத்து, அந்த குளக்கரை பளுவாக்கி, வைத்து, அதற்குத் தண்ணீர் வரவுக்கு சுக்காம்பட்டி பாளைக்காரன் சேர்ந்த கோவிலூர் எல்லையில் கலிங்காலும், சந்தன வந்தன ஆறில் கல் அளையும், மேற்படி குளத்துக்கு தெற்கு, மேற்கு சின்னாத்து ஓடக்கை திருப்பி வைத்து, முள்ளிப்பாடி கசுபா - 1, வன்னியப் பட்டி - 1, அனபட்டி - 1, செட்டியம்பட்டி-1, கோணங்கிபட்டி - 1, ஆக அஞ்சு பட்டியும் உண்டாக்கி வைத்து, முள்ளிப்பாடி அக்கிரகாரத்தில் சத்திரமும் கட்டிவைத்து, கல் மண்டபமாகிய அன்னதான சத்திரம் என்று பேர்பட்டு, மாமரங்கள், உண்ணா, என்று தோப்பும் உண்டாக்கி வைச்சு முள்ளிபாடி ஆண்டனுபவித்துக் கொண்டுவிருந்த வருஷம்... ..

3. மேற்படி குமாரன் அய்யாவு ராசா-1, ரங்கராசா-1; ரெண்டு பேரில் ரங்கராசாவாண தமையன் திருச்சினாப்பள்ளி சீமை பேஷ் காராக......... தம்பியான அய்யாவு ராசா, மேற்படி முள்ளிப் பாடியை ஆண்டு அனுபவித்துக் கொண்டு காவிலியப்பட்டி - 1,

---

சவைப்படுத்தி - திருத்தி;
அளை - வளை

நொண்டிபட்டி-1, ரெண்டு பட்டி கட்டிவைத்து ராச்சிதம்பிது பரிபாலனம் பண்ணிக்கொண்டு வந்தார். மேற்படி அய்யாவு ராசகுமாரன் ராமசாமி அய்யர் பிதுராஜ்ஜிதமான கிராமம் ஆண்டு வருகிற நாளையில், சத்திரம், சத்திரத்திலுள்ள லாகடம் என்ற நெல்களஞ்சியமும் சேவைப்படித்தி வைச்சு, தம்முடைய தகப்பனார் நாளையில் திண்டுக்கல் அபிராமி அம்மன் அபிஷேகக் கட்டளை வைக்கிறார். வருஷம் 1க்கு கலி பணம் 60 வீதம் குடுத்துக் கொண்டு, நூறு காணியத்தில் பல வகைகளிலும் வருஷம் 1க்கு பொன்னும் பொறுப்பாக குடுத்துக் கொண்டு, கிராமம் ஆண்டனுபவித்துக் கொண்டு வருமளவில் சர்க்கார் கம்பெனி அதிகாரத்தில் மெத்தகுலோடடு...... நாளையிலும் ரெங்கராஜாயிருப்பு கொடுத்து வந்து..... மொத்த ஆறடிச்சுதுரையவர்கள் நாளையில் பைமாஷ் பண்ணி வருஷம் 1க்கு கலிபணம் 541 நிருதி செயிது யிருந்தபடிக்கி, வருஷா வருஷம் குடுத்துகொண்டு சுரோத்திரிய கிராமமென்றும் ஆண்டனுபவித்துக் கொண்டு வந்தார்...........

ஆத்துமறத்துப்படி - 1; குளந்தப்படி -1 ;
பொம்பினாபடி - 1; ஆக மூணு உண்டாக்கினார்.

1 - மூள்ளிப்பாடி மவுசே
1 - வள்ளிப்பாடி மவுசே
1 - சேட்டிப்பாடி மசறா
1 - அனுப்பாடி மவுசே
1 - கோணங்கிப்பாடி மவுசே
1 - காவிரிப்பட்டி மவுசே
1 - நொண்டிப்பட்டி மவுசே
1 - ஆத்துமரத்துப்பட்டி மவுசே
1 - குளந்தபட்டி மவுசே
1 - பொம்மினார்பட்டி மவுசே
——
10
——

3. ஆறடிச்சு துரை – லார்டு ஹார்டீஸ்;
நிருதி – நிர்ணயித்து;
மவுசே – கிராமம்; மசரா - மஜரா என்ற அரபுச் சொல்;
மஜரா - நகரத்தை ஒட்டிய ஊர்.

4. அப்படி பத்துக்கு எட்டு குழி, மேற்படி குமாரன் அய்யவு ராசா, மேற்படி கிராமம் அனுபவித்துக் கொண்டு, சர்க்கார் கட்டளைப்படி நடந்து வந்தார்.

மேற்படி சகோதரமாகிய ராமசுவாமி அய்யர் குமாரனாகிய ரங்கராசன் என்கிற நான் யிப்போ மூணுவருஷமாக சர்க்கார் கட்டளைபடிக்கி, நிருதி செலுத்திக் கொண்டு சுரோத்திரியம் அனுபவித்துக் கொண்டு வருகிறேன்.

**1816ம் வருடம்** ஜூன் மாதம் 27ந் தேதிக்கு தாது வருஷம் ஆனி மாதம் 14ந் தேதி.

ரங்கராஜர் கையொப்பம்



# 29. திண்டுக்கல் தருமராஜர் கோவில் திருநாள் வரலாறு

(R. 8181)

*1.* பூர்வம் பார்த்த கதைகளை அனுசரித்து, **தருமராஜர் திருநாள்** என்று திண்டுக்கல் நகரத்தில் வேங்கடாசல பூசாரி, முத்துகிருஷ்ண பூசாரி முகாந்திரம் எப்போதும் லோக வழக்கமாய் நடக்கிற வாடிக்கைபடிக்குத் திருநாள் விவரம்

க. வருடந்தோறும் வையாசி மாதம் வசந்தம் நாளில் ஒரு இலக்கினம் நட்சத்திரம் பார்த்து துவக்கி 18 நாள் திருநாளுக்கு திரௌபதி அம்மன் மூலவிக்கிரகத்துக்கும் பூசாரிக்கும் காப்பு கட்டி, முதல் கிருஷ்ணன் பிறப்பும், வளர்ப்பும், தருமபுத்திராதி ஐந்துபேர் பிறப்பும், துரியோதனாதியர் நூறுபேர் பிறப்பும், இவர்களுடைய கதைகளைச் சொல்லிக்கொண்டு வீதி சுற்றுகிறது.

**2.** மேல் எழுதிய கதைகளைத் தமிழ்ப் பாட்டாக உடுக்கை மணியடித்துக்கொண்டு சொல்லி, ஜனங்களுக்குத் தெரியப் படுத்துகிறது.

*6*-ஆம் நாள் திரௌபதி அம்மனையும் . . . . அர்ச்சுனன் . . பக்தியுள்ள செனங்கள் வேஷம் போட்டுக்கொண்டு மகம் னடத்துகிறது.

7-ஆம் நாள், திரௌபதி அர்ச்சுனன் விவாகம் நடக்கிற ஆகமம் நடப்பிக்கிறது:

எட்டாம்நாள் அர்ச்சுனன் ஆயிரத்தெட்டு சிவாலயம், நூத்தெட்டு திருப்பதி, நதிகள் தோறும் தீர்த்தம் ஆடிவருகிற ஆகமம் நடத்துகிறது.

---

2. மகம் - யாகம்

9-ஆம் நாள் ராஜசூய யாகம், தர்மராசா, பீமன், அர்ச்சுனன் நகுலன், சகாதேவன் அஞ்சுபேரும் கூடி தர்மராசா யாகம் பண்ணு கிற ஆகமம் நடத்துகிறது.

3. 10-ஆம் நாள் திரௌபதியம்மன் கட்டின வஸ்திரத்தை துரியோதனனாகிய பங்காளி துயிலுருக்கி மானபங்கம் பண்ணி 12 வருஷம் வனவாசம், 1 வருஷம் அக்கினாத வாசம் பண்ண ஆகமம் நடத்துகிறது.

11-ஆம் நாள் நச்சுப்பொய்கை யாகம் என்கிற வனவாசம் பண்ணபட்ட யிடத்தில் துரியோதனன் தண்ணீர் குளத்தில் தண்ணீர் குடிச்சி, தர்மராசா, பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன், அஞ்சு பேரும் மூற்சைபோயி.. கிருஷ்ணசுவாமி வந்து அஞ்சுபேரையும் எழுப்பின பாவமாகவும் ஆகமம் நடத்துகிறது.

12-ஆம் நாள், கனிபொருந்துறது கருநெல்லி மரத்தில் அஞ்சு பேரும் காயறுத்து... அஞ்சுபேரும் யிரந்து, அது காரணத்துக்கு கிருஷ்ணன் வந்து மனசலே கர்ணன், அர்ச்சுனன் படம் போலே யுள்ள முகம் கண்டதில் கர்ணன் வில்வழைத்து மாலையிடுவான் என்று நினைத்த உரு வெளியாக்கி கனி பொருந்துது என்ற ஆகமம் நடத்துகிறது.

13-ஆம் நாள் அர்ச்சுனன் தபசு நிலை ஆகமம் நடத்துகிறது.

4. 14-ஆம் நாள் அக்கினாதவாசம்... தர்மராசா கெங்குபட்ட ராகவும், பீமன் வண்டகசாலை காரனாகவும், அர்ச்சுனன்..., நகுலன்

---

3. அக்கினாதவாசம் - அஞ்ஞாதவாசம்

4. வண்டகசாலை - சமையற்கூடம்; வண்ட - என்ற சொல் தெலுங்கில் இன்றும் சமையல் என்ற பொருளிலேயே வழங்கு கிறது.

கெங்கு - கங்கன்; இப்பெயரில் தருமன் மறைந்து வாழ்ந்தான். பிருகன்னளை என்ற பெயரில் பேடி வடிவில் மறைந்திருந் தான் அர்ச்சுனன்; தாமக்ரந்தி என்ற பெயரில் மறைந்து வாழ்ந்தவன் நகுலன்;

குதிரை..., சகாதேவன் மாடுமேய்க்கிற வனாகவும், அம்மன் திரௌபதை புஷ்பம் கட்டுகிறவள் ஸ்ரீயைப்போலேயும், பூவாணிச்சி என்கிற பேர் பெத்தவள் என்றும் யிப்படிக்கி மாறுவேஷம் போட்டுக் கொண்டு ஒரு வருஷம் விராடபுரத்தில் வாசம் பண்ணு கிற ஆகமம் நடத்துகிறது.

*15*-ஆம் நாள் உப்பிலாவிய பட்டணமென்ற யிந்திர விளாகம் சேருகிற ஆகமம் நடத்துகிறது; மாகாளிக்கு, அர்ச்சுனன் பிள்ளை நல்லரைவான் என்ற புள்ளையை பொலிகுடுக்கிற ஆகமம் நடக்கிறது.

*17*-ஆம் நாள், துரியோதனன் படுகளம் . . . . பீமசேனனும் துரியோதனனும் ஆகமம் பண்ணுகிறபடிக்கி ரெண்டுபேரும் சண்டை ஆகிறபடிக்கி ஆகமம், நடத்தி, பீமன் செயமான ஆகமமும் துரியோதனன் ஆகமமும், தர்மராசாவுக்கு அஸ்தினாபுரத்தில் பட்டம் கட்டுகிற ஆகமமும், தர்மராசா முதலாகிய அயிவருக்கும் துரியோதனன் என்ற எதிராளி எறந்த . . . .

*18*-ஆம் நாள், பிரம்மத்தியை பிடிச்சி கொள்ளுகிறதும், கிஷ்ணர் வந்து திரௌபதியை அழைத்து தபசு பண்ணினால் பிரம்மத்தி நீங்கும் என்று சொல்லுகிற ஆகமம் நடத்துகிறது.

பதினெட்டுநாள் திருநாள் மேலெழுதிய ஆகம படிக்கி நடந்து, வசந்தம் விருந்து என்கிற திருநாள் நடக்கிறது.

இருவத்தொன்றாம் நாள் கொடி எறக்குகிறது.

---

தந்த்ரீபாலன் என்ற பெயருடன் மறைந்து வாழ்ந்தான் சகாதேவன். மகாபாரதத்தில் விராட பருவத்தில் இந்நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன.

உப்பிலாவிய - உபப்லாவ்ய என்ற நகரம்;

பிரம்மத்தி - பிரம்மஹத்தி;

5. மேல் எழுதிய திருநாளுக்கு நாற்பது ஜனம் காப்புக் கட்டி கொள்ளுகிற ஜனங்களுக்கு வெகு கேழ்கத்துடனே யிருக்கிறது.

அப்படிக்கி தங்கினவாள் ஆயுதங்களில் வெட்டிக் கொள்ளு கிறது; வெட்டப்பட்டவாளுக்கு ஆயாசம் காணவொட்டாது.

6. திண்டுக்கல் கம்பெனியார் பிடிச்சி, அதின் பிறகும் பட்டாளகார வரத்தின் பிறகும் பிரபலமாக வருஷா வருஷம் திருநாள் நடந்து வருகிறது.

தர்மராசாகோவில் யென்ற கோவில் பெருமைக்காரருடைய; நூறு வருஷத்துக்கு முன் கட்டி வைத்திருக்கிறார்கள்.

. , . . திருநாள் அவர்கள் கடை பொலிக்கி எரிகோள் குடுக்கிறது. சோறும் ஆட்டு ரெக்தமும் கலந்து எரிந்தால் ராத்திரி . . . . அந்த சோறும் ஒன்றும் தரையில் வீழ்கிறதில்லை. அப்படிக்கி வேளையறிந்து சோறு எரியறதுண்டு. சோறு கீழே விழுந்தால், அந்தக் கோவிலுக்கும் பூசாரிக்கும் அபசாரம் வரும்.

. . . . மக்கள் ஆறிலே போயி ஸ்நானம் பண்ணி, மஞ்சள் பாவாடை உடுத்திக்கொண்டு, யீர வைராக்கியத்துடனே அக்கினி குழி வெட்டி . . . . அக்கினி தணல் வளத்தியிருக்கிற குழி கிட்ட வருகிறபோது, திரளாக எல்லோரும் அந்த அணலுலே எறங்கி, சுத்தி விளையாடி, மூணுதிறம் கரையில் ஏறிக் கோவிலுக்கு வந்து சேருகிறது.

---

5. கேழ்கம் – வெளிச்செல்லாதிருத்தல்;
கம்பெனியார் பிடிச்சி – கம்பெனியார் காலம் முதல்;
பொலி - பலி;

# 30. வேடச்சந்தையூர் நாட்டாண்மை வாக்குமூலம்

(டி. 3404)

*1.* **வேடச்சந்தையூர்** *கிராமம் கசுபா நாட்டாண்மை 1- சாதி காப்பிலிய சவுட.க்கவுண்டன்; சாங்கோட்டை நாட்டாண்மை 1- சாதிக் காப்பிலிய திருமலைக் கவுண்டன்; அரிய பெத்தன்பட்டி நாட்டாண்மை 1-சடயன் சேருவக்காறன் காளயகவுண்டன்; பட்டி நாட்டாண்மை 1- மைதாண்டவக் கவுண்டன்; மாதிநாயக்கன் பட்டி நாட்டாண்மை 1-குழந்தைவேலன்; நாகணம் பட்டி நாட்டாண்மை 1- சாதிக்குடும்பன் . , . . 1- சடைச்சக் கவுண்டன்* ஆக யிந்தியாதி பேரும் யெழுதிக் கொடுத்த வரலாறு யென்ன வென்றால்,

பூர்வம் ஷெ **வேடச்சந்தையூர் வேடர்** ஆண்டுகொண்டு யிருந் தார்க ளென்றும், அக்காலத்தில் நதிக்கு மேற்கு ஊரு யென்றும் பாளய னத்தம் யென்றும், அதன் பிற்காலம் காடு கொண்டு, அனேக வனமாகவும் இருந்து தென்றும், அதன் பின்பு வடக்கேயிருந்து **அம்மய னாயக்கன் பாளையக்காறன் வந்து** யிந்த வனத்தில்வந்து,வலசக்கூடயை யிறக்கி வட்ச்சயிந்த வூரில் பஸ்திபண்ணி, குடியும் குடித்தினமுமாக யிருந்து குடிப்படகளைச் சேர்த்து பாளையப்பய்யன் -1- அம்மய்ய நாயக்கன்னூரை ஆண்டு கொண்டு வந்தான்.

---

1. வேடச்சந்தையூர்-திண்டுக்கல் மன்னர் திருமலை மாவட்டத்தில் உள்ள ஊர்

2. வேடச்சந்தயூர் **அம்மய னாயக்கன்** ஆண்டு கொண்டிருந்தும் அவன் அந்த ஊர் யிறனூறு வருஷம் யிருந்து ஆண்டு நா நென்றும், இந்த சீவைக்கி **மைசூரார்** வருகுற வரைக்கும் அம்மயனாயக்கன் வசத்தில் . . . . சங்கறகுமாற நாயக்கன், கதரினாயக்கர் -1 காமளனாயக்கற் இப்படிக்கி இவர்கள் ஆண்டுக் கொண்டு வந்தார்கள்.

**காமள நாயக்கர்** நாளையில், **மைசூரார்** வந்து சீமையைக் கட்டிக்கொண்டார்கள். அதுமுதல் அறண்மனை சீமயாயிருந்துது. அறண்மனை சந்துக்கட்டில் வேடச்சந்தயூருக்கு **அம்மய்ய நாயக்கர்** வந்து குடிகளை ஏத்திக்கொண்டு, ஆண்டுகொண்டு யிருந்தார்கள்.

அதுமுதல் அவற்கு பின், அரண்மனை சீமையாக னடந்து வருகுறது.

வேடசந்தயூர் உண்டான நாள் முதல் நெடுகலும். யெங்கள் வம்சாவி விருத்தியாயி குடியுங் குடித்தினமுமாக யிருக்குறோம்.

1816-ஆம் வருடம் மே மாதம் 30-ஆம் நாள் தற்குரி சவுக் கவுண்டன், திருமலைக் கவுண்டன், சடயக்கவுண்டன், சடைச்ச கவுண்டன், குளந்தவேலன், நாட்டுக்கணக்கு முத்தியால்ப் பிள்ளை.

---

**2. ஆண்டுநா நென்றும் - ஆண்டான் என்றும்; சந்துக்கட்டில்- போரில்;**



# 31. வேடச்சந்தையூர் கிராமம் நாகன்பட்டி நாட்டாண்மை எழுதிக்கொடுத்த வரலாறு

(டி. 3405)

1. வேடசந்தயூர் கிராமம், நாகன்பட்டி நாட்டாண்மை சடச்சகவுண்டன் யெழுதிக் கொடுத்த வரலாற் யென்னவென்றால், ''யெங்கள் ஜாதி குறும்பர்; நாங்கள் செய்குற தொழில் யென்ன வென்றால், ஆண் பிள்ளை குடித்தினம் செய்குறது; பெண் பிள்ளைகள் பாளயத்துக்குறும்பாட்டில் மயிரு அறுத்து, அஞ்சுமுளக் கம்பளி நெய்து, தேவையான பேருக்கு கம்பளி 1க்கு கிறயம் கலிபணம் $1\frac{1}{2}$—2—$2\frac{1}{2}$ யிந்த விலைகளுக்கு விற்குறது; யெங்கள் குறும்பசாதி நடப்பு யென்னவென்றால், யெங்களுக்கு குலதெய்வம் லக்ஷிமிதேவி; ஷெ தெய்வம் குலதெய்வமாக கும்பிட்டுக்கொண்டு வருகுறோம்; அந்த தெய்வத்துக்கு குற்றம் குறை வந்தால், பிரார்த்தனை உள்ள பேர் தேங்காயெடுத்துக் கொண்டு, ஆண்பிள்ளை யாவது பெண்பிள்ளையாவது தலைமேலே வைத்தால் றெண்டாயிப் போறது உண்டு. யெங்கள் சாதி வரலாற் யெனக்கு தெரியவராது. யெங்கள் சாதியாற் தாடிக்கொம்பு கிராமத்தில் பாப்பணம்பட்டியி லிருக்குறார்கள்.

தற்குறி சடைச்சகவுண்டன்.



# 32. அகரத்து முத்தாலம்மன் வரலாறு

(டி. 3406)

*1.* அகறத்து முத்தால் அம்மன் ஆதியிலே வந்த விபறத்துக்கு ஷெ கோவில் ஸ்தானீகம் சக்கிறராயர் பூசாரி பொன்னையஞ் செட்டி யெழுதிக் கொடுத்த கைபீத்து.

*1816*-ஆம் ஆண்டு சூன் மாதம் 4-ஆம் நாள் ஸ்தானீகம் சக்கறாயர் பூசாரி பொன்னையஞ் செட்டி யெளுதிக் கொடுத்தது அகறத்து முத்தால் அம்மன் பூர்வத்தில் னூரு வருஷத்துக்கு முன் முன்னிருந்த திண்டுக்கல் சீர்மை கர்த்தாவாகிய சக்கிறறாயர் வடக்கு ராஜ்ஜியத்தில் விஜயனகறம் பட்டணத்தில் ராஜராஜஸ்ரீ கிருஷ்ணராயர் அவர்கள் நாளயில், அறண்மனைக் காரியமாக ஷெ ராயர் சமூகத்துக்கு ஷெ சக்கிறராயர் போயிருக்குறபோது, ஷெ விஜயநகர பட்டணத்தில் முத்தியாலம்மன் கோவில் விடுதியில் இறங்கியிருந்து, மறுபடியும் தெற்கு நோக்கி திண்டுக்கல்லுக்கு வருகுறபோது, ஷெ முத்தியாலம்மாள் பிரகாசமுள்ள யெலுமிச்சம் பழம் போலையும், பல்லாக்கிலே யெழுந்தருளி வந்து, சான்னித்திய மாகக் காட்டினபடியினாலே, தாடிக்கொம்பு கிராம அகறத்தில் வந்து, நிலமயாயிருந்து, ஷெ சக்கிறராயர் கல்மண்டபம் கோயிலும் கெர்ப்பகிறகமும் அர்த்த மண்டபம், மகாமண்டபம் சுத்தி மதிள், ரெண்டு ஆண் பூதம் பொண் பூதம், கோவிலுக்கு பதினாறுகால் மண்டபம், உடமை பூட்டுகிற நாலுகால் மண்டபம், வேடிக்கை பார்க்கும் நாலுகால் மண்டபம், இவ்வளவும் உண்டு பண்ணி,

---

1. அகரம் - திண்டுக்கல்லுக்கு வடக்கே ஆறுகல் தொலைவில், குடவனாற்றங்கரையில் உளது.

அகரத்து முத்தாலம்மன் கோயில் விழா ஒவ்வொரு ஆண்டும் அக்-செப்டம்பர் மாதத்தில் நடக்கும்; சுற்றுப்புற ஊர் மக்களும் இதற்காக அங்கு கூடுவர். கூத்து முதலியன அகரத்தில் நிகழும்.

நித்தியபடி நெய்விளக்கும் விசேஷ நாள் பூசை உண்டு பண்ணி, நடப்பிவிச்சுக்கொண்டு வந்ததிநாலே **அகரத்து முத்தாலம்மாள் கோவில்** யென்று பேர் வரப்பட்டது.

2. ஷ்டி முத்தியாலம்மாளுக்கு வருஷா வருஷம் திருவிழா நடந்துவருகிற வழக்கம் யெப்படி யென்றால், புரட்டாசி மாதம் கடசி நாயத்திக்கிழமை காப்பு கட்டுகிறது; விபூதி கிண்ணமான பண்டாறப் பொட்டியை பல்லாக்கிலே யெழுந்தருளப் பண்ணி, பதினாறுகால் மண்டபத்துக்கு வந்து, கேளிக்கை வாத்தியமுடனே னடந்துகொண்டு வருகுறது. வெள்ளிக்கிழமை தினம் நல்லநாளில், நல்ல முகூர்த்தத்தில், ஷ்டி கோவிலுக்கு வடக்கு கூரைக்கட்டு வீட்டில் முகூர்த்தம் பண்ணி, மன்றாடியான் மிருத்திகை கொண்டு வந்து, அம்மனை உண்டுபண்ணிக்கொண்டு யிருக்குறது.

நாயத்திக்கிழமை ராத்திரி அம்மாள் உருவாறம் உண்டுபண்ணி, ஆனதன்பிறகு, புண்ணியாதானம் பண்ணி, கோவிலுக்கு மேற்கே நாலுகால் மண்டபத்தில் கொண்டுபோய் வச்சு, உடமகளைப் பூட்டி, சப்பறத்திலே யெழுந்தருளப் பண்ணி. பதினாறுகால் மண்டபத்திலே வந்து சோத்து விருந்து, திருவிளா அர்ச்சனை காணிக்ககள் மத்ததும் போட்டு, வெகுசனங்கள் வந்து பிராத்தினை செலுத்துவார்கள்.

திங்கள் கிழமை ராத்திரி நாலுகால் மண்டபத்திலே வந்து, வாணவேடிக்கை பார்த்து, மறுநாள் செவ்வாய்க்கிழமை சூரிய உதயத்துக்கு ஊருக்கும், ஆத்துக்கும் கிளக்கு தாடிக்கொம்புக்கு வடக்கு பூஞ்சோலையில் கொண்டு வைத்து, உடமைகளை யெல்லாம் களற்றிக் கொள்ளுகிறது.

3. இப்படி, பத்துநாளைய திருவிளா நடக்குறது. ஷ்டி பூஞ்சோலையில், நாலு அஞ்சு நாளைக்குள்ளாக மழை வருஷித்து, உருவாறமெல்லாம் கரைந்து குளிர்ந்து போகும். அதில் குப்பிற விளுந்தால் ராஜ்ஜியத்துக்கும் பிறசகளுக்கும் சவுக்கியமென்றும், மல்லாக்க விழுந்தால் ராச்சியத்துக்கும் பிறசகளுக்கும் கெடுத லென்றும் சொல்லப்படுகுறது.

4. ஷி அம்மன் திருநாள் பத்துநாள் திருநாளுக்கு ராச்சியத்து பிறசகளெல்லாம் வறப்பட்ட காணிக்ககள் நாலே உத்ஸவம் நடந்து வருகிறது; அல்லது ஷி ஸ்தலத்தாள் கடன் வாங்கிச் செய்தாலும் ஷி திருநாளிலே வறப்பட்ட காணிக்ககளிநாலே யீடாகி வரும்; வறப்பட்ட காணிக்ககளிலே மிச்சமுண்டாநால், ஸ்தலத்தாளாக கொண்டு இருக்குற ஸ்தலத்தார் சம்பளம் யெடுத்துக்கொள்ளுகுறது. அம்மனுக்கு உடமை பண்ணிவிக்குறது உண்டு. யிப்படிக்கி வருஷா வருஷம் அம்மனை **கவுளி சகுனம்** கேட்டு, திருவிளா நடந்துக் கொண்டு ராச்சிய பிறசித்தம் பயனடைந்து வருகிறது.

சக்கறராயர் பூசாரி பொன்னப்ப செட்டி.

---

4. கவுளிசகுனம் - பல்லிச்சகுனம் - திருவிழா நடத்து முன், அம்மன் சன்னதியில் பல்லி எழுப்பும் சகுனம் கேட்டுத்தான் தொடங்குவர். அவ்வாறு பல்லியின் சத்தமாகிய சகுனம் கேட்கவில்லையாயின், விழா நடத்த முடிவு செய்யார். இப்பழக்கம் தொன்று தொட்டு, இன்று வரை நடக்கிறது அகரத்தில்.



# 33. குட்டம் கிராமத்துக் குப்பாகவுண்டன் எழுதிக் கொடுத்த வரலாறு

(டி. 3407)

*1.* தாடிக்கொம்பு துக்குடிச் சேகறம் குட்டம் மிடாகசுபா குட்டம் கிராமத்திலிருக்கும் பொம்மக்கவுண்டன் பேராகிய பூசாரிக் கவுண்டன் நாட்டாண்மை குப்பாகவுண்டன் யெழுதிக் கொடுத்த வரலாற் யென்னவென்றால், பூர்வத்தில் ஒரு கம்பழத்தான் பாளையப்பட்டாய் ஆண்டுக்கொண்டு யிருந்தானென்றும், அவன் மக நாலு பேரும், ஒருத்தன் கயற்றயும், கோட்டயில் ஒருத்தன் ஆக இப்படிக்கி நாலுபேரும், நாலு ஊரிலே ஆண்டுகொண்டு வந்தார்களென்று, அதில் பெரியவன் கூட்டத்தாநென்றும், அவனுக் கிளையவன் கல்வாறப்பட்டியான் அவனுக்கிளையவன் கோட்டயான், இப்படிக்கி நாலுபேரும் கேழ்விப்பட்டிருக்கிறது.

2. அதற்கு, பிற்காலம் விருபாக்ஷி பாளையக்காறன் இந்த நாலு கிராமத்தையும் அடிக்கொண்டு, பாளையப்பட்டு ஆண்டுக் கொண்டு வந்தான். நாங்கள் பாரம்பரியமான வமுசத்தில், மூணு தலைமுறயாய் குட்டங் கிராமத்தில் குடியா யிருக்குறது. கும்பினி சர்க்காரிலே யென்னை ஷெ யென் குட்டங் கிராமத்தில் நாட்டாண்மை நேமிச்சு, சர்க்கார் காரியம் நடக்கும்படியாய் நேமித்தார்கள்.

---

1. தாடிக்கொம்பு - திண்டுக்கல்லுக்கு வடக்கே ஐந்து மைல் தொலைவில் உள்ள ஊர்; சுந்தரராஜப் பெருமாள் எனும் அழகர்கோயில் இங்கு உளது.

2. விருபாக்ஷி - பழனிக்குக் கிழக்கே 13 மைல் தொலைவில் உள்ள ஊர்.

ஷி யெனக்கு நாட்டாண்மை மணியத்துக்கு ஒருகுழி யளவில் சாரியில்லை. சர்க்கார் காரியத்தில் னடந்து கொண்டு வந்தேன், இப்படி கும்பினி சர்க்காருக்கு யிருபத்தி ரெண்டு வருஷமாய் சர்க்கார் சிலவுகளையும் ஜாக்கிரதையாய் பார்த்து வருகிறேன். யென் ஊழியத்துக்குள்ள நாட்டாண்மை யென்பேரில் தயவு செய்து சர்க்காரில் உத்திறவு செய்யவேணுமென்று காத்திருக்குறேன்.

தாது வருடம் வைய்யாசி மாதம் 15-ஆம் நாள்; தற்குறி குப்பகவுண்டன்.



# 34. கல்வாரப்பட்டி நாட்டாண்மை எழுதிக் கொடுத்த வரலாறு

(டி. 3408)

*1.* **திண்டுக்கல்** யிலாகா நாடிக்கொம்பு துக்குடி சேகறம் குட்டம் மிடா கல்வாறப்பட்டி கிராமம் நாட்டாண்மை சாதிலியா காப்பிலிய வேலச்சகவுண்டன் யெழுதிக் கொடுத்த வரலாறு - யென்னவென்றால்,

**2.** சாதிலயா காப்பிலிய ரென்று பேர் முன் பூர்வத்தில் ஆஸ்தானத்தில் பந்தியில் சாப்புடுகுற போது, கூட்டமா யிருக்குற போது. யெங்கள் பந்திக்கி சாருகூடி மிச்சம் வராததுனாலே சாதி யிலயா காப்பிலியரென்று பேர் வறப்படடது; நாளது வறயிலும் மாமுச பதார்த்தம் சாப்புடுகுறதில்லை; பிலாக்காயும் சாப்படுகுற தில்லை; பிலா, பால் வருகுறதுநாலே சாப்படுகிறதில்லை வளக்கம்.

ஷெ கிராமத்துக்குச் சேர்ந்த குட்டம் கல்வாரப்பட்டியாறயும் கோட்டை புதுக்கோட்டை நாலுகோட்டையும் போட்டு, ஆண்டுக் கொண்டிருந்தார்கள்.

**விரூபாக்ஷி பாயைப்பட்டான்** சீமை கட்டிக்கொண்டிருந்தான்; அவாளிடத்தில் நாங்கள் மூணு தலமுறயாய் குடித்தினம் பண்ணிக் கொண்டிருந்தோம், சாதியில் காப்பிலிய வேலக்கவுண்டன் ஷெ நாலு கிராமத்திலேயும் நாலு துரைமக்களந யிருந்து ஆண்டுக் கொண்டு யிருந்தார்க ளென்று கேழ்விப்படுகுறோம்.

---

1. கல்வாரப்பட்டி - திண்டுக்கல் தாலுகாவின் வடபகுதியில் அமைந்துள்ள ஊர்; வரலாற்றுக்கு முற்பட்ட மனிதர்கள் (Prehistoric people) இவ்வூரில் வாழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளன.

2. சாதிலயா காப்பிலியர் - சாறிலிய காப்பிலியர்' மாமுச-மாமிச

# 35. பேகம்பூர் பள்ளிவாசல் வரலாறு

(டி. 3410)

1. **திண்டுக்கல்** வகையறா, தாடிக்கொம்பு துக்குடி சேகறம், பேகம்பூரில் யிருக்கும் மோக்பறா பள்ளிவாசலுடைய வறலார் - 1816-ஆம் வருடம் சூன் மாதம் 17-ஆம் நாள் - தரியாப்த்து நிட்டலநாயனா அய்யன் எழுத்து.

2. **ஹஜறது னபாபு அயிதர், ஸ்ரீ** ரெங்கப்பட்ட**ணம்** துரைத்தினம் செய்யு னாளையில், தம்முடைய மச்சினன் ராஜராஜ ஸ்ரீ னபாபு **மீறுற்சாலிகான் சாயுபு** அவர்களுக்கு, திண்டுக்கல் சீமை ஜாகீராக விட்டுக் குடுத்து, ஷெ திண்டுக்கல் சீற்மை னபாபு மீறுற் சாலிகான் துரைத்தினம் செய்குறபோது, ஷெயாற் பெண்சாதி அஜறத்து பேகம் சாயபு அவர்கள், னந்தன வருடம் ஆணி மாதம் 13.ஆம் நாளில் பெறந்துது; யேழாநாள் தெய்வகதியாக யெறந்து போநான்.

2. அதன்பிறகு, **பேகம்சாயபு** அவர்கள், அடக்கம் செய்து, பள்ளிவாசலும் கட்டி, கோரி கட்டிவைக்குறது; தோப்பு வச்சி, **எங்கள்** ஒன்பது பேறயும் நேமுகம் செய்து, வருஷத்தில் **கலிபணம் 373**க்கு சர்வமாக ஜாகீராயி, 1-தோப்பு, -1 பேகம்பூர். 1-பனங்குன்று, 1-சின்னப்பன்னப்பட்டி இந்த நாலு வகயும், நஞ்ச புஞ்சை உள்பட ஒட்டுதும் இருநூற்றுத் தொண்ணூற்றொன்றே காலே மூன்று வீசும் மாகாணி விட்டு, உங்கள் வமுச பாறம்பரியமாயி, மாமூலாயி, இவ்வகை கிராமங்களும் தோப்பும் குளமும் நீங்களே அனுபவிச்சுக்கொண்டு, **பேகம் சாயபுவை** அடக்கம்

---

1. தரியாப்து-தரியாபத்து எனவும் தமிழ் ஆவணங்களில் வரும்; தரியாப்து என்பது பாரசீகச் சொல்; விசாரணை (Enquiry) என்பது பொருள்.
2. அயிதர்-ஹைதர் (Hyder)
2. நேமுகம்-நியமனம்

பண்ணப்பட்ட முகபரா பள்ளிவாசலில் பணிவிடை செயிதுக் கொண்டு யிருக்கக் கடவதென்று கட்டளையிட்டார்கள்.

3. அந்த நாள் முதல், நாங்கள் தலைமுறை தலைமுறையாய் அனுபவிச்சுக் கொண்டு வருகுறோம். முன்னாலே பேகம்சாயபுவை அடக்கம் பண்ணிந யிடத்தின் மும்பில், தண்ணீர்விட்டு, வெளக்கு யெரிந்துதென்று சொல்லப்படுகுறது.

இப்போது, அப்படிக் காணப்படுகுறதில்லை. முகறப்பா யென்குற பேகம் சாயபுவை அடக்கம் பண்ண இடம், பத்துமாருக்கு பத்துமார் கொறடு கட்டியிருக்குறது அந்த கொறட்டும் பேரில் ரெண்டுமாற் கொறடுவிட்டு, நடுவே கனமான வளயலாக வேலை தீர்த்து, நாலு திக்கிலும் நாலு சின்ன கலசங்களும், நடுவே பெரிய பொன் கலசம் வைக்கப்பட்ட யிடமும் உண்டாக்கி, அதன் சுத்திலே பிறதக்ஷணம் பண்ணும் தாவாறம் போலே கட்டி, அதில் வாசல்களை வைச்சு, மொகலாயி வேலயாக வெள்ளை காரை பூச்சி வெழுமுனாக வேலை செய்திருக்குற பிறகாசமான யிடம் உள்ளதற்கு, தினமும் பக்கிரிகள் வருகையும், வழிபோக்கர் வருகுறபேருக்கு சோரு குடுக்குறதும் உண்டு.

மேலெழுதிய மொகர்பானின் யிடத்துக்கு மேற்கு இதுகாவென்று ஒரு யிடம் சங்கறணையாக, ஆரூகமான குண்டு போலே வைக்கப்பட்டு மொகலாயிதராவாக ஆறு குண்டும் மேலே வைக்கப்பட்டு, ஆரு வாசல் போலேயும், னகுவே அவாள் வேதம் படிக்கப்பட்ட மேடை போட்டு யிருக்குறயிடம் - 1 - பேகம்பூர் ராமகர்ப்பாவென்று பிறபலமாக பெரியதோட்டமும், அந்த பேகம் சமாதிக்கி சர்வ மானியமும் நடக்கப்பட்டு ரொம்பவும் துலுக்கர் மதாசாறம் பிறபலப்பட்டு இருக்குறது

தோட்டத்தில் தென்னமறங்கள் மிகுந்து யிருக்குறது; பாக்கு மறம், பெலா மறம், கிச்சிலி மறம், யெலுமிச்ச மறம், மாமறம் இதுகள் கொஞ்சம் கொஞ்சம் இருக்குறது. சந்தன மரங்கள் விஸ்தாறம் உண்டு. அந்த விரைகள் விழுந்த யிடத்திலே செடிகள் ரொம்ப முளைத்திருக்குறது. தோட்டம் சுத்திலும் வேலி போட்டு இருக்குறது.



# 36. பழனித் தலவரலாறு

(டி. 3093)

1816 - ஆம் வருஷம் எப்பிறல் மாசம் 22 - ஆம் நாள், கோயம்முத்தூற் தாலுகா ஜில்லா வகைறாவுக்கு சேந்த திண்டிக்கல் தாலுகு அய்யம்பள்ளி துகுடி கசுபா பழனி மகாஸ்தளம் வரலாறு கைபீது

*அ. தறியாபத்து நிட்டல னாயனனய்யன்*

1. *ஸ்கந்த புறாணத்தில், கிறிப்பிறகாச காண்டத்தில், வறாக கிறி பிறசம்சயில் சறிவில் உள்ள* திருவிஆவினங்குடி *ஆகிய சுப்பிறம்மணியஸ் தள மகிமையை வெளக்கமாயி சொல்லச் சொல்லி னயிமிசாறிணிய வசிகளான றிஷிகள் கேழ்க்க சுத புறாணிகற் சொல்லப்பட்ட பழனி புறாண மென்குற யிருபத்தி னாலு சொற்க்கம் உள்ள கதையில் ஸ்தளமகிமை, கிறி மகிமை, வனமகிமை, மூற்தி மகிமை யாகிய்யின மகிமைகள் சொல்லி வருகிறது.*

2. பூற்வத்தில், திரு-லெக்ஷிமி, ஆ-காமதேனு, யினன்-சூறியன், கு-பூதேவி, யிடி- அக்கினி யிவாளஞ்சி பேரும் ஒரு காறணாற்த்தத்துனாலே தபசு செயிது, சாப விமோசன மானத்து னாலே, திருவாவினங்குடி என்று பேற் வறலாச்சிது.

---

அ. நிட்டலநாயனன் ஐயன் என்பவரின சொந்தக் கையெழுத்தில் எழுதப்பட்டது இச்சுவடி.

பழனி - திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள முருகன் தலம்.

1. திருவாவினன்குடி-பழனி; சொற்க்கம் சருக்கம்;

2. திரு + ஆ + இனன் + கு + (இ)டி என்று பிரித்துக் கொண்டு விளக்குகிறது சுவடி.

3. பூற்வத்தில், பிறம்மாவிடத்தில் னாறதற் வீணாகானம் பண்ண, பிறம்மா மாதலம் பழம் குடுக்க னாறதற் அப்புறம் சிவனுக்கு ஆனதென்று சிவனுக்கு குடுக்க, சிவன் ரெண்டு புள்ளையும் பாத்து, யிப்பழம் வேண்டி பூ பிறதிக்ஷணம் பண்ணி முன்னே வந்தவாளுக்கு குடுக்குறோமென்று சிவன் சொல்வாற்தைபடி மயில்வாகனத்தி மேல் ஏறி சுப்பிறமணியர் பூ பிறதிக்ஷணம் பண்ண போக, கெணபதி யானவெற் எழுந்திரந்து யிசுறனை பிறதிக்ஷணம் பண்ணி நிற்க, கெணபதிக்கி பழம் குடுத்தாற்

சுப்பிறமணியற் பூ பிறதக்ஷணம் பண்ணிவந்து நின்று, தமயன் கையிலுள்ள பழத்தை பாத்து, "என்னை போகச்சொல்லி அவனுக்கு பழம் குடுத்தாரெ"ன்றுள்ள கோபத்துனாலே சுப்பிற மணியற் கைலாசம் விட்டு, திருவாவினன்குடிக்கி வந்தாற். உடனே, சிவனும் பாற்வதியும் வந்து, சுப்பிறமணியரை எடுத்து மடியில் வைச்சிக்கொண்டு, "அது பழமல்லா! நீயே பழமெ"ன்று கொலாவுனதுனாலே **பழனி** என்று பேற் வறலாச்சி தென்று சொல்லப்படுகுறது,

4 யிப்படிக்கி **பழனி** என்றுள்ள பேற் வருகுறதுமுன்னே சுயமாயிருக்குற பெரிஆவிடையாரை மகாவிஷ்ணு மச்சாவதார மெடுத்து பூசித்திபடியிலே சபறபுறமென்றும் பேற் உண்டென்று சொல்லப்படுகுறது.

5. பெரிஆவடையாருக்கும், பெரினாயகி அம்மனுக்கும் திருகல்யாணமானத்துனாலே சிவகெணங்க ளெல்லாம் வந்த போது, சிவபுறமென்றும் பேற் வறப்பட்டுது.

6. தபுசு பண்ண லெக்ஷிமியை விஷ்ணு வந்து கூடினபடியினாலே **லக்ஷிமினாறாயணபுற**மென்று பேற் வறலாச்சிது.

---

3. வீணாகானம்-வீணை இசை; மாதலம்-மாதுளம்; பூ-பூமி; கொலாவுனது-குலாவினது;

6. தபுசு–தவம்;
சிவனும் செகிதியுமாக – சிவன் உமை சகிதமாக;

7. அகஸ்தியரு பொதியமா மலெக்கி போகுறபோது பறமேசுறன் தன்னெபோலே பூசைபண்ணச் சொல்லி, சிவனும் செகிதியுமாக ரெண்டு மலை குடுத்தார். அதை அகஸ்தியர் கைலாசத் திலிருந்து கொண்டுவந்து, கேதாறத்துக்கு வடதிக்கில் பூற்ச்ச வனத்தில் கொண்டுவந்து வைச்சு போட்டு, அவற் பொதியமா மலைக்கிப் போயி, யிடும்பாசுறன் என்குறவனை அனுப்பி, அந்த மலைகளை ரெண்டும் காவடியாகக் கட்டி எடுத்துக்கொண்டு வறச்சொல்லி அனுப்பினத்துனாலே யிடும்பாசுறன் மலையெ ரெண்டும் காவடியாக எடுத்துக்கொண்டு பொதியமாமலைக்கி போக, திருவாவினன்குடி வழியே வருகுறபோது, யிடிம்பாசுறனுக்கு பசியும் தாகமும் உண்டாயி, காவடி எறக்கிப்போட்டு, ஒரு கொளம் உண்டுபண்ணி, தானம் செய்து கந்தமூல பலாதிகள் பச்சிச்சி, தாகமும் தீற்த்துகொண்டு, காவடி எடுக்குறபோது, திருவாவினன்குடியி லுள்ள சுப்பிறமணியற் பால றூபமாயி அந்த மலையின் பேறில் குறாமறத்தடியில் நின்றிறுந்தாற். காவடி எடுபடாம விருந்தபடியினாலே மலையை சோதனை பண்ணு மளவில், பாலறூபமான சுவாமியை கண்டு "நீர் கீழே எறங்கும்! னான் மலையெ எடுத்துக்கொண்டு போகவேணு மெ"ன்று சொல்லினபடியீனாலே, "என் ஜீவன் போனாலும் விடமாட்டே னெ"ன்று நெரிங்கி கிட்ட வந்தபடியினாலே, குத்தி அந்த யிடிம்பா சுறனை கொண்ணு போட்டு, மறுபடியும் யிடிம்பாசுறன் பெண்சாதி பறிதாவத்துனாலே அவனை எழிப்பி, "நீயும் யிவடத்திலண்ம்மை காத்திருக்க" சொல்லி கட்டளையிட்டு, மலை ஏறி போறபோது, அகஸ்தியர் அரிந்து கிறியை பூசைபண்ணின படியினாலே, சிவகிறி என்றும் பேற்பட, தெண்டாயுதபாணியாகவும், வாமன மூற்தியாக மேற்க்கு முகமாக நின்று கொண்டாற்.

8. யிடிம்பாசுறனானவன் கேட்டு கொண்ட வறத்துனாலே, முன் பூசை உனக்கென்றுள்ள வறம் பெத்து, யிடிம்பாசுறனும் மலையை காத்துகொள்ள நின்றான்.

9. சுவாமி யிருக்கிற மலைக்கி சிவகிறி என்றும், கிழக்குள்ள மலைக்கி செகிதிகிறி என்றும் பேற உண்டாச்சிது.

---

7. கொளம் – குளம்; தானம் - ஸ்நானம்; கந்தம் - வேர் - கிழங்கு; பச்சிச்சி - தின்று;

10. தெண்டாயுதபாணி அவதரிச்சி யிருக்குற சிவகிறியின் பேறில் சூறியதீற்தம், அமுறுத தீற்தம், சூசிமகா தீற்தம், யின் மூணு தீற்தமிருக்குறது.

11. யீசாநம் தத்துபுறுஷம் அகோறம் வாமதேவம் சத்தி யோ ஜாதம் அதோ முகம்! ஆகயின் ஆறுமுகமாயி சுப்பிற மணியற் வறாக கிறியை பாற்குறபோது அந்த கிறியில் யிருந்து ஆறு நதியாக வந்து ஒன்றாயி கூடி ஷண்முகனதி என்று பேற் உண்டாயி, உத்திர வாகினியாக பெருகல் உண்டாயி ஆமறாவதி சங்கமமாயி காவேறியிலே சேறுகுறது.

12. தெண்டாயுதபாணி அவுதறிச்சி சிவகிறி யென்றும், பழனி யென்றும் பேற்பட்டு வாமதேவரிஷி, அத்திறிறிஷி, ஆங்கிற றிஷி, பிறிங்கி-யிது றிஷிகள் தெரிசித்து, யின்னாலு றிஷிகளும் திருவா வினன்குடி சன்னதியில் யிருந்தார்கள். யிப்படி யிருக்கும் னாளையில் சேரன், சோளன், பாண்டியன் மூண்று றாசாக்களும் ஸ்தளங்கள்தோரும் தெரிசனம் பண்ணிக்கொண்டு, திருவாவினங் குடியிலும் சுப்பிறம்மணியற் தெரிச்னம் பண்ணிகொண்டு போற போது, றிஷிகள் னாலுபேரும் கண்டு, மூணு றாசாக்களிலும் சேறறாசாவை பாத்து, "உன் வமுசஸ்தனான கவுசெலா சேறன் என்குற றாஜா யின் ஷண்முகநதி அணையும், கவுசிலா புறமென்று பட்டணம் உண்டுபண்ணி அது பட்டணத்தை சுத்தி, அஷ்ட மங்கல மென்று எட்டு கிறாமமும், எட்டு கிறாமத்திலும் எட்டு சிவ பிறதிஷ்டையும் பண்ணி, யிதுக்கு சாற்வாயினூரு ஊற் உண்டு பண்ணி, யாகாதிகள் பண்ணும்படியாயி பனிரெண்டு பள்ளி என்று றிஷியாசிறமங்கள் உண்டுபண்ணி யிருக்குறாறென்றும், பழனி பிறதாபத்தையும் தெண்டாயுதபாணி சான்னியத்தை எல்லாம் றிஷிகள் சேறறாசாவுக்கு சொல்ல, கன்னிகாற வனம், குவ்வுளவணம், ஆமலக நெல்லி வனம் இன்மூன்று வனத்துனுடைய காரணத்தையும்

---

10. யின் மூனு – இம் மூன்று

11. நான்கு திக்குகளுக்கு நான்கு முகங்களும்; மேலும் கீழுமாக இருமுகங்களும் ஆக ஆறுமுகங்கள்

12. அவுதறிச்சி-அவதரித்து; ஆமலகம்-நெல்லி

பிறபாவங்கள் எல்லாம் சொல்லகேட்டு சேறறாசாவானவற் சிவகிறி மலையின் மேலேரி தெண்டாயுதபாணி சுறூபமான சுப்பிறமணிய சுவாமி தெரிசினம் செயிது சேறமான் பெருமாளுக்கு தெரிசினம் குடுத்த தெண்டாயுத ரூபமானபடியே, முண்யிடிம் பாகறனுக்கு பிறசன்னமானபடிக்கி, பக்தனென்று சேறமானுக்கு தெறசினம் குடுத்தாற் அப்போவே விசுவகற்மாவை அழைப்பித்து யிந்த சிவகிறியின் பேறில் னமக்கு தெரிசனம் ஆன தெண்டாயுத பாணி சுறுபம் மரைஞ்சுது அது ரூபம் போலே உண்டு செயிது தெரிசித்துகொள்ள வேணுமென்று சொல்லி, விசுவகற்மாவினாலே தெண்டாயுதபாணி பிம்ப றூபமும் திருப்பணி விமானமும் உண்டு செயிது, வேத வாக்கியங்கள்னாலே பிறதிஷ்டை செயிது தேவேந்திராதி முதலாகிய றிஷிகள் எல்லாவரும் தெரிசித்தாற்கள் என்று புறாணத்தில் சொல்லி வருகுறது.

13. கிறுத யுகத்தில் செபறபுற மென்று பேற் சொல்லப் படுகுறது

14. திரேதாயுகத்தில் சிவபுற மென்று பேற்சொல்லப் படுகுறது.

15, துவாபற யுகத்திலே கவசலாபுறமென்று சொல்லப் படுகுறது.

16. கலியுகத்திலே கன்னிகாற்வனம், கொங்கயிலவு வன மென்றும், பழனி யென்றும் பேற்சொல்லப்படுகுறது.

17. பூற்வம் யிடிம்பாசுறன் காவடியாக கொண்டு வந்த மலையில், தெண்டாயுதபாணி அவுதறிச்சி, அவற் சான்னியத்துனாலே லோகத்தில் எல்லாவரும் காவடி செலித்திவக்கக் கடவதாக பக்தியுண்டாகுறதும், எல்லா றாசியங்களிலிருந்தும் எல்லா சௌங்களும் காவடி கொண்டுவந்து செலுத்துகுறது; அதுனுடைய பொறுள் யிவ்வகை என்று நினைக்குறதும் சொல்லுகுறத்துக்கும் அவளவாள் கினானத்துனாலே ஆறுவேதவிற் மனுஷனுக்கு தெரியவரும் காறியமல்லா.

17. கினானத்துனாலே-ஞானத்தினாலே;

18. தேவஸ்தானம் உண்டான காலம் முதல் யுகாந்திரங்களிலுள்ள காறணங்கள் னாலேயும் மத்தும் பல காறணங்களாயுள்ள விசேஷங்களுக்கு ஸ்தளபுராணம், தாம்புறப் பட்டயங்கள், ஸ்தளப்பண்டாறத்திலே யுள்ளதுகளெல்லாம் காலகலாபங்களில் கைதப்பி போச்சிது.

19 சேறறாசா என்றவாளில் கவுசிலா சேறன் ஆண்டு வருகுற னாளில் காறியங்கள் செவயாயி டைப்பிச்சி, ஆலயம் ஜீறனோத்தாறம பண்ணி, தேவதானமாக கிறாமங்கள், பூமிகள் உண்டுபண்ணினாரென்று சொல்லப்படுகுறது.

20. பாலறாசாக்களென்று க்ஷத்திறிய றாசாக்கள் ஆண்டு வரும் காலத்திலேயும் தேவாலய காறியங்கள் பிறபலமாயினடந்து வந்துதென்று சொல்லப்படுகுறது.

21. பாலறாசாக்கள் ஆண்டு வருகுற னாளையிலே அந்த பாலறாசா கூட்டத்தாருக்கு கொஞ்சம் ஈடுபாடு வந்த சமயத்தில் வடக்கேயிருந்து மூணுவேடற் மூணுவீட்டுக் காறறாக வந்து, வனமாக யிருந்த வறாககிறி மலைசறிவில் சேந்து குடியும் குடித்தனமுமாக யிருக்கும் னாளையில், னாளுக்கு னாள் வேடற் வற்திச்சி, றாசாக்கள் சம்மாறம் பண்ணிபோட்டு வேடற்றாசியம் ஆக்கிறமிச்சிக்கொண்டு, வைகாபுறி னாட்டுக்கு சின்னோப னாயக்கரென்று தொரைத்தனத்துக்கு அதிகாறியாய், காடுகள், வெட்டி ஊருகள், ஏறிகள், அணைகள் கட்டிவிச்சி, பழனியாண்டவருக்கு அனேகம் பணிவடை செயிது வந்தாற்களென்று கேழ்விப்பட்டுயிருக்குறதாக சொல்லப்படுகுறது.

22. யிறணூரு வருஷத்துக்கு அப்புறம், யிறணூத்தி அன்பது வருஷத்துக்கு யிப்பறம் யிதின் னடுவில் மதிரை சமஸ்தானத்து தளகற்தனாகிய றாமபய்யன் அவற்கள் னாளயில் சிவகிறி மலயின் பேறில் தெண்டாயுதபாணிக்கி கும்பாபிஷேகம் பண்ணுகுற சமயத்தில் ஸ்வாமி சொற்ப்பனம் சாதிச்ச குறிப்புனாலே ஸ்தவறாச

---

18. தாம்புற-தாமிர

22. இராமப்பையன் அம்மானை எனத் தமிழில் ஒரு நூல் அச்சிடப்பட்டு வழங்குகிறது. இராமப்ப+ஐயன் = இராமப்பையன்; குறுக்கமார்-குருக்கள்மார்;

பண்டிதற் என்குற வரை தறிவிச்சி, அவற் வச்ச மண்கலய கலசம் ஆனையிழுக்க கூடாதே யிருக்குற பறிகைஷ காட்டி, அந்த பறிகைஷக்கு றாமப்பய்யற் வெகு சந்தோஷப்பட்டு ஸ்தாபிக்க, பேதிக்க செக்தியுள்ளவற் யென்று ஸ்தவறாஜபண்டிதற் என்று பேற் குடுத்து, யிந்த பழனி ஸ்தளத்து ஸ்தவறாஜபண்டிதற் எண்ணுள்ள பேறப் பிறபலப்படித்தி பல்லாக்கு, தெண்டிகை, உபயசாமறம் முதலாகிய வெகுமானம் குடுத்து சற்வமானியங்கள், மகமை, றாசிகள் விடுவிச்சி குடுத்து ஸ்தளத்து முதமைக்காறறாகவும் பெந்து ஜனங்களில் னாலுகுறுக்கமாரையும் பூசைக்கும் நேமித்து சகல விபங்களும் நடத்தினாற்கள்.

பூற்வத்தில் பிறம்மநம்பி, வாலநம்பி என்று ரெண்டுபேற் பிறபலஸ்தாளாக கிறாமங்கள், பூமிகள் ஆண்டு, சுவாமி பூசை பண்ணி கொண்டு வரும் னாளையில், வாலசமுத்திரத்து வால றாசாக்களானவற் கம்பத்தடியில் பிறம்மநம்பியை கொண்ணு போட்டு, வாலனம்பி யிருக்குமளவில் அடக்கமாக பூசை பண்ணி கொண்டு யிருந்தாற்கள்,

23. **சோழியகுல** வெள்ளாழற், செயிவாளாக யிருக்குற **பண்டாறங்கள்** என்குறவாள், முன் பூற்வா பூற்வமாக ஸ்தளத்தில் காத்துக்கொண்டிருந்து தீற்தவாசிகளாக 64 பேற் என்குற சம்க்கினையில் முன் பாளைகாறன் னாளைலே இறுவத்தி மூணு பேற் பண்டாறமும் தான் ஒருவனென்றும் ஆகுக. இறுவத்தினாலு பேர் பண்டாறங்கள் தீற்தம் கொண்டுவந்து மலையில் குடுக்குற தென்றும், பாளைகாற னாளையில் பண்ணியிருக்குற திட்டங்க ளென்றும், அந்த மறியாதைபடிக்கி உள்ள பண்டாறங்கள் ஆறுலேயிருந்து அபிஷேக ஜலம் கொண்டுபோயி மலையில் தண்டாயுதபாணி சன்னதியில் வச்சால் பூசை பண்ணப்பட்ட குறுக்கமாற் எடுத்து அபிஷேகம் பண்ணுகுற தென்றும், அந்த பண்டாறங்கள் ஸ்தளத்தில் காத்துகொண்டு யிருந்து, தேச சஞ்சாறம் பண்ணி, அவளவாள் ஆசிறயம் சம்பாதிச்சி கட்டளைகள் உண்டுபண்ணி, கட்டளை படிக்கி சுவாமி அபிஷேகம் நடப்பிக்

23. வெள்ளாழர் செயிவாளாக - வெள்ளாளர் சைவாளாக; சம்க்கினையில் – எண்ணிக்கையில்;

குறதும், மாலை, செந்தனம், பில்லுவம் எடுத்து பணிவடை செயுகுறது யிப்படிக்கி சுவாமி காறியம் னடத்திக் கொண்டு, அவாள் காலக்ஷேபம் பண்ணிகொண்டு யிருக்குறது.

யிப்படியுள்ள பண்டாறம் 24 கொத்து, 64 பேற் திருமஞ்சன பண்டாற மென்று யிருக்குறாற்கள்.

24. புலிபாணி பாணி பாத்திர ரெண்று பேருள்ள முண்னொறு றிஷி தபசியாக யிருந்தவற் பாணியெ தெறட்டி கொண்டு, புலிமேலேறி கொண்டு மலையில் சுவாமிக்கி அபிஷேகம் பனிவடை செயிதுகொண்டு யிறுந்து, அந்த தபசியிடத்தில் ஏறு கன்னிடியன் சேந்து அப்பேறபெத்து யிருந்து, அந்த கன்னிடியனிடத்தில் ஒரு வெள்ளாளன் சேந்து, அந்த கன்னிடியனுக்கு பனிவடை செயிதுகொண்டு, ஒரு தொண்ட மண்டலத்து வெள்ளாளன் சேந்து, அப்படி குறுபறம் பரையாயி பாணி பாத்திரரென்று பேற்வரைப்பட்டு சிவகிறியின் பேறில் துறகி என்றுள்ள கொகையில் லிங்கங்கள், யந்திரங்கள் பூசை செயிது கொண்டு வருகுறதும், னவறாத்திரியில் னவசெத்திகளையும் விட்டுல் கொண்டு வந்து ஒன்பது னாளும் பூசித்து, விசைதெசிமினாள் சுவாமி பாறவாடையின் போது வே லு எழுந்திறளப் பண்ணு கொண்டு வருகுறபோது, ஆனையில் பேறில் பாணி பாத்திரரும் ஏறி, அம்பும் வில்லும் கையில் பிடித்திகொண்டு கூட வந்து, அம்பு தொடுத்து பாணிபாத்திரம் ஸ்தவறாச பண்டிதற் கையில் குடுத்து; அவற் மந்திறம் செபிச்சி, அம்புபோட்டு பாற் வாட்டை வுல்சவம் நடக்குறது.

---

கொத்து - குடும்பம் என்பது போன்ற ஒரு பிரிவு;

24. புலிப்பாணி பாத்திர உடையார் - இராமப்பையனின் தாமிர சாசனத்தில் இவர் பெயர் குறிப்பிடப்பட்டுளது. "பூர்வா பூர்வமாய் இந்த ஸ்தலம் புலிப்பாணி பாத்திர உடையாரைச் சார்ந்தது" என்று சாசனத்தில் உளது.
கன்னிடியன் – கன்னடக்காரர்;
கொகை - குகை; பாறவாடை – பாரிவேட்டை;
வேலு – வேல்; எழுந்திறள - எழுந்தருள;
உல்சவம் – உற்சவம்; கோட்டை - கோட்டான்;
பாறியன் – பாறை போன்றவன்; பாறல் – பாறை;

25. பூர்வமுதல் வையாசி மாசம் விசாக உல்சவம் நடந்து வறப்பட்டது. தைபூசமும் பங்குனி உத்திரமும் ரெண்டு உல்சவமும் பாளையகாறற் னாளையில் உண்டு பண்ணி, ஆக மூன்று உற்சவமும் நெடுகல் நடந்து வருகுறது.

26. வீரப் பழனிமலை வேலாயுத சுவாமியாற் திருமுகம்

வைய நீடுக மாமழை மண்டுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்கிய
சைவ நன்னெறி தான்தழைத் தோங்கிய
தெய்வ நந்திரு நீடுசி றக்கவே!

களைபெற வழிதிரு முகங்களாலும் வழிகாக்க
மழவணி இரண்டுகையும் வேலும் வாழி
இருசரண மெனத்தலைமேல் நாளு மோங்க
இந்திரவிற் கப்பாலும் யினிதும் வாழி!

அருள்பரவி யமரர்சிறை மீட்டே யாண்ட
ஆறிரண்டு திருநயனத் தழகும் வாழி!
மறுவணியும் பைங்கடப்பந் தார்மார்பும் வாழி
மயில்பரி சேவல் கொடியும் வாழி!

அடைந்தவர் துணை வாழி
அடையலர்க் கரியா வாழி
மடந்தை தமயன் தாவாழி
மாதவன் மருகா வாழி
திடம்புனை வேலா வாழி
தேவரா ருயிரே வாழி
படைந்தயோ தசுரர் கூற்றாம்
பரமனே வாழி வாழி!

---

26. இத்திருமுகப் பாடல்கள் சுவடியில் பிழை மலிந்து காணப் படுகின்றன; திருந்தியவடிவில் இங்கு பதிப்பிக்கப் பெற்றுள. தாவாழி - தாள்வாழி;

ஸ்ரீதிரிபுர தகனன் பரமேஸ்வரன் குமாரன் அமரர்
சிறைமீட்ட
தேவர்கள் தேவன் தேவலோக நாயகன்
அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகன் கோகந்தகனைச்
சரசமாடி
குட்டி குடுமியை நெட்டிப் போக்கி
கொன்றிடும் மதம்கொருத்த குமாரகெம்பீரவன்!

கொக்கறா வரையாழி கோட்ட ராவுத்தன்
வெத்திரமிடும் சுரேசர் வட்ட நீரோய்
உத்திருமயி லேறிவரும் உத்தண்ட தீரன்
பக்கரைப் பகட்டரக்கர் பட்டிப் படைகழித்தே

கொக்கரித் துடல்கிழித்து குக்குடக் கொடிக்குமரன்
கோட்டை கூகை பசாசுகள்
தொக்கரி நிற்கத் தூளமோதச் சூரன்மாள்வதற்கு
பாறிபனிபக் கச்சைகட்டி பாறல்லெடுத்த சேவுகதீரன்!

27. அசுர கொலைகாரன் அமரர்விதி காவலன்
தோடுசெறி காதினன் தோகைமயில் வாகனன்
சீதரர் திருமருகன் சிவசுப்பிர மணியன்
சண்டப் பிரசண்டன் அண்டர்க்கொரு மிண்டன்!

ஆறாறு நூறூறு அஷ்ட மங்கலம்
ஆவி னன்குடி பழனிமலை காவலன்
இடும்பன்மலை என்மலை குராவெனும் பள்ளி
இலங்கும் வைகாவூர் நாட்டுக் கிறைவன்!

---

27. அண்டர் - தேவர்; மிண்டன் - வலிமையானவன்; குரா- குராமரம்; இடும்பன் கொண்டுவந்த சிவகிரியின் மீது முருகன் இந்த மரத்தடியில் நின்றான் என்ப.

பக்திப் பிரியன் பக்த வச்சலன்
பார்வதி புத்திரன் சிவசூத கணபதி
விக்கின விநாயகன் தெய்வ சகோதரன்
எல்லா தேவர்க்கும் வல்லவன்!

ஸ்ரீவீரப்பழனிமலை வேலாயுத சுவாமியார் சன்னதியில் ஸ்ரீவீரபாகுதேவர் அருளிப்பாடல்.

**28.** சிவகிறியின் பேறில் தெண்டாயுதபாணி மேற்கு முகமாக நிக்குறதுபோலே யிருக்குறாற். நித்தியம் னாள் தப்பாமல் வெள்ளிக் கிழமையும் திங்கள் கிழமையும் அபிஷேகம் ஆயிக் கொண்டு யிருக்குறது. பிறாற்தனை காவடிகளும் திருவிழாவுக்கு வந்துகொண்டு யிருக்கும்.

**28.** ஸ்ரீகள் தன் புறுஷனுடனே கூட பழனிக்கி வந்த உடனே தன் குஞ்சு குழந்தையையும் புறுஷனையும் விட்டு, மலையில் யிருக்குறது; பெண்டாட்டியெ விட்டுவிட்டு, கல்லியாணம் பண்ணின ஆமிடியான் தன் வீட்டுக்கு போறது. யிப்படி முப்பது னாற்பது செறை பெண்டுகள் பழனியெ சுத்திகொண்டு யாசகம் பண்ணி கொண்டு, கழுத்திலே தாம்பற கண்டியும் பொட்டும் கையில் வேலுமாக யிருக்குறது. அப்படியுள்ள 'ஸ்ரீகளுக்கு றாத்திரிகாலம் புறுஷ ஷந்சாரம் பண்ணிக்கொண்டு யிருக்குறாப்போலே யிருக் குறதும் உண்டாகுமாம். மாசம்தோரும் ஸ்ரீகளுக்கு உள்ள றஜ சுலையும் யில்லியாம் யிப்படிக்கி செறகளில் யிப்போ . . . . . . . ஒரு ஸ்ரீ மலை விட்டு கீழே யிறங்காமல் னாற்பது அன்பது வருஷ மாக மலை மேலேயே யிறிக்குறாள். அந்த . . . க்கு யிப்போ அறவது வயசுயிருக்கும்; ஜடையும் வளத்திக்கொண்டு கைக்கும் காதுக்கும் ஒடைமை போட்டுகொண்டு மலையில்தானே வாசமாக பாலும் பழமும் அபிஷேக பஞ்சாமுறுதமும் பக்ஷிச்சிக் கொண்டு யிருக்குறாள். ஆனால் அந்த பொம்மிண்டாட்டிக்கி பெண் களுக்குள்ள மாசமாசம் ரஜசுலை மாற்கம் யில்லையென்றும்,

---

28. ஆமிடியான் – அகமுடையான்; செறை – சிறை-தேவரடி யார்கள்; தாம்பற-தாமிர; செறகள் – சிறைகள்–தேவரடியார்கள்; றஜசுலை–மாதசூதகம்;

அம்மாற்கம் காணப்படவில்லை யென்று சொல்லுகுறாற்கள்; பின்னும் உள்ள செரை ஸ்ரீகள் மலைமேல் யிருக்குறது யில்லை. தேற் திருவிளாவின்போது வந்துயிருக்குறதும் மத்தனாள் கிறாமாந்திரத்தில் திரிஞ்சிகொண்டு யிருக்கிறதும் யென்று சொல்லுகுறாற்கள்.

29. தேவஸ்தானத்தில் தெண்டாயுதபாணி ஸ்வாமியானுக்கு வெள்ளிக்கிழமை, திங்கட்கிழமை ரெண்டுனாள் விசேஷமாயி, காலமே முதல் சாயந்திரம் வரைக்கும் அபிஷேகம் அவாளவாள் பிறாற்தனக்காறற் பண்ணிவைக்குறது. அபிஷேகம் பஞ்சாமுறுதம் விசேஷமாக அவாளவாள் பிறசாதம் வாங்கிக் கொள்ளுகுறது.

30. விபூதி அபிஷேகம் மகாவிசேஷமாயி னடப்பிக்குறது. சிமாமூலத்தில் யிருநூறு பிறாமணாள் மூணு மதஸ்தாளும் பலவகை செனங்களும் பிறாத்தனை செலுத்துகுறது பிறபலமாயிருக்குறதும், தீற்தபிறசாதம் அல்லாவரும் வாங்கிக் கொள்ளுகிறது; பிறாம்மணாள் பால்தீற்தம் வாங்குறதே யல்லாமல், மத்த தீற்த பிறசாதம் வாங்குறது யில்லை,

31. ஸ்வாமிக்கி பொஙகைசுத்து, கனை யிதுகூடி நைவேதியம் நடக்குறது; வினியோகமாறது. வலைகள், குதிரை முனைகள் செறுப்பு கோடுகள், யீட்டி, வேலு, யிதுகளை யெல்லாம் பிறாத்தனை காறற் கொண்டு வந்து செலுத்தினதுகளையெல்லாம் கோவில் முன்னாலே கட்டி தூக்கி வைச்சிறுக்குறது. அதுகள் யெல்லாம் தினபிறதி கையாண்டது போலே செறுப்பு கோடுகள் சின்னதாக யிருக்குறதும், பெரிசாக யிருக்குறதும், தேஞ்சி யிருக்கப் படுகுறது!

32. திருமஞ்சன பண்டாறங்கள் சீமைசீமையிலு திரிஞ்சி, யாசகம் பண்ணி, தெண்டாயுதக் கடவிளாறுக்கு தங்கவிலுவ ஹாரம், வெள்ளித் தாம்பாளம், கிண்ணங்கள் பண்ணிவைச்சி,

---

30. சிமாமூலத்-சீமா மூலத்-நாட்டு ஆட்சி

31. தினபிறதி-தினபிரதி-பிரதி தினம்-ஒவ்வொரு நாளும்; இலக்கணப்போலி; கடவிளாறுக்கு-கடவுளாருக்கு; ஹாரம்-மாலை;

அந்த உடைமைகள் கட்டளை பண்டாறங்களிடத்தில் தற்மம் பண்ணவன் மேற் போட்டு, செப்பு திருமஞ்செனக் குடம் தாம் பாளங்கள் கட்டளை பண்டாறங்கள் வசத்திலிருக்குறது.

யிப்படிக்கி கட்டளை பண்டாறமென்றும், திருமஞ்சன பண்டாறங்க ளென்று 64 பேற் சங்கத்தாற் ஆகாச வந்தகமாக ஜீவனம் பண்ணிக் கொண்டு யிருக்குறற்கள்.

*33.* தெண்டாயுதபாணி ஸ்வாமியாறுக்கு அலங்கார பண்ணு மளவில் வேலும் கத்தியும் கூடி ஆயுதபாணியாக அலங்காறம் பண்ணுகுற அலங்காற தீபாறாதனையும் போது பாளைகாறனெ போலேயிருக்கும் சாலிக்கிறாம சிலை யென்றும் ஏழு வயசு புள்ளை போலே யிருக்குமென்று சொல்லப்படுகுறது.

*34.* ரெண்டு ஆயுதம் தங்கமொலாம் செயித ஒரை போட்ட கத்திகள் யிருக்குறது. அந்த ஆயுதம் மலையாளம் றாசா குடுத்தது-1; பாளைகாறன் குடுத்த ஸ்வாமி கோவிலுது 1; ஆக ரெண்டும் யிப்போயிருக்குறது.

*35.* உத்சவத்தில் உண்டி வைச்சி காணிக்கைகள் விழுகுறது சற்க்காறுக்கு தாகலாகிறது.

வெள்ளிகிழமை திங்ககிழமையும் உண்டி வைத்து, சிலுவான காணிக்கை சற்க்காறுக்கு தாகல்.

---

34. மொலாம்-முலாம்; ஒரை-உறை

35. தாகல்-தாக்கல்–சமர்ப்பித்தல்; சிலுவான-சேர்ந்த



# 37. கோயமுத்தூரு சில்லா யிறோடு தாலூக்கா கொடிமுடி தேவஸ்தானம் கைபியத்து ஷெ தளத்தாற் எழிதிவிச்சு குடுத்தது

(டி. 3090)

*1.* பூற்வத்தில், மகமேறு பறுவதத்திலே தேவசபயிலே, ஆதி சேஷனுக்கும் வாயுவு பகவானுக்கும் வாதம் வந்து, நீ பெறியவன் நான் பெறியவன் யென்று சம்வாதம் வந்து சேஷபகவான் தன்னுடைய பலயிறாக் கிறமத்தினாலே மகமேறுக்கு பறுவதத்தில் யிருக்கப்பட்ட ஸ்ரீங்கங்களை அடைக்கிப் புடிச்சாற். வாயுபகவான் தன்னுடைய பலபிறக்கிறமத்தினாலே ஸ்ரீங்கங்களை பேதிச்சுக்கொண்டு வறும்படியாயி தம்முடய சுறுப்பத்தெ யெடுத்தாற். அந்த சயத்திலே வாயுவு பகவானுடைய பல பலாகிறமத்தினாலே, மகாமேறுக்கு தெட்சிண பாகத்திலே, பறத்த கண்டத்திலே, அஞ்சு ஸ்ரீங்கம் பேதிச்சுக் கொண்டு வந்து விளிந்தது. நீலகிறி, மறகதகிறி, றெசிதகிறி, றெகுத்தின கிறி, அறுணகிறி இப்படிக்கி அஞ்சு சுறங்கங்கள். விளுந்தவிடத்தில் மேல் எழுதப்பட்ட பேறகள் உண்டாச்சது.

*2.* மேலே யெளுதப்பட்ட அஞ்சு சுறங்கங்களும் பிறப்பட்டு வறுகுறபோது ஒரு அமுச மாத்திரத்தில்... அந்த சுறங்கங்களிலே ஆவற்பவிச்சு இருந்தபடியினாலே அஞ்சு சிறங்சமும் அஞ்சு ஸ்தளமாச்சுது.

அப்படிப்பட்ட கொடிமுடி எண்ணப்பட்ட சுறங்கத்தில் மகுடேசுவர் என்று னாமதேயம் வரப்பட்டுது.

---

1. கொடுமுடி—மாவட்டத்தில் உள்ள ஒரு பஞ்சாயத்து ஒன்றியம்; சபயிலே-சபையிலே; ஸ்ரீங்கம்-மலை; சுரங்கங்கள் - மலைகள்; பறத்த-பரத; பேரிச்சு-பிரிந்து; றெசித-இரசத-வெள்ளி;

அப்படிப்பட்ட கொடிமுடி யென்னப்பட்ட சுறங்கமும் வறும் காலத்தில் பாஷ்கறம் சேத்திறமான படியினாலே பாறத்துவாஜா சறம மானபடியினாலேயும் அந்த சுறங்கத்துடனே கூடா யிசுவைற் ஒரு கொழுந்து ரூபமாயி பிறம்மா வண்ணி விறட்சமாயும், விஷ்ட் டுணு செயினாதி வாசறாயும் ஆகபிவிச்ச படியினாலே கொடிமுடி யென்றும்; திரிமூற்த்திகள் வாசம் பண்ணப்பட்ட ஷ்தளமென்றும் யிவாள் வறுகுறது ஒருவற்க்கு ஒருவைற் தெறியாமலிறுந்து, அந்த பாறத்துவாஜ தீற்த்தமும் பாறத்துவாஜ ஆசிறமத்தையும் பாத்து, இவாளுக்கு இவட.த்தியே யிறுக்கவேணும் யென்று தோணப்பட்டது

3. யிப்படி யிருக்கும் காலத்தில் திரிமூற்த்தியன் பறப்பட்டு வந்தபடியினாலே சகலமான தேவாதிகளும் வந்து சேந்தாற்கள்

கிறந்த யுகத்திலே பிறம்மதேவற் பூசைப்பண்ணுகயால் பிறம்மபுறியும், பிறம்மா . . . . நாறாயண பெறுமானானவற்

திறேதாயுகத்திலே கெறுடபகுவான் அமற்தம் கொண்டுவந்து அற்ச்சனை பண்ணுகையால் அமுற்தபுறியும், அமுற்தபுறி னாதனும் அனந்தநாராயண பெறுமானானவற்-

துறாபவ யுகத்திலே கலமாழறிஷி அற்ச்சனெ பண்ணுகையால் காரையூறும், கரைகண்டனாதரும் வேதனாறாயண பெறுமானா னவற் கலியுகத்தில் குலசேகற பாண்டியறாஜா செபம் பண்ணு கையால் குலவற்த்தினிபுறமும், திற்ப்பாண்டிக்கொடிமுடி னாதறும், வீறனாறாயண பெறுமானானவற்-

4. கீற்தயுகத்தில் பிறம்மப்பட்டத்திலே மகாவிஷ்ணுங் களுடைய இந்திக மலத்தில் வுன்ப்பத்தியாகிய ஆதினானீதன் தோனி திஷ்டியு அறியாதபடியனான் இந்த மகுட்டசேத்திறத்தில் அற்ச்சினைப் பண்ணுகையால் தன்தோனி தனக்கு சித்தியாச்சுது.

---

2. பாறத்துவாறாசறம-பரத்துவாசாசிரம=பரத்துவாச+ ஆசிரம

4. உன்பத்தி-உற்பத்தி; கீற்தயுகம்-கிருதயுகம்; நறம்-நிறம்

. . யுகத்தில் காசிப றிஷியினுடைய . . கத்தூரி யிறுவறும் . . . நாள் வேளையில் யிந்த மகத்துவத்தைப் பாத்து திரினந்த வாணத்தில் புஷ்ப்பம் யெடுத்தபோது ஒருவற்கு ஒறுவற் சவுதம் கூடினது தேவேந்திரன் யானை நெறம் யென்னவென்று கேட்டாற் . . . . "அது வெள்ளை நறம்" யென்று சொன்னாற் . . . . விணதையே பாத்து கத்தோறு கரிப்பண்டு சொல்ல, இப்படி யிறுந்தாற் நாம் யிறண்டுபேறும் ஒருவனுக்கு ஒருவற் யெல்ல செயிவது யென்று சவுதம் கூறின பின்பு கத்துரியானவள் தன்பிள்ளை காற்கோடகநெ அளச்சு, "யிப்படி சவுதம் கூறினே, நீ போயி தேவேந்திறன் யானையை வெள்ளையை மரித்து. கரிப்பு செயிது வா" யென்று சொன்னாள்.

5. "நல்லது" யென்று காற்க்கோடகன் தன்னுடய விழத்தெ அதின்பேறில் தடைவி, தேவேந்திறன் யானையை கரிப்பு நெறம் பண்ணி, தன் தாயான கத்துரிவிநிடத்திற்குச் சொல்ல கத்தூரி சந்தோஷமாயி, விணதையை பாத்து, "அந்த தேவேந்திறன் யானையை பாற்ப்பம்" யென்று கூட்டிக்கொண்டு போயி, பார்க்க, கரிப்பா யிறுக்கும் யெளவில் விணதை . . . . மகா துயறத் தோடு சொன்ன சவுத மேறுக்கி, கத்திரிவின் பணிவடெ பண்ணிக்கொண்டு பொகு காலம் யிப்படி யிறுக்கயில், கெறுட பகவான் தன் தாயண்டைக்கி வெந்து பாத்து, மகா விதநெப்பட்டு, "இப்படியென்ன?" யென்று கேள்க்க, "இப்படி யெங்கள் சவுதம்" யென்று கெறுடனை பாத்து சொன்னாள்.

6. அப்படி யிறுக்கையில் மகாமுணியாற் வந்தாற். அவரைக் கண்டு நமஷ்காரம் பண்ணி, இந்த வயணமும் சொன்னாற். கெறுடபகவானுக்கு நாறதற் சொல்லுவாற். "இப்படி பூலோகத்தில் தெட்சிண கைலாசமாகிய திரிப்பாண்டிக் கொடிமுடியில் அமுற்த கலசம் கொண்டுவந்து சுவாமியை பூசெ பண்ணினாற்; அமுற்தம்

---

4. கத்தோறு-கத்தூரி; கரிப்பண்டு-கறுப்பென்று; சவுதம்-சபதம்;
5. விழத்தெ-கொழுப்பை; பாற்ப்பம்-பார்ப்போம்; யெளவில்-அளவில்; கத்திரிவின்-கத்தூரிக்கு; உருபுமயக்கம்

கொண்டு வந்து பூசை பண்ணினால் 'சகல பாப்ப நிவற்த்தி யாகும்'' யென்று சொல்ல, அப்படியே மகாவினுடைய கிற்பையால் மகாமேறுவில் றாட்சசால் காவலா யிறுக்குறபோது, அவாளோடே யுத்தம் பண்ணி, அமற்த்த கலசம் கொண்டு வந்து, தாயாகிய விணதையினுடய பாவ நிவற்த்தி யாச்சுது. ஆனபடியினாலே அமுற்த்தபுறி யென்றும், அமுற்த்தபுறீசுவற் யென்றும் பேற்வறப் பட்டது.

7. துவாபற யுகத்தில் லாஷ்த்தபுறி அக்கிறா . . . . த்தக றிஷிசுவற் பாறி யெக்கிய செ . . . . . குடியிறுக்கையில், அந்த யெக்கி . . . . யானவன் முன் யேளு சென்மமத்துக்கு முன்னே தனக்கு சபத்தினி யானவளுக்கு கெற்ப்ப உன்ப்பத்தியெ வெழத்தை குடுத்து அது அளிக்க அவன் யிவளுக்கு சபித்தான், அந்த பாபத்தினாள் புள்ளை யில்லாமல் யிறுக்கையில், சத்தியதற்ம்மா யென்குர றிஷி பிட்செக்கி வந்தார். அவறைக் கண்டு ஷேத்திரத் தீறம் பண்ணினாற். அவற் சொல்லுவாற் ''இப்படி திரிப்பாண்டி கொடிமுடி ஷ்தளத்தில் சிவாற்ச்சனை பண்ணினாற் சந்தானமும் வுண்டு'' யென்று சொல்ல, அப்படியே வந்து சிவாற்ச்சனை பண்ணினாற். அதின்பிறகு கன்மாஷறிஷி யென்று புள்ளை பொறந்தாற். அவறும் சிவாற்ச்சனை பண்ணி கல்மாஷக நிவற்த்தி யாயி காலகண்ட மான் மளு சதுப்புயத்தோடு விறஷபாறூடறாயி, காட்சி குடுத்தாற்; ஆனபடியினாலே இப்படிப்பட்ட பேர் வறப பட்டது.

8. கலியுகத்தில் பாண்டிய மகாறாசன் யாகம் செயிது, தேவாதிகள் சமஸ்தமான றிஷிகளோடே கூடி யாகம் செய்குற போது, அமுற்த கலசம் . . . . யில் குலசேகற பாண்டியன் விதணம்ப்பட்டு யிறுக்கயில் ஆகாசவாணியானவள், ''ஒனக்கு ஒரு

---

6. பாப்ப-பாவ; அமற்த்த-அமிர்த;

7. மளு-மழுவாயுதம்; சதுப்புயம் சதுர்ப்புயம்; விதணப்பட்டு-விசனப்பட்டு-வருத்தப்பட்டு; மறந்தாள்-மறைந்தாள்; கிற்ப மாயி-கர்ப்பமாகி;

புத்திரன் பிறந்தால் அங்குஷ்டயினமாயி பொறக்கும்'' யென்று சொல்லி மறந்தாள். அதின்பிறகு, ஆதெகிற்ப்பமாயி அவன் பாறியானவளுக்கு வெங்குஷ்டம்தோடே றாஜ யோக்கியமில்லாமல் இருக்கையில், னாறத மகாமுனி வந்தாற். அவறோடே குலசேகர பாண்டிய றாசா சொல்ல, நாரதற் சொல்லுவாற், ''இப்படி பூலோகத்தில் ஒருஷ்தளம் யிறுக்குது; அதில் பாறத்துவாசன் ஆசிறமும் பாறத்துவாஜ தீற்த்தம், தேவதீற்த்தம், விற்ம்ம தீற்த்தம், வண்ணி தீற்த்தம், திரிமூற்த்தி விசேஷமான அறியற் புறத்தில் சிவாற்ச்சனை பண்ணினால், யிதி நிவற்த்தியாகும்'' யென்று சொல்ல, அப்படியே **குலசேகறபாண்டியன்** வந்து பகுத்தியோடே கூடி பணிறெண்டு திங்கள் அற்ச்சனை பண்ணு கையில், காலகண்ட மான் வளு சனப்புயத் புயத்தோடே றெஷ பாறூடறாயி காட்சி குடுத்து அவன் புள்ளைக்கி தேகத்திலே லகீஷ்ட்டம் இந்த றோகத்தை நிவற்த்தியாக, குலசேகறபாண்டியன் சந்தோஷத்தோடே கூடி, அநேகம் திரிப்பணிகள் முதலாகிய சமஸ்தமும் உண்டுபண்ணிப் பத்து கிறாமம் . . . . வுதகம் பண்ணி குடுத்தார் . . . . றாசீயம்பறிபாலனம் . . . . . யென்று பேற் வறப்பட்டது.

9. இதற்கு பிறகாலும், கிறதயுகத்திலே பாறத்துவாஜ தீற்த்தம் வுண்டாயிறுந்தது.

திறதா யுகத்திலே கெறுட பகவானிடத்தில் தயவு செயிது பிறம்ம தீற்த்தம் சுவாமி வுண்டாக்கினாற்

துவாபற யுகத்திலே கல்மாஷறாஜாவில் மேலே தயவு செயிது தேவதீற்த்தம் வுண்டாக்கினாற்.

கலியுகத்திலே, **குலசேகற பாண்டியன்** மேலே யீசுவற் தயவு செயிது வண்ணி தீற்த்தம் வுண்டாச்சுது.

---

8. பகுத்தி-பக்தி; வளு-மழு; சனப்புயம்-சதுர்ப்புயம்; றெஷபாறூடறாயி – ரிஷபாரூடராகி; திரிப்பணிகள் - திருப்பணிகள்; உதகம்பண்ணுதல்-நீர்வார்த்துத் தருதல்;

9. வடபாற்சித்தில் – வடபாரிசத்தில் – வடபக்கத்தில்; கயிலம் – பாறை; கெடத்தை - கமண்டலத்தை; லெகுசங்கக்கி - மலசலம் கழிக்க; சோலி - துன்பம்;

அதற்க்கு பிற்க்காலம் அகஷ்த்திய மகாமுனி சத்துற்முக மகாபறுவதத்துக் காவேறியை அளச்சுக்கொண்டுப் போகவேணும் யென்றும் திரிப்பாண்டிக் கொடிமுடிக்கி வந்தாற். அம்மனும் காவேறி தெட்சிணவாகினியாயி வந்தாள். இந்த ஸ்தளத்துக்கு வடபாற்சித்தில் ஒரு கயிலம் யிறுக்குது; அதில் அகத்தியர் இந்த கெடத்தை அதின் பேறில் அப்போ லெகுசங்கக்கி போறாறுமென்று போனாற். அந்த சமயத்திலே சுவாமி சமாசாறம் அறிந்து, விக்கினேசுவறான பிறம்மசாறியாயி றூபம் யெடுத்து அவடத்துக்குப் போகச் சொல்லி சொன்னாற். அப்படியே விக்கினேசுவற் ஒரு பிறம்மசாறியாயி புறப்பட்டு வந்தார். அவரைகண்டு, 'இந்த கெடத்தெ பாத்துக்கோ' யென்று சொன்னாற். அவர் அதற்கு, "மூணு சத்தம் கூப்புடுவேன்; அதுக்குள்ளே வந்தால் சறி! அல்ல வென்றால், சோலி" யென்று சுவாமி யெடத்தில் வந்து வசனம் சொன்னாற்.

*10.* சுவாமி வெண்ங்காகம் ரூபமாய்ப் பறப்பட்டு, அந்த கெடத்தின் பேறில் வந்து யிறுந்தாற். அத்தெ அகஷ்தியற் கண்டு மவுனமாயி கையை தட்டி "போ"வென்று வெளக்க, காகமானது அவிக்கீ கவுள்க்க, அப்போ பூர்வாகிணியானால் காவேறி! அப்போ அகஷ்தியற் இந்த ஆச்சிறியமுடையதென்று மனோக்கியானத் தினாலே, கொடிமுடிஷ்தளத்தினுடைய மயிகமெ யென்று கண்டு மகா கோபாக்கிய அந்த வினாயகற் தேகங்கள் யெல்லாம் கையினாலே அளுந்தப்பண்ண, அத்தை கண்டு பறுவத்தாகாறமா யிறுக்கப்பட்ட மகுடேசுவற சுவகமியாற் பூமியில் மறைய, அதை அகஷ்தியர் கேட்டு வந்து, தன் கயினாலே தன் சுவாமி பாத்தாள வாகணியாகுறாற் யென்று கயினாலேப் புடித்துக்கொண்டு ஷ்தோத்திறம் பண்ணினாற்.

*11.* அப்போ, அகஷ்தியற் சுவாமியைப் பாத்து அகண்டா காறமா யிறுக்கப்பட்டவற் இப்படி யானதுக்கு இதுக்கு நிலற்தி யென்னமென்று . . . . அதற்கு காவேறியா யிறுக்கப்பட்ட மூற்த்தி . . . . வண்ணிவிருட்சத்தின்கீளே பூசெய்தீறானால், இது நிவற்த்தி யென்று சொல்ல, அப்படியே பண்ணினாற். ஆனபடியினாலே

---

10. பறப்பட்டு – புறப்பட்டு; வெளக்க - விலக்க; அவிக்கீ - அமுக்கி; மயிகமெ - மகிமை;

"இந்த காவேறியில் ஷ்நானப்பானம் பண்ணினால் சகல பாப்பம் நிவற்த்தி"யென்று அகஷ்த்தியற் காவேறியம்மனுக்கு வறம் குடுத்து, தன்னுடய பொறியாசனம் போயிச் சேந்தாற். இந்தப்படி அந்தந்த யுகங்கள் தோறும் தேவாதியள் முதலானபேறும், அஷ்டதிக் பாலகாளும், சனியீசுவற் பகவான், சந்திற சூறியற் சகல பிறம்ம செனங்களும் சிவாற்ச்சனையாகிய் திரிப்பாண்டி கொடிமுடி மகாஷ்தளம் யென்று பேற் வறப்பட்டது.

*12.* அதற்குப் பிற்க்காலம், பாண்டியன் முதலான பிறபுகள் பூசை பண்ணி சறுவாயிஷ்டமும் அடெஞ்சாற்கள்.

கொடிமுடி யென்னப்பட்ட மலெ பூமியிலை யிறுக்குரது. அந்த மலையின் பேரில் --

நடுமலையில் வுச்சியிலை யிறுக்குற பாரமாயி மொகுடேசுவற் கோவில்; அதற்க்கு தெற்கு சவுந்திறனாயக்கி யம்மன்க் கோவிலுக்கு வடக்கு காசி விசுவனாந்த சுவாமி விசாலாட்சி; அதற்கு மேர்பறம் காவேறி கண்ட வினாயகற்; அதற்கு மேல்பறம் –

வண்ணிரிட்சம்; அது தேவதாமுசமானபடியினாலே, அதில் காயி, பூவு ஒண்ணும் ஆகுரது யில்லை--

காலோவிபறீதாற்த்தமானால், முள்ளுக் காணும்; சாலிவாகன செகாபுத்தம் 1704க்கு சோபகிறத்து வறுஷம் யிந்த வண்ணி விறட்சத்தில் முள்ளு கண்டுது; அந்த சமயத்திலே பிறபுத்துவம் பண்ணப்பட்ட ஆயிதறல்லிக்கான் யென்னப்பட்டவற் விளுந்து போனாற்.

*13.* அதற்குப் பிற்க்காலம், சாலிவாகன செகாபுத்தம் 1719க்கு பிங்கள வறுஷம் யிற்த விரிட்சத்தில் முள்ளு கண்டு டிப்பு சுல்த்தான் விளுந்து போயிவிட்டார். அப்படிக்கி முல்லு விளுந்தால் . . . . . . . . இதின் கீளே பாறத்துவாஜ . . . தேவதீற்த்தம், வண்ணி தீற்த்தம் இந்த நாலு தீற்த்தம்; யித்த விரிட்சத்தின் கீளேயிறுந்து உன்பங்த்தியாயி பிறப்பட்டு காவேறிக்கி சங்கமமாயி போகுறது.

---

12. சாலிவாகன ஆண்டு 1704 - கி.பி. 1782;
13. சாலிவாகன ஆண்டு 1719 - கி,த. 1797;

பெருமாள் வீரநாராயன பெருமாள் கோவிலுக்கு தெற்க்கு லெட்சுமி கோவில்; அதற்கு தெற்க்கு ஆஞ்சநேயற் கோவிலுக்கு வடக்கு சுப்பிறமணி சுவாமி கோவிலுக்கு கௌக்கு சணக்கசபெ; இப்படி சமஷ்தமான தேவத்தியளும் ஒரு பிறகாரத்திலே வாசம் பண்ணிக்கொண்டு யிறுக்குறாற்கள்.

*1807 ஆம் வருஷம் மே மாதம் 19.*

கணக்கு சாமயன் றுசு

ஸ்தலபுராணம்

வீராகவ சாஸ்திரி றுஜு.

சங்கர சேகர குருக்கள் ஸ்ரீநாரணசாஸ்திரியார்.

குருக்கள் ஓதுவார் தத்துவறாயன்.



# 38. தாறாபுரம் துக்குடி காங்கயம் தாலுகாவுக்கு சேந்தகாசுபா காங்கயம் அகஸ்தியீஸ்வரசுவாமி தேவஷ்தானக் குறுக்கள் ஸ்தானீகன் யெளுதிவிச்ச வரலாறு

**கைபீது**

(டி. 3322)

1. பூற்வத்தில்,

ஆதிகாலத்துலே, ஸ்ரீகைலாச பறுபதத்திலே பறம்பரையாய் பறாசத்தியாயி, சிறசக்கித்தியாய், னாதவிந்துவாயி, யிருளொளி விளியாய், திகம்பரையாய், தூலையாய், சூட்சுமியான காரணியாய் மனோன்மனியாயி, மயேசுவரியாய், ருத்திரியாய், லட்சுமியாய், சறசுவதியாய், வல்லபையாயி, சடாதார திகம்பறியாயி, யிச்சா சத்திகிறியாய், சத்திஞான சத்தியாய், வாலைபுவனை திரிபுரையாய் யெங்கெங்குந் தானாய் எவ்வுயிற்க்கு மாதாரமாய் யிறுக்கப்பட்ட பொறுளாயி பறுவதத்திலே உற்ப்பவிக்கப்படானின்ற பாற்வதிக்கும் பொருவிலதாய், வியத்தமாய், அளிவன்றிப் புனிதமாயி, அனந்த மாய் யாறுக்கும் தெரிவறிதாகி யெங்கணும் முகமாயிச் சிறப்புடன் யெவற்றினிக்கும் ணிறைந்த கருதறும் பெறுளாயி, மயேச்சுரந் தானான காறணமாயி சதாசத்தாய், பெறுகுவலிதாய், தம்முயிற் பிறகு . . . பிறதானமாயி, சத்தப் பச்செ ரூப ரெச கெந்த விடைய மோரைந்தாய், தாளந்திடு விடையவமோரைந்தாய், சீத்தமீறாய் கரணனாங்காய் கருமேந்திரிய ஞானேந்திரியமாயி ஒன்றாய், சகலமா பேரொளியாய், வெருவெளியாய், தன்னைத்தானே யுரைவ தாய், தன்னைத்தான் பணிகொள்வதாய், யாறுக்கு முன்னையிதாயி

---

1. காங்கேயம்-பெரியார் மாவட்டத்திலுள்ள ஊர்; பாடியூருக்கும் வெள்ளக்கோயிலுக்கும் இடையே உள்ளது;

பிறமமாய், சிவமாய், முதலேகு அந்த மீறில்லதாய் முகணே முக்காலம் அல்லதுவாய், வாக்கொடு மணதொடர்வரிதாய் யிப்படி யனேக பற்ப்பல விதங்களாயி யேகவச்துவாய், யிறுக்கப்படானின்ற பரமேசுவரருக்கும் திருக்கலியாணம் நடக்கும்படியாயி, பிரம்மா, விட்டுணு சனக்சனந்தன் சனாதன சனற்க்குமாரர் முதலான முப்பத்தி முக்கோடி தேவர்களும் னாற்ப்பத்தெண்ணாயிரம் றிஷிகளும், தும்புருனாரதற், சின்னரர், கிம்ப்புருஷ நித்த வித்தியா தரர் சகலமான பேரும் ஸ்ரீ கைலாச கிரியிலே எழுநந்தருளிய காலத்திலே தென்பூமிக்குப் பாரமில்லாத படியநாலேயும் பிரம்மா முதலாகிய தேவக்கள் ரிஷிகளையும் பாத்து, தென்பூமி னிலைக்கும் படியாய் ஆலோசனை பண்ணும் தறுணத்தில் வேதவேதாந்த சாரராகிய விதாண கனம் பொருந்திய சறுவிக்கியனா யிறுக்கப் பட்ட அகஸ்திய மா யிரிஷியை, தெட்சணதிக்கில் மகாமேறுவுக்கு ஒப்பாயி யிறுக்கப்படானின்ற பொதியாசலத்துக்கு யெளுந்தறுளும் படி செயிதால் தென்பூமி நிலைக்கும் மென்று திறுவருள் செயிகயில்,

2. அகஸ்திய மாரிஷியும் ரிஷபகேதனனாய் யிறுக்கப்பட்ட பறமேசுவரனெத் தோத்திரஞ் செயிது, தேவர் திறுக்கலியாண சம்பறமசந்தோஷமும் திறுமணக்கோலமும் பார்த்து. கிறுதார்த்தா னாக வேணுமென்று விண்ணப்பம் செய்யும் மளவில், துவாத சாந்தத் தலமா யிறுக்கப்படானின்ற மதுரையில், பாண்டிய குமாரியான மீனாட்சியை பாணிகிறஅமம் செய்ய வருகுறோம்; அப் போது உம்முட மனது அபீச்ட்டம் னிறவேறும்படியாய், திறுக் கலியாணம் மணக்கோலம் காட்சி தருகுரோமென்று திருவளம் பற்றி சடாபாரத்துலே யிறுக்கப்பட்ட கெங்கா பவானிய்யை கமண்டலத்துலே... அனுக்கிறகஞ் செயிதபடிக்கு.

3. அகஸ்திய ரிஷியும் தெட்சண திக்கு னோக்கி வருகுற மாற்க்கத்தில் புண்ணிய க்ஷேத்திரமான கன்னியாகுமரித் தீவில், திராவிட தேசத்தில் கொங்கு மண்டலத்தில் ஆம்பறாவதி காஞ்சி

---

வேதாந்த ரகசிய விதான - வேதாந்தத்தின் இரகசியங்களை விளக்கவல்ல (அகத்தியர்)

2. பாணிகிறஅமம் – பாணிக்கிரகணம் – திருமணம்; அபீச்ட்டம் - விருப்பம்;

மானதி மத்தியில் செண்பக வனசேக்ஷத்திரமவ் விடத்தில் மதினா விசாரமாயி வறுகுறதெ கண்டு, குமாரக் கடவுளாகிய சுப்பிற மண்ணியற் அகஸ்திய முனி ரிஷிக்கு பரிபக்குவ சிஷியனாகும் படிக்கு உபதேசத்து ......... சிவனதை தொழுவென்று சொன்ன யிடமான படியநாலே, ஆறுதோறும் ...மொரு கிறாமத்துக்கு பேற் வரப் பட்டது.

4. அதுக்கு முத்திர பாகத்தில், வந்து க்ஷேத்திரத்தில் சிவ லிங்க பூசை செயித படியநாலே பாகீரதி தீற்த்தமென்றும், ஷெண்பகவனமென்றும், ஷெண்பகாபுரமென்றும் அகஸ்தீஸ்வர ரென்றும் அகிலாண்டம்மனென்றும் பேற் வரப்பட்டது.

பிற்க்காலத்தில், சூரபிறுமா சூரன் அனேகம் தபசு பண்ணி, அனேகவரம் பெற்று. யிரணூற்றிருபத்தினாலு புவனமும் ஆண்ட காலத்துலே, சிங்கமுகாசூரனானவன், வீரமயேந்திரபுரிக்கு வருகுற போது ரிஷித்துல்லியமா யிறுக்கப்பட்ட யிச்செண்பகவன க்ஷேத்திரதில், அகஸ்திய சுவாமியெயும் அகிலாண்டயீசுவரியெயும் தெரிசினம் செயிது தன்னபேரால் சிங்கபுரமென்று பேற் விளங்கத் தக்கதாக நகர் உண்டாக்கி அவன்பேரால் வெளங்கப்பட்டது.

5. அதுக்கு பிற்ப்பாடு சுப்பிறமண்ணியற் சூரசம்மாரம் பண்ணி, சிங்கமுகாசூரனையும் சம்மாரம் பண்ணி, சிவன்மலை யெண்ணப்பட்ட பருவதத்தில் வள்ளியம்மனெ காந்திருவ விவாகம் செய்யத்தக்கதாக யெழுந்தருளிய காலத்தில் சிங்கபுரமெங்குர பேரை அளித்து, தம்முட பேரால் காங்கயமென்றும், காங்கய னாடென்றும் பேற் வரப்பட்டது.

கெறத்தா யுகத்தில், அகஸ்தியற் பூசை பண்ணுகையால், ஷெண்பகவனமும் பாகீரதி தீற்த்தமும், செண்பகபுரமும், அகஸ்தீசு வரமும் அகிலாண்டேசுவரியும் மானவற்.

தெறேதாயுகத்தில், யிந்திரன் பூசை பண்ணுகையால் யிந்திர தீற்த்தமும் அகிலாண்டபுரமும் வில்வனமும் அகஸ்தீசுவரரும் அகிலாண்டேசுவரியும் மானவர்,

துவாபரயுகத்தில், சிங்கமுகாசூரன் அற்ச்சித்தபடியநாலே சிங்கபுரமென்றும், சிங்க அகஸ்திசுவரரென்றும் திவ்விய அகிலாண் டேசுவரியமானவர்.

கலியுகத்தில், சுப்பிரமண்ணியற் பூசை பண்ணுகையால் காங்கய மென்றும், செண்பக வனமென்றும், செண்முக தடா மென்றும், அகஸ்திசுவரறும் அகிலாண்டேசுஸ்ரியமானவர்.

5. யிப்படி அனேகம் சதுறுயுகம் பூசை கொண் டருளிய தேவற்கள்......யென்று யெங்கள் பாரம்பரையிலே அரியப்பட்டது கூறும் புறாணத்துலே திறுக்கலியாண அத்தியாத்துலே யிந்த விளக்கமும் கந்தபுராணத்தில் சிவன்மலை, தலபுறாணத்துலேயும் தகவலா யிறுக்குது யென்று யெங்கள் பாரம்பரையிலே அறியப் பட்டது.

மேலே யெளுதிய கலம்ங்களுக்கு தகவலா யிறுக்கப்பட்ட தம்பிற சாசனம் முதலானது ஆதரவுகள் யெல்லாம் கலாந்திரங் களிலே கைசோந்து போய்விட்டது.

குருக்கள் ஆலாலசுந்தரபண்டித ஒப்பிதம்.

இந்தப்படிக்கு தானீகர் நாகயன் ஒப்பிதம்.

முற்றும்

---

5. தம்பிற – தாமிர; கலாந்திரங்களிலே – காலாந்திரங்களிலே – கால அடைவில்; கைசோந்து – காணாமல்;

